# நாளுக்கு நாள்
# அதிக ஆரோக்கியமான
# தெளிவுள்ள சருமம்

ரெக்ஸோனாவிலிருக்கும் 'கேடில்' உங்கள் சருமத்தை அதிக தெளிவுடையதாகவும், அழகுடையதாகவும் செய்யும். தினமும் இருமுறை இச்சோப்பினால் கழுவுங்கள்.




# ரெக்ஸோனா

'கேடில்'* கலந்த சோப்
இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

RP. 86-50 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

# கல்கி பொருளடக்கம்

மலர் 12 | 1952 டிசம்பர் 7 | நந்தன ௵
இதழ் 19 | | கார்த்திகை 22



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ்:

9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

## எங்கள் மாத சீட்டுகள்

நவம்பர் மாத சீட்டு வரிசையில் இடம்பெறாத பல நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி துவக்கியிருக்கும்

### டிஸம்பர் மாத சீட்டு வரிசை

(4வது ஞாயிறு ஏல வரிசை)

சந்தா செலுத்த கடைசி தேதி: 20 - 12 - 52

முதல் ஏலத் தேதி : 28 - 12 - 52

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 100/- | ரூ. 3000/- |
| D | ரூ. 50/- | ரூ. 1500/- |
| E | ரூ. 25/- | ரூ. 750/- |
| F | ரூ. 20/- | ரூ. 600/- |
| G | ரூ. 15/- | ரூ. 450/- |
| H | ரூ. 10/- | ரூ. 300/- |
| 30 சந்தாதாரர்கள் | — | 30 மாதங்கள் |

புரியும் வண்ணம் விலாசத்தை எழுதி விண்ணப்பித்துக் கொள்பவர்களுக்கு, கம்பெனியின் நிபந்தனைகள் இலவசமாக அனுப்பப்படும். ரூ. 25/-க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் பேரில் செக் பெற்றுக் கொள்ளப்படும். குறைந்த தொகைகளை மணியார்டர், போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். இந்த சந்தர்ப்பத்தை தவறாமல் உடனே விண்ணப்பிக்கவும்.

(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்

தந்தி: 'KALLIFUNDS'




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 19

# சாஞ்சிக் குன்றில் அன்பு ஒளி

மத்திய பாரதப் பிரதேசத்தில் உள்ள சாஞ்சி க்ஷேத்திரத்தில் சென்ற ஞாயிற்றுக்கிழமை நிகழ்ந்த புனித வைபவம் பாரத நாட்டுக்கு மாத்திரமல்ல, இந்தப் பூவுலகத்துக்கே முக்கியமானது. சாஞ்சிக் குன்றிலே அமைக்கப்பட்டுள்ள விஹாரத்தில் அன்று புத்த பிரானின் பரம சீடர்களான சாரி புத்தர், மகா மொகலன்னர் இவர்களின் சின்னங்கள் மீண்டும் பிரதிஷ்டை செய்யப்பட்டன.

தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன் மேற்படி சின்னங்களைப் பிரிட்டிஷார் சாஞ்சிப் பிரதேசத்திலிருந்து எடுத்துச் சென்று இங்கிலாந்தில் உள்ள கண்காட்சி சாலையில் வைத்திருந்தனர். இந்திய மகா போதி சங்கத்தின் பெரு முயற்சியால் அந்தச் சின்னங்கள் இப்போது யதாஸ்தானத்துக்கே திரும்பி வந்து விட்டன.

சாஞ்சியில் நடந்த மேற்படி வைபவத்தில் இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு, உப ஜனாதிபதி சர் ராதாகிருஷ்ணன், பர்மா பிரதமர் தக்கின் நூ, இலங்கை உள்நாட்டு மந்திரி ஸ்ரீ ரத்னயகா உள்பட இலங்கை, பர்மா, தாய்லந்து, ஜப்பான் முதலிய பல நாடுகளிலிருந்தும் விஜயம் செய்துள்ள இருநூறு பௌத்த பிக்ஷுக்களும் சுமார் ஐம்பதினாயிரம் பக்தர்களும் கலந்து கொண்டார்கள்.

புத்த பகவானின் அரிய உபதேச மந்திரங்களான சத்தியம், அன்பு, சகிப்புத் தன்மை, ஜீவகாருண்யம் இவற்றின் பெருமையைப் பல பிரமுகர்களும் மனம் உருகி மக்களுக்கு எடுத்துக் கூறினார்கள்.

* * * *

யுத்தத்தைத் தடுத்து, உலகத்தில் சமாதானத்தை நிலை நிறுத்துவதற்காகச் சர்வதேச அரசியல் மேடையில் இந்தியப் பிரதிநிதிகள் செய்து வரும் பெரு முயற்சிக்குச் சாஞ்சியில் நிகழ்ந்த வைபவம் ஆக்கம் அளிக்க வல்லது என்று கூறலாம்.

மகாராஜனின் குடும்பத்தில் ஜனித்த கௌதம புத்தர் ராஜ்யாதிகாரத்தையும் சுக போகங்களையும் துறந்தார். மானிட வர்க்கத்துக்குத் தொண்டு செய்வதையே தமது வாழ்வின் லட்சியமாகக் கொண்டார். மானிட சமூகத்தை அல்லல் படுத்தி வந்த வறுமை, பிணி, துன்பம், துவேஷம் முதலிய கொடுமைகளைத் தம்முடைய புனிதமான உபதேசங்களால் அகற்ற முயன்றார்.

போரில் மகத்தான வெற்றி பெற்ற அசோகர் சக்கரவர்த்தி, புத்த முனிவரின் உபதேசங்களால் மயக்கம் தெளிந்து, போரில் ஏற்பட்ட உயிர்ச் சேதத்தைக் கண்டு கண்ணீர் வடித்தார். பிறகு ஆயுதங்களைத் தூர எறிந்துவிட்டு, அன்பு வழியைப் பின்பற்றி, அமைதியை நிலை நிறுத்த அரும்பாடு பட்டார்.

புத்த பகவானின் காலத்தில் உலக மக்களில் மூன்றில் ஒருவர் விகிதம் பௌத்த மதத்தைத் தழுவினார்கள் எனில், அவரது உபதேசங்கள் எவ்வளவு தூரம் மானிட வர்க்கத்தின் மனத்தைக் கவர்ந்திருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

அன்று உலகத்தின் பெரும் பகுதியில் வெற்றிக் கொடி நாட்டிய அசோகர் சக்கரவர்த்தி ஆயுதங்களைத் துறந்ததுபோல், இரண்டாவது உலக மகா யுத்தத்தில் வெற்றி பெற்ற வல்லரசுகள் ஆயுதப் பரிகரணம் செய்ய முற்பட்டிருக்குமாயின், உலகம் இன்றுள்ள பயங்கரமான நிலைமைக்கு வந்திராது.

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன், அதாவது பட்டணங்களுக்கும் பொது ஜனங்களுக்கும் அழிவு ஏற்படாமல் போர்கள் நிகழ்ந்த அக்காலத்திலேயே அசோகர் சக்கரவர்த்தியினால் போரின் வெறியையும் கொடுமையையும் சகிக்க முடியவில்லையெனில், ஹைட்ரஜன் குண்டு சகாப்தத்தில் சிக்கிக் கொண்டுள்ள இன்றைய உலகத்தைப் பற்றி என்ன சொல்வது!

அன்பும் கருணை உள்ளமுமே மானிட வர்க்கத்தை உய்விக்க முடியும் என்பதைப் புத்த பகவான் உலகத்துக்கு உபதேசித்தார். அவரது முக்கிய சீடர்களான சாரி

புத்தரும், மகா மொகலன்னரும் அந்த உபதேசத்தின் உதாரண புருஷர்களாக விளங்கினார்கள்.

ஆயுத வழியைத் துறந்து அன்பு வழியினால் ராஜ்யத்தை ஆட்சி புரியலாம் என்பதற்கு அசோகச் சக்கரவர்த்தி உதாரணமாகத் திகழ்ந்தார்.

சமீபத்தில் காந்தி மகான் அதே அன்பு வழியைப் பின் பற்றி, மகத்தான சுதந்திரப் போரில் மாபெரும் வெற்றியைக் கண்டார்.

புத்த பகவானின் அரிய உபதேசமே பாரதத் தாயின் மணிக் கொடியில் அசோகச் சக்கரமாக உருப் பெற்றுத் திகழ்கிறது.

“தனிப்பட்டவர்களின் பிரச்னைகளாயினும் சரி, சர்வதேசப் பிரச்னைகளாயினும் சரி, அவற்றைத் தீர்ப்பதில் புத்த பகவான் அருளிய அன்பு, சகிப்புத் தன்மை, கருணை ஆகிய சித்தாந்தங்களைப் பின்பற்ற வேண்டும்” என்று நேருஜி சாஞ்சி வைபவத்தின் போது குறிப்பிட்டார்.

நடுக் கடலிலே தவிக்கும் மாலுமிகளுக்கு வழி காட்டும் கலங்கரை தீபத்தைப் போல், சாஞ்சிக் குன்றின்மேலே சுடர் விடும் அன்பு ஒளி பகை, துவேஷம், போர் வெறியாகிற கடலில் தத்தளிக்கும் உலக மக்களுக்கு வழி காட்டி உய்விக்குமாக!

# அழுத பிள்ளைக்கு அழுகல் வாழைப்பழம்

அடாடா! ஏழைக் கைத்தறியாளரின்மீது இந்திய சர்க்காரின் தொழில் இலாகாவுக்குப் பிறந்த கருணையை என்னவென்று சொல்லுவது!

பசிக்கிறது என்று அழுகிற குழந்தைக்கு அழுகல் வாழைப் பழத்தைக் கொடுக்கும் கருணைதான்!

உரித்துப் பார்த்து விட்டு ‘அழுகல்’ என்று ஏமாந்தால் ஏமாறட்டும்! தரித்திரம் பிடித்த பிள்ளை எதற்காக அழுதது! அழுகல் வாழைப் பழத்தைக் கொடுத்துத்தான் அதைத் தண்டிக்க வேண்டும்!......

கைத்தறித் தொழிலுக்கு உதவி செய்வதாகச் சொல்லிச் சென்ற வாரத்தில் இந்திய சர்க்கார் பிறப்பித்திருக்கும் உத்தரவு அந்தமாதிரி ஆசை காட்டி மோசம் செய்யும் காரியமாயிருக்கிறது! உண்மையில் கைத்தறித் தொழிலுக்கு அதனால் உதவியும் இல்லை; பாதுகாப்பும் இல்லை.

கரை போட்ட வேஷ்டி நெசவைக் கைத்தறிக்கென்று ஒதுக்கி வைக்க வேண்டும் என்று சென்னைச் சட்டசபை கேட்டுக் கொண்டது. தேசம் முழுவதிலும் உள்ள மூப்பது லட்சம் கைத்தறித் தொழிலாளர்கள் அந்தக் கோரிக்கையை வற்புறுத்தினார்கள். அதனால் தங்களுக்குச் சிறிய உதவி கிடைக்கலாம் என்று நம்பினார்கள். பொது ஜன அபிப்பிராயமும் அந்தக் கோரிக்கையைத் தீவிரமாக ஆதரிப்பதாகத் தோன்றியது.

அதன்பேரில் இந்திய சர்க்கார் மனமுவந்து முன்வந்து “ஆலைகளில் 1951-ம் ஆண்டில் உற்பத்தியான கரைபோட்ட வேஷ்டிகளின் அளவில் 100-க்கு 60 பங்குதான் இனி உற்பத்தி செய்யலாம்” என்று உத்தரவு போட்டிருக்கிறார்கள்.

“கைத்தறியாளர்களுக்காகவே இந்த உத்தரவைப் போட்டிருக்கிறோம். பாக்கி 100-க்கு 40 வீதம் கரைபோட்ட வேஷ்டியைக் கைத்தறிக்கே ஒதுக்கியிருக்கிறோம்” என்று விளக்கமும் தந்திருக்கிறார்கள்.

வெளிப்பார்வைக்கு இந்த உத்தரவு ஏதோ கைத்தறிகளுக்கு ஓரளவு உதவி செய்யும் உத்தரவு என்பதாகத் தோன்றுகிறதல்லவா!

உண்மையில், அவ்விதம் இல்லை. ஆலைகளுக்கு உதவி செய்யும் உத்தரவே யாகும்.

சென்ற ஆண்டில் ஆலைகள் கரை போட்ட வேஷ்டிகளை மிதமிஞ்சி உற்பத்தி செய்தன. அதன் பயனாக, விற்பனையாகாமல் சரக்கு தங்கிப் போயிற்று. எனவே, ஆலைகளோ இவ்வருஷத்தில் கரைபோட்ட வேஷ்டி உற்பத்தியைக் குறைக்கத் தொடங்கி யிருக்கின்றன.

1951-ம் வருஷத்தில் மாதம் ஒன்றுக்கு ஐம்பதினாயிரம் கட்டுக்கள் வீதம் உற்பத்தி செய்து வந்தன. இந்த வருஷத்தில் நாற்பதினாயிரம் கட்டுக்களாகக் குறைத்துக் கொண்டிருக்கின்றன.

பெரிய தொழில்களை நடத்தும் முதலாளிகள் சில சமயம் தங்களுக்குள் கட்டுப்பாடு செய்து கொள்வார்கள். தேவைக்கு அதிகமாகச் சரக்கு உற்பத்தியாகி அதனால் விலை குறைக்க நேருவதை அவர்கள் விரும்புவதில்லை. ஆகையால் உற்பத்தியை அவர்களே கட்டுப்படுத்திக் கொள்வார்கள். இதற்குச் சில சந்தர்ப்பங்களில் சர்க்காரின் உதவியையும் நாடிப் பெறுவார்கள்.

அவ்விதம் ஆலை முதலாளிகள் உதவி கோரும் நிலைமையில் சர்க்காரே முன்வந்து 1951-ம் வருஷத்து உற்பத்தியில் 100-க்கு 60 வீதம் என்று ஆலைகளின் வேஷ்டி உற்பத்தியைக் கட்டுப்படுத்தியிருக்கிறார்கள். அதாவது ஏற்கெனவே ஆலைகள் உற்பத்தியைக் குறைத்திருப்பதை உத்தரவு மூலம் ஊர்ஜிதப் படுத்தியிருக்கிறார்கள்.

ஆகவே, ஆலைகளுக்குத்தான் இந்த உத்தரவினால் நன்மை. தங்கிப்போன சரக்கை விலை குறைக்காமல் தள்ளி விடுவதற்கு இது உதவி செய்யும். இனிமேலும், கரை போட்ட வேஷ்டிகளுக்கு நாட்டில் எவ்வளவு கிராக்கி உண்டோ, அவ்வளவு மட்டில் உற்பத்தி செய்து நிறுத்திக் கொள்வதற்கும் உதவி செய்யும்.

கைத்தறித் தொழிலுக்கு இதனால் எந்தவித நன்மையும் கிடையாது; ஆனால் தீமை உண்டு.

“ஓர் அருமையான சந்தர்ப்பத்தைக் கொடுத்தோம்; அதைக் கைத்தறிகாரர்கள் பயன்படுத்திக் கொள்ளவில்லை!” என்று சில மாதத்திற்குப் பிறகு சொல்லிக் காட்டலாம் அல்லவா!

“அருமையான வாழைப் பழத்தைக் கொடுத்தேன். அந்தத் துஷ்டப் பையன் அதைச் சாப்பிடாமல் எறிந்து விட்டான்!” என்று சொன்னால், கொடுத்தது அழுகல் வாழைப் பழம் என்று தெரியாதவர்கள் நம்பக் கூடும் அல்லவா!

* * *

வேஷ்டி உற்பத்தியை முழுதும் கைத்தறிக்கு ஒதுக்கி வைப்பதற்கும், அரை குறையாக ஒதுக்கி வைப்பதற்கும் ரொம்ப வித்தியாசம் உண்டு. கிணற்றை முழுதும் தாண்டுவதற்கும், பாதிக் கிணறு தாண்டுவதற்கும் உள்ள வித்தியாசந்தான். முழுக் கிணறு தாண்டினால் உயிர் தப்பிப் பிழைக்கலாம். பாதிக் கிணறு தாண்டினால், அரை வாசி உயிர் தப்ப முடியுமா! முடியாது.

சம்பா நெல் பயிரின் காலம் ஐந்து மாதம். அதாவது நடவு நட்டு ஐந்தாவது மாதத்தில் பயிர் அறுவடை செய்யலாம்.

நடவு நட்டு இரண்டரை மாதத்தில் அறுவடை செய்தால், என்ன கிடைக்கும்! நெல்லுக்குப் பதில் புல்லுத்தான் கிடைக்கும். “பாதி நெல் ஏன் கண்டு முதல் ஆகவில்லை!” என்று கேட்கிற புத்திசாலியைப் பற்றி என்ன சொல்வது!

கரைபோட்ட வேஷ்டியை முழுதும் ஒதுக்கி வைத்தால், கைத்தறிகாரர்கள் ஒரு துறையிலா

## கிரிக்கெட்டில் யாருக்கு வெற்றி?













வது ஆலைகளின் போட்டி பயமின்றி ஓரளவு கணிசமான துணி உற்பத்தி செய்யலாம்; அவற்றை இலகுவாக விற்றுப் பிழைக்கலாம்.

அரை குறையாக ஒதுக்கும்போது ஆலை முதலாளிகள் போட்டியிட்டுக் கைத்தறித் தொழிலை அழிக்கத்தான் பார்ப்பார்கள். வேண்டுமென்று விலையைக் குறைத்து விற்பார்கள். மலிவான நூலை யெல்லாம் தாங்கள் வைத்துக் கொண்டு ஒப்புக்கு இரட்டி விலையான நூலைக் கைத்தறிகாரர்களின் தலையிலே கட்டுவார்கள். பிறகு, "பார்த்தீர்களா! ஆலைத் துணி எவ்வளவு மலிவாயிருக்கிறது! கைத்தறித் துணி எவ்வளவு கிராக்கியாயிருக்கிறது!" என்பார்கள்.

கைத்தறித் தொழில் அழிந்த பிறகு மறுபடியும் ஒட்டிக்கு இரட்டியாக விலையைத் தூக்கி விற்றுப் பழைய நஷ்டத்தையும் ஈடுசெய்து கொள்வார்கள்.

* * *

"ஆலைகளின் போட்டியில்லாமலே விட்டு விட்டால், கைத்தறித் துணி விலை ஏறிவிடாதா! பொது ஜனங்கள்—வேஷ்டி உடுத்துவோர் அநியாயமாய் நஷ்டம் அடைவார்களே!" என்று ஒரு வாதம் சொல்லப்படுகிறது. இது முற்றிலும் அபத்தமான வாதம்.

ஏனெனில், கைத்தறித் தொழிலுக்கு ஒரு ரகத் துணிகளை ஒதுக்குவதனால், போட்டியேயில்லாமற் போய் விடாது!

வேஷ்டி நெசவு செய்யும் லட்சக்கணக்கான கைத்தறிகள் அவ்வளவும் ஒன்றுக்கொன்று போட்டி என்பதை ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

பெரும் பணக்காரர்களான ஆலை முதலாளிகள் ஒரு சிலர்தான். அவர்கள் பின்னால் வரும் லாபத்தைக் கருதி. கோடிக் கணக்கில் நஷ்டம் அடையக் கூடத் தயாரா யிருப்பார்கள்.

கைத்தறிகாரர்கள் நெய்த துணியை ஒரு வாரத்துக்கு மேல் வைத்திருந்தால், அவர்களால் தாக்குப் பிடிக்க முடியாது. அடுத்த வாரம் வேலையின்றிப் பட்டினி கிடக்க நேரிடும்.

ஆகையால் கைத்தறிகாரர்கள் சரக்கை முடக்கி வைக்க முடியாது. விலையை அளவில்லாமல் உயர்த்தவும் முடியாது. அன்றாடக் கூலி கிடைத்தால் போதும் என்று துணியை விற்பதற்கு முன் வருவார்கள். லட்சக் கணக்கான தறிகாரர்கள் இப்படித் தனித் தனியே நெய்த துணியை விற்பதற்கு அவசரப் படும்போது, அவர்கள் கொள்ளை லாபம் சம்பாதிப்பது எப்படி! அந்தப் பயம் வேண்டியதே யில்லை.

* * *

கைத்தறித் துணி ஆலைத் துணியைவிட இப்போது சிறிது விலை கூடுதலாக இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன தெரியுமா! கைத்தறிகாரர்களின் பேராசையல்ல. ஆலை முதலாளிகளின் பேராசையும் சூழ்ச்சியும் இந்திய சர்க்காரின் முன் யோசனையற்ற நிர்வாகமுந்தான்.

அதிக விலையுள்ள அயல் நாட்டுப் பருத்தியில் செய்த நூலை ஒட்டிக்கு இரட்டி விலை வைத்துக் கைத்தறிகாரர்களின் தலையில் கட்டுகிறார்கள்.

குறைந்த விலையுள்ள உள்நாட்டுப் பருத்தியில் செய்த நூலை மலிவான விலைக்குத் துணி ஆலை முதலாளிகள் எடுத்துக் கொள்கிறார்கள்.

எனவே, நூல் விலையை யொட்டிக் கைத்தறித் துணியின் விலையும் அதிகமாகி யிருக்கிறது.

கைத்தறிகாரர்களுக்குக் குறைந்த விலை நூல், ஆலையில் விற்கப்படும் விகிதத்துக்குக் கிடைத்தால், கைத்தறித் துணி ஆலைத் துணியைவிட மலிவாகக் கிடைக்கும்.

இதற்கு உடனடியாக ஏற்பாடு செய்வது இந்திய சர்க்காரின் பொறுப்பு; செய்யாமலிருப்பது கைத்தறித் தொழிலுக்குச் செய்யும் தீங்கு.

இவ்விதம், செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டு விட்டு, "கைத்தறித் துணி விலை அதிகமாயிருக்கிறது" என்று அறியாதவர்களோடு சேர்ந்து அரசாங்கத் தலைவர்களும் பழி சொல்லுவது, குதிரை கீழே தள்ளினது மல்லாமல் குழியும் பறிப்பது போன்ற காரியம்.

பாரதநாட்டின் கைத்தொழில்களில் மிகப் புராதனமான கைத்தொழில் கைத்தறித் தொழில். ஒருகாலத்தில் உலகமே பார்த்து வியக்கும்படியாக இருந்த தொழில். இன்றைக்கும் முப்பது லட்சம் குடும்பங்கள், ஜீவனத்துக்கு அத்தொழிலையே நம்பி யிருக்கின்றன.

இந்தியாவின் மிகப் புராதன கைத்தொழிலையும் முப்பது லட்சம் ஏழைக் கைத்தறியாளர்களின் குடும்பங்களையும் காப்பாற்றுவதற்கு இந்திய சர்க்கார் உடனடியாக முன் வர வேண்டும். சாக்குப் போக்குச் சொல்லிக் காலத்தை ஓட்டுவது முறையல்ல. "நூற்றுக்கு 40 சதவீதம் ஒதுக்கியிருக்கிறோம்" என்பது போன்ற அழுகல் வாழைப்பழ உத்தரவைப் போடுவது புண்ணிலே கோல் விட்டுத் துன்பத்தை அதிகமாக்குவதாகும்.

# ஆசையில் கல்லைப் போடு! அல்லது ஒரு கமிட்டியைப் போடு!

**ப**ழைய பிரிட்டிஷ் ஆட்சியில் அதிகார வர்க்கத்துக்குப் பிடிக்காத ஒரு காரியத்தை ஜனப் பிரதிநிதிகள் அதிகமாக வற்புறுத்தினால், பொது ஜனக் கிளர்ச்சி வலுக்கும்போல் தோன்றினால், ஒரு விசாரணைக் கமிட்டியைப் போட்டு அதிகார வர்க்கத்தார் நிலைமையைச் சமாளிப்பது வழக்கம்.

கமிட்டி போட்டாகி விட்டதென்றால், விஷயத்தை ஊறப் போட்டாகி விட்டது என்று அர்த்தம். ஜனங்களின் ஆசையில் கல்லைப் போட்டாகி விட்டது என்றே வைத்துக் கொள்ளலாம்.

அதேமாதிரி முறையை இப்போது இந்திய சர்க்காரும் கடைப்பிடித்து வருவது மிகவும் ஆச்சரியமான விஷயம்.

சென்ற ஒரு மாதத்தில் நாலு கமிட்டிகள் இந்திய சர்க்காரால் நியமிக்கப் பட்டிருக்கின்றன.

குடிசைக் கைத்தொழில் கமிட்டி ஒன்று பத்தொன்பது அங்கத்தினர்களுடன் நியமிக்கப் பட்டதைப் பற்றி முன்னமே எழுதி யிருக்கிறோம். அவர்களில் சிலருக்குக் குடிசைக் கைத்தொழில் என்றால் இன்னதென்றே தெரியாது. அந்த வரையில் நல்லதுதானே! அவர்கள் குடிசைக் கைத் தொழிலைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குச் செலவாகும் கால மெல்லாம் விஷயத்தை ஊறப்போட்டு வைத்திருக்க வசதியா யிருக்கும் அல்லவா!

சென்ற வாரத்தில் பதினேழு பேர் அடங்கிய இறக்குமதி ஆலோசனைக் கமிட்டி ஒன்றும், மற்றும் பதினேழு பேர் அடங்கிய ஏற்றுமதிக் கமிட்டி ஒன்றும் நியமனம் ஆகியிருக்கிறது!

இந்திய சர்க்கார் காரியாலயத்தில் ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் என்று சம்பளம் வாங்கிக் கொண்டு வேலை பார்ப்பவர்கள் எல்லாம் இந்த இறக்குமதி—ஏற்றுமதி விஷயத்தைக் கவனித்துக் கொள்ள மாட்டார்களா! இத்தனை நாளும் கவனித்து வரவில்லையா! புதிதாக முப்பத்து நாலு பேரைக் கமிட்டியில் போட்டு அவர்களுக்குப் போக்கு வரத்து செலவு செய்தால்தான் ஆலோசனை கிடைக்குமா! அப்படி வெளியாரின் ஆலோசனை அவசியம் வேண்டுமென்றால், பார்லிமெண்டு அங்கத்தினர்களைக் கொண்டு கமிட்டிகளை அமைக்கக் கூடாதா! வீண் செலவு ஏற்படாமலாவது இருக்குமே!

இதெல்லாம் போக, தேசத்தின் துணி உற்பத்தித் தொழிலின் சகல அம்சங்களையும் ஆராய்ந்து, ஆலைகளுக்கு எவ்வளவு உதவி செய்ய வேண்டும் கைத்தறிக்கு எவ்வளவு உதவி செய்ய வேண்டும் என்பதையெல்லாம் சாங்கோபாங்கமாக வரையறைத்துச் சொல்லுவதற்கு ஒரு கமிட்டி நியமனமாகி யிருக்கிறது. இதிலும் அங்கத்தினர்கள் தாராளமாகவே இருக்கிறார்கள். கணிசமான பிரயாணச் செலவு செய்து இந்திய சர்க்காரின் பண கனத்தைக் குறைக்கக் கூடியவர்கள்தான்.

"கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா!" என்பது பழமொழி. "குட்டிச் சுவரில் முட்டிக் கொள்ள வெள்ளெழுத்தா!" என்பது இன்னொரு முதுமொழி.

வேறு காரியங்களுக்கு ஒரு வேளை கமிட்டி ஓரளவு தேவையா யிருந்தாலும் இருக்கலாம். துணித் தொழிலைப் பற்றி விசாரிக்கக் கமிட்டி அவசியமே இல்லை. இந்தத் தொழிலைப் பற்றிய சகலமான விவரங்களும் ஏற்கெனவே சர்க்கார் கைவசம் இருக்கின்றன. எத்தனையோ கமிட்டிகள், கமிஷன்கள் விசாரணை செய்து அறிக்கைகளும் அனுப்பி யிருக்கின்றன.

கைத்தறித் தொழிலுக்குப் பாதுகாப்பு அளிக்கும் தெளிவான காரியத்துக்கு விசாரணைக் கமிட்டிதான் என்னத்திற்கு! விளக்குமாற்றால் விளக்கும் கமிட்டிதான் என்னத்திற்கு!

காலந் தாழ்த்திக் கண்ணைத் துடைத்துக் காரியத்தை உருப்படாமல் அடிக்கும் நோக்கம் இருந்தால்தான் கமிட்டியும் விசாரணையும் தேவை.

* * *

**ப**ண்டித நேரு சென்ற வாரத்தில் நம்மவர்களின் அயல் நாட்டுப் பிரயாண மோகத்தைப் பற்றிச் சக்கைப் போடு போட்டார். "ஓயாமல் ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் போய்க் கொண்டே யிருக்கிறார்கள். கையெழுத்துப் போட்டுப் போட்டு எனக்கு அலுத்து விட்டது. ஆனால் போய்த் திரும்பி வருகிறவர்களால் தேசத்துக்கு ஒரு பயனும் இல்லை!" என்று சொன்னார்.

நாலைந்து வருஷ அநுபவத்துக்குப் பிறகு ஜவாஹர்லால்ஜிக்கு இந்த விஷயம் மனதில் பட்டிருப்பதைப்பற்றி மகிழ்ச்சி அடைகிறோம்.

ஓயாமல் கமிட்டிகளை நியமித்துக் காலத்தையும் பொதுப் பணத்தையும் வீணாக்கும் காரியம் எவ்வளவு அபத்தமானது என்பதையும் ஜவாஹர்லால்ஜி விரைவில் உணர்ந்து, விசாரணைக் கமிட்டிகள் நியமனத்துக்கும் ஒரு முற்றுப் புள்ளி வைத்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும்.

# 'பட்டினிச் சாவு' கூக்குரல்!

விந்தியப் பிரதேசம் ஒரு 'ஸி' வகுப்பு இராஜ்யம். அங்கிருந்து விந்தையான செய்தி ஒன்று சில தினங்களுக்கு முன்னால் வந்தது. ஒரு மனிதன் பட்டினியால் செத்துப் போனதாகப் புகார் கிளம்பிற்று. பத்திரிகைகளிலும் பொதுக் கூட்டங்களிலும் காங்கிரஸ் எதிரிகள் அச்சம்பவத்தைக் குறித்து வெளுத்து வாங்கினார்கள். விந்தியப் பிரதேசச் சட்டசபையிலும் அதைப்பற்றிக் கேள்விகள் போட்டார்கள்.

சம்பந்தப்பட்ட மந்திரி புகாரைப் பற்றிய உண்மையை அறிய விரும்பினார். பட்டினியால் இறந்ததாகச் சொல்லப்பட்ட மனிதன் வீட்டுக்கு விளம்பரப் படுத்தாமல் நேரில் சென்றார். வீட்டிலிருந்தவர்களை விசாரித்தார். "ஆமாம்; வீட்டுக்காரன் செத்துப் போனான்" என்றார்கள். "எதனால் செத்தான்!" என்று மந்திரி கேட்டார். "பட்டினியினால் செத்தான்" என்றார்கள். மந்திரி தம் அநுதாபத்தைத் தெரிவித்து விட்டு, வீட்டுக்காரனுடைய பிள்ளை குட்டிகளைப் பற்றி விசாரித்தார். பிறகு சட்டென்று, "செத்துப் போனவனுக்கு அந்தியக் கருமங்கள் செய்தீர்களா!" என்று கேட்டார்.

"ஆகா! செய்தோம்" என்றார்கள்.

"கருமாந்தரத்துக்கு உற்றார் உறவினர் வந்திருந்தார்களா!"

"ஆம்; வந்திருந்தார்கள். ஐம்பது பேர் வரையில் வந்திருந்தார்கள்."

"எல்லாருக்கும் விருந்து வைத்துத்தானே அனுப்பினீர்கள்!"

"ஆமாம்; பின்னே சும்மா அனுப்புவோமா!"

"கருமாந்தரத்துக்கு ஐம்பது பேருக்கு விருந்துச் சாப்பாடு போடத் தானியம் இருந்திருக்கிறதே! பின்னே, வீட்டுக்காரன் எதற்காகப் பட்டினியினால் செத்தான்!" என்று மந்திரி கேட்டார்.

செத்துப் போனவனைச் சேர்ந்தவர்கள் திரு திருவென்று விழித்தார்கள். பிறகு உண்மையைக் கூறினார்கள். "சிலபேர் வந்து 'பட்டினியினால் செத்ததாக'ச் சொல்லச் சொன்னார்கள். அதனால் அப்படிச் சொன்னோம். வியாதியினால்தான் வீட்டுக்காரன் இறந்தான்" என்றார்கள்......

விந்தியப் பிரதேசத்தில் மட்டும் அல்ல; நாடு முழுவதிலும் இவ்விதம் பட்டினிச் சாவுக் கூக்குரலிடும் அரசியல் வாதிகள் இருக்கிறார்கள். இந்தச் சென்னை இராஜ்யத்திலும் அவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். யாராவது எங்கேயாவது மூலை முடுக்கில் விழுந்து சாகமாட்டானா என்று கழுகு பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். உடனே "இதோ ஒரு பட்டினிச் சாவு!" என்று கூக்குரல் கிளப்புகிறார்கள். "காங்கிரஸ் இராஜ்யத்தில் இந்த அக்கிரமம் நடக்கிறதே! மக்களே! எழுங்கள்!" என்று அலறுகிறார்கள்.

காங்கிரஸை எதிர்க்க வேண்டுமென்றால் வேறு நாகரிகமான வழிகள் இல்லையா! அதற்காகப் பட்டினிச் சாவுகளைக் கற்பனை செய்ய வேண்டுமா!

ஓரிடத்தில் 'பட்டினிச் சாவு' நேரிட்டதும் உடனே இந்த அரசியல் வாதிகளுக்குத் தெரிந்து போகிறதே! அதை முன்னாலேயே தெரிந்து கொள்ளக் கூடாதா! ஒரு கவளம் அன்னமோ ஒரு குவளை கஞ்சியோ கொடுத்துப் பட்டினியால் சாகப் போகிறவனைக் காப்பாற்றக் கூடாதா!

அப்படிச் செய்ய மாட்டார்கள். செத்துப் போகிறவரையில் காத்துக் கொண்டிருந்து பிற்பாடுதான் கூ கூ என்று அலறுவார்கள்!

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வங்காளத்துப் பஞ்சத்தில் அறுபது லட்சம் ஜனங்கள் மடிந்து போனார்கள். ஸோவியத் ஆட்சியின் கீழ் ருஷியாவில் மூன்று கோடிப் பேர் பஞ்சத்தில் மாண்டு போனார்கள். சீனாவில் உள் நாட்டுப் போர் நடந்து கொண்டிருந்த நாட்களில் எத்தனையோ லட்சம் மக்கள் பட்டினியால் செத்தார்கள் என்பது உலக மறிந்த செய்தி.

பாரத நாட்டில் காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்ட பிறகு உணவில்லாமை காரணமாக ஒரு ஜீவன் கூடச் சாகவில்லை. மழையில்லாமையால் பஞ்சமும், அதிக மழையினால் வெள்ளப் பாழும் பல இடங்களில் நேர்ந்திருந்தும் மத்திய சர்க்காரும் சரி, மாகாண சர்க்கார்களும் சரி, அவ்வப்போது பிரம்மப் பிரயத்தனங்கள் செய்து மக்களைக் காப்பாற்றி வந்திருக்கிறார்கள்.

இந்த மாகாணத்தில் பஞ்சப் பிரதேசங்களில் ஆயிரக் கணக்கான கஞ்சி நிலையங்களை ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். ஆகையால் யாரும் பட்டினியால் சாவதற்கு முகாந்திரம் கிடையாது.

* * *

ஒரு விதத்தில் பார்க்கப் போனால், வியாதிகளினால் சாகிறவர்களும் முதுமையினால் சாகிறவர்களும் முடிவில் பட்டினியால் சாகிறார்கள் என்றே சாதித்து விட முடியும். நோயாளிக்குக் கடைசி காலத்தில் எந்த உணவும் ஒத்துக் கொள்வதில்லை. முதியவர்களுக்கும் அப்படியே. ஆகவே, காலமாவதற்கு முன்னால் அவர்கள் பட்டினி கிடக்க நேருகிறது. ஆகையால், எல்லாச் சாவுகளையும் 'பட்டினிச் சாவு' என்றே சொல்லிவிடலாம்.

மற்றப்படி உணவு கிடைக்காத காரணத்தினால் ஒருவன் பட்டினி கிடந்து இறந்தான் என்பது எளிதில் நம்பக் கூடியதே அல்ல.

இந்த நாட்டில் கருணை உணர்ச்சியும் தர்ம சிந்தையும் அவ்வளவாக வறண்டு போய்விடவில்லை.

மக்களின் தர்ம சிந்தனையும் கருணை உணர்ச்சியும் ஒருபுறம் இருக்கட்டும்.

பட்டினிச் சாவு நேர்வதைத் தடுப்பதற்கு ஏற்கெனவே சர்க்கார் கிராம நிர்வாகச் சட்டங்களில் விதி முறைகள் வகுக்கப்பட்டிருப்பதைச் சென்ற வாரத்தில் சென்னை சர்க்காரின் அறிக்கை ஒன்று ஞாபகப் படுத்துகிறது.

கிராமாதிகாரிகள் தங்கள் எல்லைக்கு உட்பட்ட பிரதேசத்தில் யாராவது உணவு கிடைக்காமல் பட்டினியால் சாகும் நிலைமை ஏற்படுமானால், அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கக் கூடாது. பட்டினிச் சாவைத் தடுப்பதற்கு உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும். அவசியமான உணவுப் பொருள் வாங்கிக் கொடுத்துக் காப்பாற்றிவிட்டுச் சர்க்காருக்கு அறிக்கை அனுப்பிச் செலவான தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். — இம்மாதிரி கிராம நிர்வாகச் சட்டத்தில் சொல்லியிருக்கிறது.

'பட்டினிச் சாவு' பற்றிய பொய்க் கூக்குரல்களைக் காங்கிரஸ் எதிரிகள் கிளப்பிக்கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் மேற்கண்ட கிராமாதிகாரிகளின் பொறுப்பைச் சென்னை சர்க்கார் ஞாபகப் படுத்தியது மிகப் பொருத்தமானது.

கிராமாதிகாரிகள் தங்கள் பொறுப்பை இந்த விஷயத்தில் நன்கு நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். பொதுமக்களும் அவர்களுடன் ஒத்துழைக்கக் கேட்டுக் கொள்கிறோம்.




அத்தியாயம் 21

## பல்லக்கு ஏறும் பாக்கியம்

அந்த ஆண்டில் வழக்கமாக மாரி காலம் ஆரம்பிக்க வேண்டிய காலத்தில் ஆரம்பிக்கவில்லை.

இரண்டு தடவை மழை தொடங்குவது போல் தொடங்கிச் சட்டென்று நின்று விட்டது.

காவேரி ஆற்றிலும் அதன் கிளை நதிகளிலும் தண்ணீர்ப் பிரவாகம் வர வரக் குறைந்து வந்தது.

புது நடவு நட்ட வயல்களுக்குத் தண்ணீர் வரத்து இல்லாமல் பயிர்கள் வாடத் தொடங்கின.

"எல்லாம் வால் நட்சத்திரத்தினால் வந்த விபத்து!" என்று மக்கள் பேசிக் கொள்ளலானார்கள்.

"நாட்டுக்கு எல்லா விதத்திலும் பீடை வரும் போலத் தோன்றுகிறது! இராஜ்ய காரியங்களில் குழப்பம்; இளவரசரைப் பற்றித் தகவல் இல்லை; அதற்கு மேல் வானமும் ஏமாற்றிவிடும் போலிருக்கிறது" என்பவை போன்ற பேச்சுக்களை வழி நெடுகிலும் சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கேட்டுக் கொண்டே வந்தார்கள்.

மழை பெய்யாமலிருந்தது அவர்களுடைய பிரயாணத்துக்கு என்னமோ சௌகரியமாகத் தானிருந்தது.

அன்று காலையிலிருந்து வெய்யில் சுளீர் என்று அடித்தது. பிற்பகலில் தாங்க முடியாத புழுக்கமாயிருந்தது. இராஜபாட்டையில் மரங்களின் குளிர்ந்த நிழலில் சென்ற போதே அவர்களுக்கு வியர்த்துக் கொட்டியது.

"இது ஐப்பசி மாதமாகவே தோன்றவில்லையே? வைகாசிக் கோடை மாதிரியல்லவா இருக்கிறது?" என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு போனார்கள்.

பழுவேட்டரையரின் அரண்மனைப் பல்லக்கு அவர்களைத் தாண்டிச் சென்ற சிறிது நேரத்துக்குப் பிறகு திடீரென்று குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது.

சாலை மரங்களின் இலைகள் காற்றில் அசைந்தாடிச் சலசலவென்ற சத்தத்தை உண்டாக்கின.

வடகிழக்குத் திக்கில் இருண்டு வருவது போலத் தோன்றியது.

வானத்தின் அடிமுகட்டில் இருண்ட மேகத் திரள்கள் தலைகாட்டின.

சிறிது நேரத்துக்குள்ளே அந்த மேகக் கூட்டங்கள் யானை மந்தை மதங்கொண்டு ஓடி வருவதுபோல் வானத்தில் மோதி அடித்துக் கொண்டு மேலே மேலே வரலாயின.

இளங்காற்று பெருங் காற்றாக மாறியது. பெருங் காற்றில் சிறிய மழைத் துளிகள் சீறிக்கொண்டு வந்து விழுந்தன.

சிறு தூற்றல் விழத் தொடங்கிக் கால் நாழிகை நேரத்தில் 'சோ' என்ற இரைச்சலுடன் பெருமழை கொட்டலாயிற்று.

காற்றிலும் மழையிலும் சாலை ஓரத்து விருட்சங்கள் பட்டபாட்டைச் சொல்லி முடியாது. சடசடவென்று மரக்கிளைகள் முறிந்து விழத் தொடங்கின. அப்போது அவற்றில் அடைக்கலம் புகுந்திருந்த பட்சிகள் கீச்சிட்டுக் கொண்டு நாலா திசையிலும் பறந்தோடின.

சாலையில் போய்க்கொண்டிருந்த ஜனங்களும் நாலாபுறமும் சிதறி ஓடினார்கள்.

காற்று மழையிலிருந்து தப்புவதற்காகச் சிலர் ஓடினார்கள். மரக்கிளைகள் தலையில் விழுந்து சாக நேரிடுமோ என்ற பயத்தினால் மற்றவர்கள் ஓடினார்கள்.

அண்ட கடாகங்கள் வெடிப்பது போன்ற இடி முழக்கத்தைக் கேட்டு அஞ்சி வேறு சிலர் ஓடினார்கள்.

மழை பிடித்துக் கொண்ட சிறிது நேரத்துக் கெல்லாம் பகற்பொழுது சென்று இரவு நெருங்கி வந்தது.

அன்றிரவே தஞ்சாவூர்க் கோட்டைக்குள் பிரவேசித்து விடவேண்டும் என்ற எண்ணத்தைச் சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கைவிட்டு விட்டார்கள்.

சேந்தன் அமுதனின் நந்தவனக் குடிலுக்கு அன்றிரவு போய்ச் சேர்ந்தால் போதும் என்று தீர்மானித்தார்கள்.

மழைக்கால இருட்டில் ஒருவரை யொருவர் தைரியப்படுத்திக் கொண்டு, ஜாக்கிரதையாக நடந்தார்கள்.

"பூங்குழலி! நடுக்கடலில் எவ்வளவோ புயல்களையும் பெரு மழையையும் பார்த்தவளாயிற்றே நீ! மலைபோன்ற அலைகளுக்கு மத்தியில் படகு விட்டுக் கொண்டு போகிறவள் ஆயிற்றே! இந்த மழைக்கு இவ்வளவு பயப்படுகிறாயே?" என்றான் சேந்தன் அமுதன்.

"நடுக்கடலில் எவ்வளவுதான் புயல் அடித்தாலும் மழை பெய்தாலும் தலையில் மரம் ஒடிந்து விழாதல்லவா? விழுந்தால் இடிதானே விழும்?" என்றாள் பூங்குழலி.

இவ்விதம் பூங்குழலி கூறி வாய் மூடுவதற்குள் அவர்களுக்கு எதிரே சற்றுத் தூரத்தில் சடசடவென்று மரம் முறிந்து விழும் சத்தம் கேட்டது.

சேந்தன் அமுதன் பூங்குழலியின் கையைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு மேலே செல்வதை நிறுத்தினான்.

"இனி அவசரப்பட்டுக் கொண்டு போவதில் உபயோகமில்லை. சாலை ஓரத்தில் இங்கே சில மண்டபங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றில் சிறிது நேரம் தங்கி மழையின் வேகம் குறைந்த பிறகு மேலே போகலாம்!" என்றான் சேந்தன் அமுதன்.

"அப்படியே செய்யலாம். ஆனால் மண்டபத்தை இந்த இருளில் எப்படிக் கண்டு பிடிப்பது?" என்றாள் பூங்குழலி.

"மின்னல் மின்னும்போது பார்த்தால் தெரிந்து விடும். இருபுறமும் கவனமாகப் பார்க்க வேண்டும்!" என்றான் சேந்தன் அமுதன்.

வானத்தையும் பூமியையும் பொன்னொளி மயமாக்கிக் கண்களைக் கூசச் செய்த ஒரு மின்னல் மின்னியது.

"அதோ ஒரு மண்டபம்!" என்றான் சேந்தன் அமுதன்.

பூங்குழலியும் அந்த மண்டபத்தைப் பார்த்தாள். அதே மின்னல் வெளிச்சத்தில் அவர்களுக்கு முன்னால் சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய மரம் விழுந்து கிடப்பதையும் பார்த்தாள். விழுந்த மரத்தினடியில் சிலர் சிக்கிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

"அமுதா! விழுந்து கிடந்த மரத்தைப் பார்த்தாயா? அதனடியில்..." என்றாள்.

"ஆமாம், பார்த்தேன். அந்தக் கதி நமக்கும் ஏற்பட்டுவிடப் போகிறது. சீக்கிரம் மண்டபத்துக்குப் போய்ச் சேரலாம்!" என்று கூறி விட்டு அமுதன் பூங்குழலியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு மண்டபம் இருந்த திசையைக் குறி வைத்து விரைந்து சென்றான்.

இருவரும் மண்டபத்தை அடைந்தார்கள். சொட்ட நனைந்திருந்த துணிகளிலிருந்து தண்ணீரைப் பிழிந்தார்கள். துணியைப் பிழிந்த பிறகு பூங்குழலி தன் நீண்ட கூந்தலையும் பிழிந்தாள்.

பிழிந்த ஜலம் மண்டபத்தின் தரையில் விழுந்து சிறு கால்வாய்களாக ஓடியது.

"அடாடா! மண்டபத்தை ஈரமாக்கி விட்டோமே?" என்றாள் பூங்குழலி.

"மண்டபத்துக்கு அதனால் தீங்கு ஒன்றுமில்லை. ஜலதோஷம், காய்ச்சல் வந்து விடாது! நீ இப்படிச் சொட்ட நனைந்து விட்டாயே?" என்றான் அமுதன்.

"நான் கடலிலேயே பிறந்து வளர்ந்தவள். எனக்கு இன்னொரு பெயர் 'சமுத்திர குமாரி.' என்னை மழைத் தண்ணீர் ஒன்றும் செய்து விடாது" என்றாள் பூங்குழலி.

அவளுடைய உள்ளம் அப்போது தஞ்சாவூர்க் கோட்டைக்கு அருகிலிருந்த சாலை ஓர மண்டபத்திலிருந்து நாகைப் பட்டினத்துச் சூடாமணி விஹாரத்துக்குப் பாய்ந்து சென்றது. 'சமுத்திர குமாரி' என்று அவளை முதன் முதலாக அழைத்தவர் அந்தச் சூடாமணி விஹாரத்தில் அல்லவா இருந்தார்?

"பூங்குழலி! என்னுடைய நந்தவனமும் குடிசையும் சிறிது தூரத்திலே தான் இருக்கிறது. மழை விட்டதும் அங்கே போய் விடலாம். என் தாயார் உன்னைச் சரியாகக் கவனித்துக் கொள்ளுவாள்!" என்று அமுதன் கூறிய வார்த்தைகள் பூங்குழலியின் காதில் அரைகுறையாக விழுந்தன.

மறுபடியும் பளிச்சென்று கண்ணைப் பறித்தது ஒரு மின்னல்.

அதன் ஒளியில் அவர்கள் முன்னம் அரைகுறையாகப் பார்த்த காட்சி நன்றாகத் தெரிந்தது. இருவரும் திடுக்கிட்டுப் போனார்கள்.

சாலையில் ஏறக்குறைய அந்த மண்டபத்துக்கு எதிரே ஒரு பெரிய ஆலமரம் வேரோடு பறிக்கப்பட்டு விழுந்து கிடந்தது. விசாலமாகப் படர்ந்திருந்த அதன் கிளைகளும் விழுதுகளும் தாறுமாறாக முறிந்தும் சிதைந்தும் கிடந்தன.

அவற்றுக்கடியில் இரண்டு குதிரைகளும் ஐந்தாறு மனிதர்களும் அகப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்படி அகப்பட்டுக் கொண்டிருந்தவர்களை விடுதலை செய்து காப்பாற்றுவதற்காக வேறு சிலர் முயன்று கொண்டிருப்பது தெரிந்தது. அவசரம் அவசரமாக அவர்கள் முறிந்து கிடந்த கிளைகளை அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

"ஐயோ!" "அப்பா!" "இங்கே!" "அங்கே!" "சீக்கிரம்!" என்பவை போன்ற குரல்கள் மழைச் சத்தத்தினிடையே மலினமாகக் கேட்டன.

இவற்றையெல்லாம்விட அதிகமாகச் சேந்தன் அமுதன்—பூங்குழலியின் கவனத்தை வேறொன்று கவர்ந்தது. விழுந்து கிடந்த மரத்துக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு பல்லக்கு தரையில் வைக்கப்பட்டிருந்தது. அதன் அருகில் இரண்டு ஆட்கள் மட்டும் நின்றார்கள். மற்றவர்கள் விழுந்த மரத்தினடியில் அகப்பட்டுக் கொண்டவர்களைக் காப்பாற்றுவதில் முனைந்திருந்தார்கள் போலும்.

"அமுதா! பல்லக்கைப் பார்த்தாயா?" என்று கேட்டாள் பூங்குழலி.

"பார்த்தேன். பழுவூர் இளைய ராணியின் பல்லக்குப்போல இருந்தது."

"விழுந்த மரம் அந்தப் பல்லக்கின் மேலே விழுந்திருக்கக் கூடாதா?"

"கடவுளே! ஏன் அப்படிச் சொல்கிறாய்? பழுவூர் ராணியைப் பார்த்து அவள் மூலமாக ஏதோ காரியத்தைச் சாதிக்கப் போகிறதாகச் சொன்னாயே?"

"ஆமாம்; இருந்தாலும், அந்தப் பழுவூர் இளைய ராணியை எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை!"

"பிடிக்கா விட்டால், அவள் பேரில் மரம் முறிந்து விழவேண்டுமா, என்ன?"

"சாதாரணப் பட்டவர்களின் தலையிலேதான் மரம் விழவேண்டுமா? ராணிகளின் தலையிலே விழக்கூடாதா?...... அது போனால் போகட்டும். இப்போது நாம் பல்லக்கினருகில் சென்று பழுவூர் ராணியைப் பார்த்துப் பேசலாமா? கோட்டைக்குள் போவதற்கு அவளுடைய உதவியைக் கேட்கலாமா?"

"அழகுதான்! ராணியைப் பேட்டி காண்பதற்கு நல்ல சமயம்; நல்ல இடம். பல்லக்கின் கிட்டப் போனால் மழைக் கால இருட்டில் திருட வருகிறோம் என்றெண்ணி நம்மை அடித்துப் போட்டாலும் போடுவார்கள்."

"ராணியை நான் பார்த்து விட்டால், அப்புறம் காரியம் எளிதாகிவிடும்......"

"அது எப்படி?"

"என் அண்ணியின் பெயரைச் சொல்வேன். அல்லது மந்திரவாதி ரவிதாஸன் அனுப்பினான் என்பேன்."

"நல்ல யோசனைதான்! ஆனால் ராணியின் அருகில் நெருங்க முடிந்தால் அல்லவோ?...அதோ பார், பூங்குழலி!"

மீண்டும் ஒரு மின்னல் மின்னியது அதன் வெளிச்சத்தில் இரண்டு பேர் பல்லக்கைத் தூக்குவது தெரிந்தது. ஆகா! கிளம்பி விட்டார்களா? இல்லை, இல்லை! மண்டபத்தை நோக்கியல்லவா பல்லக்கு வருவதுபோலக் காண்கிறது?

ஆம்; சிறிது நேரத்தில் பல்லக்கு மண்டபத்தின் முகப்புக்கு வந்து சேர்ந்தது. பல்லக்கைச் சுமந்து வந்தவர்கள் அதை இறக்கி வைத்தார்கள்.

"பழுவூர் இளைய ராணி நம்மைத் தேடிக் கொண்டல்லவா வருகிறாள்?" என்றாள் பூங்குழலி.

அமுதன் அவளுடைய கரத்தைப் பற்றிக் கொண்டு மண்டபத்தின் உட்புறத்தை நோக்கி நகர முயன்றான். ஆனால் பூங்குழலி அவ்விடம் நகர மறுத்தாள்.

இதற்குள் "யார் அங்கே?" என்று ஒரு அதட்டும் குரல் கேட்டது. பல்லக்கைச் சுமந்து வந்தவர்களில் ஒருவனின் குரல் என்பதைத் தெரிந்து கொண்டு, "பயப்படாதே, அண்ணே! உங்களைப் போல் நாங்களும் வழிப்போக்கர்கள் தான். மழைக்காக மண்டபத்தில் வந்து ஒதுங்கி யிருக்கிறோம்!" என்று சொன்னாள் பூங்குழலி.

"சரி, சரி! பல்லக்கின் அருகில் வர வேண்டாம்!" என்றது அதே குரல்.

"நாங்கள் ஏன் பல்லக்கின் அருகில் நெருங்கப் போகிறோம்? பல்லக்கில் ஏறுவதற்குப் பாக்கியம் செய்திருக்கவேண்டாமா?" என்றாள் பூங்குழலி.

சேந்தன் அமுதன் "வள்ளுவர் பெருமான்கூட இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறார். முற்பிறப்பில் செய்த வினைப்பயனைப் பற்றிக் கூறும்போது......" என்று தொடங்கினான்.

"போதும் போதும்! வாயை மூடிக் கொண்டு சும்மா இருங்கள்! நீங்கள் எத்தனை பேர்!"

"நாங்கள் இரண்டு பேர்தான். இன்னும் இரண்டு நூறு பேர் வந்தாலும் இந்த மண்டபத்தில் மழைக்கு ஒதுங்கலாம்!......" என்றான் அமுதன்.

தான் உண்மை யென்று நம்பியதையே அமுதன் சொன்னான். அதே மண்டபத்தின் உட்புறத்தில் தூணின் மறைவில் மூன்றாவது மனிதன் ஒருவன் நின்றது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

பல்லக்குச் சுமந்தவன், "நான் அப்போதே சொன்னேன். மழை வந்ததும் மண்டபத்தில் போய் ஒதுங்கலாம் என்றேன்; கேட்கவில்லை. அதனால் இந்த சங்கடம் நேர்ந்தது!" என்று தன் தோழனிடம் சொன்னான்.

"இப்படி ஆகும் என்று யார் அப்பா, கண்டது? மழை வலுப்பதற்குள் கோட்டைக்குள் போய்விடலாம் என்று எண்ணினோம். இந்த மட்டும் பல்லக்கின்மேல் மரம் விழாமல் போச்சே!" என்றான் அவன் தோழன்.

இச் சமயம் இன்னொரு பிரகாசமான மின்னல் மின்னியது.

சேந்தன் அமுதன் - பூங்குழலி இவர்களுடைய கண்களும் கவனமும் பல்லக்கின் பேரிலேயே இருந்தது.

ஆகையால் அந்த மின்னல் வெளிச்சத்தில், பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு ஒரு பெண்மணி தாங்கள் நின்ற திசையை உற்று நோக்கிக்கொண்டிருந்ததை அவர்கள் பார்த்தார்கள். அப்படி நோக்கிய பெண்மணியின் முகம் அவர்களைப் பார்த்து இன்னார் என்று தெரிந்து கொண்டு புன்னகை புரிந்ததையும் கவனித்தார்கள்.

மறு விநாடி மண்டபத்திலும் வெளியிலும் இருள் சூழ்ந்தது.

மிக மெல்லிய குரலில் பூங்குழலி, "அமுதா! பார்த்தாயா!" என்றாள்.

"ஆம், பார்த்தேன்."

"பல்லக்கில் இருந்தது யார்!"

"பழுவூர் இளைய ராணிதானே?"

"உனக்கு என்ன தோன்றியது?"

"பழுவூர் ராணியைப் போலேதான் இருந்தது. ஆனால் கொஞ்சம் சந்தேகமாக இருந்தது."

"சந்தேகமில்லை; நிச்சயந்தான்."

"எது நிச்சயம்?"

"பழுவூர் ராணி அல்ல; பித்துப் பிடித்த என் அத்தை ராணிதான் பல்லக்கில் இருக்கிறாள்!"

"உஷ்! இரைந்து பேசாதே!"

"இரைந்து பேசாவிட்டால் 'காரியம் நடப்பது எப்படி?"

"என்ன காரியம்?"

"எதற்காக இத்தனை தூரம் வந்தோமோ, அந்தக் காரியந்தான். அத்தையைக் கண்டு பிடித்து விட்டோம். அவளை விடுவித்து அழைத்துப் போக வேண்டாமா?"

"இப்போது அது முடியாத காரியம், பூங்குழலி! பல்லக்கு எங்கே போய்ச் சேர்கிறது என்று பார்த்துக் கொள்வோம். பிறகு யோசித்து விடுதலை செய்வதற்கு வழி தேடலாம்."

"தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிக்க வேண்டும் என்கிறாயே? அதெல்லாம் முடியாது. இப்போதே அத்தையை விடுதலை செய்தாக வேண்டும். உனக்குப் பயமா யிருந்தால் நீ சும்மா இரு!"

"விடுதலையாவதற்கு உன் அத்தை சம்மதிக்க வேண்டாமா? பல்லக்கில் ஏறி ஜாம் ஜாம் என்று போய்க்கொண்டிருக்கிறாள். எங்கே போகிறாள், எதற்காக, யார் அவளைப் பிடித்து வரச் செய்தது என்றெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?"

"பாதாளச் சிறைக்குக் கொண்டு போகிறார்களோ, என்னமோ? அப்புறம் நம்மால் என்ன செய்ய முடியும்?"

"ஏன் முடியாது? பாதாளச் சிறையில் நானே இருந்து வெளிவந்தவன்தான். அரண்மனைகளில் எனக்கும் கொஞ்சம் செல்வாக்கு உண்டு. உன் அத்தையை

எப்படியாவது நான் விடுதலை செய்கிறேன். இப்போது நீ சும்மா இரு!''

பூங்குழலியும் அச்சமயம் பொறுமையுடன் சும்மா இருக்கத்தான் வேண்டும் என்று தீர்மானித்தாள். அப்போது அவர்கள் சிறிதும் எதிர்பாராத காரியம் ஒன்று நிகழ்ந்தது.

மூடு பல்லக்கின் விலகிய திரை இன்னும் நன்றாய் விலகுவது போலிருந்தது. அதன் உள்ளிருந்து ஓர் உருவம் வெளியே வந்தது. சத்தம் சிறிதுமின்றிப் பூனை நடப்பதுபோல் நடந்தது. அடுத்த வினாடி அவர்கள் அருகில் வந்து விட்டது.

இவ்வளவும் நல்ல இருட்டில் நடந்தபடியால், மண்டபத்தின் அடிப்படிகளில் நின்ற காவலர்கள் கண்ணில் படவில்லை.

பல்லக்கிலிருந்து வெளிவந்தவள் ஊமை ராணிதான் என்பதைப் பூங்குழலி அந்த இருளிலும் நன்றாய்த் தெரிந்து கொண்டு விட்டாள்.

ஊமை ராணி அந்த இரண்டு பேரின் கைகளையும் பிடித்து இழுத்துக்கொண்டு அம் மண்டபத்தின் பின் பகுதிக்கு விரைந்து சென்றாள்.

பூங்குழலியைத் தழுவிக் கொண்டு உச்சி முகந்து, அவளைப் பார்த்ததில் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

பின்னர், அத்தைக்கும் மருமகளுக்கும் சமிக்ஞை பாஷையில் சிறிது நேரம் சம்பாஷணை நடந்தது.

அந்தக் காரிருளில் அவர்கள் ஒருவருக்கொருவர் எப்படித்தான் பேசிக் கொண்டார்களோ? ஒருவர் கருத்தை ஒருவர் எவ்வாறுதான் தெரிந்து கொண்டார்களோ? அது நம்மால் விளங்கச் சொல்ல முடியாத காரியம்.

பூங்குழலி சேந்தன் அமுதனிடம், "அத்தை சொல்லுவது உனக்குத் தெரிந்ததா? என்னைப் பல்லக்கில் ஏறிக் கொண்டு போகச் சொல்கிறாள். அவளை உன் வீட்டுக்கு அழைத்துப் போகச் சொல்லுகிறாள்!'' என்றாள்.

"உன் சம்மதம் என்ன? பூங்குழலி!'' என்று அமுதன் கேட்டான்.

"அத்தை சொல்லுகிறபடி செய்யப் போகிறேன். அவளைப் பிடித்துக் கொண்டு வரச் சொன்னவர்கள் இன்னார் என்று தெரிந்து கொள்வதற்குச் சரியான உபாயம் அல்லவா?''

"யோசித்துச் சொல்லு! பூங்குழலி! உபாயம் சரிதான்! அதில் என்ன அபாயம் இருக்குமோ?''

"அமுதா! நீ கவலைப்படாதே! அத்தை சொன்னபடி செய்வதினால் எனக்கு ஓர் அபாயமும் ஏற்படாது. அப்படி ஏற்படுவதாயிருந்தால், என் இடுப்பில் இந்தக் கத்தி இருக்கவே இருக்கிறது!'' என்று சொன்னாள் பூங்குழலி.

அத்தையை மறுபடி ஒருமுறை தழுவிக் கொண்டு விட்டுப் பூங்குழலி அவளைப் போலவே சத்தம் செய்யாமல் நடந்து சென்று பல்லக்கில் புகுந்து திரையையும் விட்டுக் கொண்டாள்.

## அத்தியாயம் 22

# அநிருத்தரின் ஏமாற்றம்

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் சில தினங்களாகத் தலைநகரிலேயே தங்கியிருந்தார். அவரைக் காண்பதற்கு அரசாங்க அதிகாரிகள், சிற்றரசர்கள், சேனைத் தலைவர்கள், அயல் நாட்டுத் தூதர்கள், வர்த்தகக் குழுக்களின் பிரதிநிதிகள், ஆலய நிர்வாகிகள், தென்மொழி வடமொழி வித்வான்கள் முதலியோர் வந்த வண்ணமிருந்தார்கள். ஆதலின் அவருடைய மாளிகையின் வாசலில் ஜே, ஜே என்று எப்போதும் ஜனக் கூட்டமாக இருந்தது.

அநிருத்தர் தமக்கென்று தனியாகக் காவல் படை வைத்துக் கொள்ளவில்லை. பரிவாரங்களும் மிகக் குறைவாகவே வைத்துக் கொண்டிருந்தார். ஆகையால் பழுவேட்டரையர்களோடு அவருக்குத் தகராறு எழுவதற்குக் காரணம் எதுவும் ஏற்படாமலிருந்தது.

ஆனபோதிலும், சின்னப் பழுவேட்டரையர் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். முதன் மந்திரி தஞ்சை நகரில் தங்க ஆரம்பித்ததிலிருந்து கட்டுக்காவல் குறைந்து போயிருந்தது. முதன் மந்திரியைக் காண வேண்டுமென்ற வியாஜத்தில் கண்டவர்கள் எல்லாம் கோட்டைக்குள் நுழைந்து கொண்டேயிருந்தார்கள். சக்கரவர்த்தியின் அரண்மனையை அடுத்து முதன் மந்திரியின் மாளிகை இருந்த படியால், அரண்மனை வட்டாரத்திலும் ஜனக்கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. முதன் மந்திரியின் பெயரைச் சொல்லிக் கொண்டும் அவருடைய இலச்சினையைக் காட்டிக்கொண்

டும் அநேகம் பேர் அங்கே வந்து அவரைப் பார்த்தவண்ணமிருந்தார்கள்.

இதையெல்லாம் ஓரளவு கட்டுப்படுத்த வேண்டும் என்று சின்னப் பழுவேட்டரையர் விரும்பினார். ஆனால் நேரில் முதன் மந்திரியிடம் போய்ச் சண்டை பிடிப்பதற்கு வேண்டிய துணிச்சல் அவருக்கு இல்லை. பெரிய பழுவேட்டரையரும் இருந்தால், இருவருமாக யோசித்து ஏதேனும் செய்யலாம். இந்தச் சமயம் பார்த்துப் பெரிய பழுவேட்டரையர் கடம்பூருக்குப் போய்விட்டதனால், சின்னவரான காலாந்தக கண்டருக்கு ஒரு கை ஒடிந்தது போல் இருந்தது.

கோட்டைக்குள் ஜனக் கூட்டத்தைச் சேர்த்துக் கட்டுக் காவலுக்கு ஊறு விளைப்பது போதாது என்று, முதன் மந்திரி அநிருத்தர் அடிக்கடி ஏதாவது சின்னப் பழுவேட்டரையரிடம் உதவி கேட்கும் பாவனையில் அவருக்குக் கட்டளை அனுப்பிக் கொண்டிருந்தார்.

சில நாளைக்கு முன்பு கோடிக்கரைக்கு அனுப்புவதற்குச் சில வீரர்கள் வேண்டும் என்று கேட்டார். காலாந்தக கண்டரும் ஆட்களைக் கொடுத்து உதவினார். பிறகு, நேற்றைக்கு, உயர்குலத்துப் பெண்மணி ஒருவரைத் திருவையாற்றிலிருந்து அழைத்துவர வேண்டுமென்றும், அதற்குப் பழுவூர் அரண்மனையின் மூடு பல்லக்கு ஒன்றும், சிவிகை தூக்கிகளும் வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினார். சின்னப் பழுவேட்டரையர் இந்தக் கோரிக்கையையும் நிறைவேற்றினார். ஆனால் மனத்திற்குள், “இந்தப் பிரம்மராயன் ஏதோ சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறான். அவ்விதம் மூடு பல்லக்கில்



வைத்து வரவனமுக்கக் கூடிய உயர் குடும்பத்துப் பெண்மணி யார்? எதற்காக இங்கே வருகிறாள்? இதை எப்படியும் கண்டு பிடிக்க வேண்டும். இத்தகைய சந்தர்ப்பத்தில் தமையனார் இங்கே இல்லாமற் போய்விட்டாரே?'' என்று அவர் மனசு சஞ்சலப் பட்டது.

முதன் மந்திரி அநிருத்தரின் மாளிகைக்கு மூடு பல்லக்கில் வந்தது யார் என்று தெரிந்து கொள்ள இன்னொரு மனிதனும் ஆவல் கொண்டிருந்தான். அவன் வேறு யாரும் இல்லை; அநிருத்த பிரம்மராயரின் அருமைச் சீடனான ஆழ்வார்க்கடியான்தான்.

பெருமழை பெய்த அன்றைக்கு மறு நாள் காலையில் அநிருத்தப் பிரம்மராயர் ஸ்நானபானம், ஜபதபம், பூஜை புனஸ்காரம் ஆகியவற்றை முடித்துக்கொண்டு



மாளிகையின் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தம்மைக் காண்பதற்கு யாரார் வந்து காத்திருக்கிறார்கள் என்று சேவகனைப் பார்த்துக் கொண்டு வரச் செய்தார். காத்திருந்தவர்களில் ஆழ்வார்க்கடியான் ஒருவன் என்று தெரிந்ததும், அவனை உடனே கூட்டி வரும்படி ஆக்ஞாபித்தார்.

ஆழ்வார்க்கடியான் தன் குருநாதரின் முன்னால் விரைந்து வந்து பயபக்தி வினயத்துடன் நின்றான்.

''திருமலை! போன காரியம் என்ன ஆயிற்று?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''குருவே! மன்னிக்க வேண்டும். தோல்வி யடைந்து திரும்பினேன்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஒருவாறு நான் எதிர்பார்த்தது தான். ஆதித்த கரிகாலரைச் சந்திக்கவே முடியவில்லையா?''

''சந்தித்தேன், ஐயா! தாங்கள் சொல்லச் சொன்ன செய்திகளையும் சொன்னேன். ஒன்றும் பயனில்லை. இளவரசரைக் கடம்பூர் அரண்மனைக்குப் போகாமல் தடுக்க முடியவில்லை......''

''இளவரசர் இப்போது கடம்பூரில் தான் இருக்கிறாரா?''

''ஆம், குருவே! சம்புவரையரின் மாளிகையில் அவர் பிரவேசித்ததைப் பார்த்து விட்டுத்தான் வந்தேன். இளவரசருக்குச் சம்புவரையர் இராஜோபசார வரவேற்பு அளித்தார். சுற்றுப் புறத்து மக்கள் காட்டிய உற்சாகத்தையோ வர்ணிக்க முடியாது.''

''அதெல்லாம் எதிர்பார்க்கக் கூடியது தான். கடம்பூர் மாளிகைக்கு இன்னும் யார், யார் வந்திருக்கிறார்கள்!''

''இளவரசருடன் பார்த்திபேந்திரனும் வந்தியத்தேவனும் வந்திருக்கிறார்கள். இங்கிருந்து பெரிய பழுவேட்டரையர் இளைய ராணியுடன் வந்திருக்கிறார். இன்னும் நடு நாட்டையும் திருமுனைப்பாடி நாட்டையும் சேர்ந்த பல சிற்றரசர்களையும் அழைத்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன்......''

''திருக்கோவலூர் மலையமான்?......''

''மணிமுத்தா நதிவரையில் இளவரசருடன் வந்து திரும்பிப்போய்விட்டார்!''

''அந்த வீரக் கிழவன் சும்மா இருக்க மாட்டான். இதற்குள் சைனியம் திரட்டத் தொடங்கி யிருப்பான். தெற்கேயிருந்து கொடும்பாளூர்ப் பெரிய வேளான் பெரிய சைன்யத்துடன் வருவதாகக் கேள்விப்படுகிறேன். இந்த ராஜ்யத்துக்குக் கேடு ஒன்றும் வராமல் கட

வுள்தான் காப்பாற்ற வேண்டும். திருமலை! நீ வரும் வழியில் சோழ நாட்டு மக்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பது ஏதேனும் காதில் விழுந்ததா?''

''சின்ன இளவரசருக்கு நேர்ந்த கடல் விபத்தைப் பற்றியே அதிகம் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பழுவேட்டரையர்கள் மீது ஒரே கோபமாயிருக்கிறார்கள். சிலர் தங்களையும் சேர்த்துக் குறை கூறுகிறார்கள்......''

''ஆம், ஆம்; குறை கூறுவதற்கு அவர்களுக்கு நியாயம் இருக்கத்தான் செய்கிறது. திருமலை! சீக்கிரத்தில் இந்த முதன் மந்திரி உத்தியோகத்தை விட்டு விட எண்ணியிருக்கிறேன்......''

''குருவே! தாங்கள் அப்படிச் செய்தால் எனக்கும் விடுதலை கிடைக்கும். ஆழ்வார்களின் பாசுரங்களை நாடெங்கும் பாடி யாத்திரை செய்து ஆனந்தமாய்க் காலங் கழிப்பேன். எப்போது உத்தியோகத்தை விட்டு விடப்போகிறீர்கள், ஐயா!''

''இராஜ்யத்திற்கு விபத்து நேராமல் பாதுகாக்கக் கடைசியாக ஒரு முயற்சி செய்து பார்க்கப் போகிறேன். அது முடிந்ததும் விடப்போகிறேன்......''

''அது என்ன முயற்சி, குருவே!''

''அந்த முயற்சியில் மிக முக்கியமான முதற்படி ஏறியாகி விட்டது. திருமலை! உன்னால் முடியாது என்று நீ கைவிட்டு விட்ட ஒரு காரியத்தில் நான் வெற்றி பெற்று விட்டேன்......''

''அதில் வியப்பு ஒன்றுமில்லை, ஐயா! அது என்ன காரியமோ?''

''ஈழத் தீவில் பித்துப் பிடித்தவள் போலத் திரிந்து கொண்டிருக்கும் ஓர் ஊமை ஸ்திரீயைத் தேடிப் பிடித்து அழைத்து வரச் சொன்னேன் அல்லவா? உன்னால் அந்தக் காரியம் முடியவில்லை என்று திரும்பி வந்து கூறினாய் அல்லவா?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஆம், ஐயா! அந்த ஊமை ஸ்திரீ...''

''நேற்றிரவு நம் அரண்மனைக்கு அவளைக் கொண்டு வந்தாகி விட்டது.''

''ஆகா! அதிசயம்! அதிசயம்! இதை எப்படிச் சாதித்தீர்கள்?''

''சின்ன இளவரசர் தப்பிப் பிழைத்தாரா இல்லையா என்று தெரிந்து கொள்ள அந்த ஊமைப் பெண் கோடிக்கரைக்கு வருவாள் என்று எதிர்பார்த்தேன். வந்தால் அவளைப் பிடித்துக் கொண்டு வரும்படி ஆட்களை அனுப்பியிருந்தேன். நல்ல வேளையாக, அவள் அதிக தொந்தரவு கொடுக்காமலே வந்து விட்டாள். இந்த வேடிக்கையைக் கேள், திருமலை! திருவையாற்றிலிருந்து அவளை மூடுபல்லக்கில் வைத்து அழைத்து வரச் செய்தேன். இதற்காகப் பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கையே அனுப்பி வைத்தேன்......''

''ஐயா! நேற்று மாலை பெரும்புயலும் மழையும் அடித்ததே!''

''ஆம்; அதனால் வழியில் தடங்கல் ஏற்பட்டது. எனக்குக் கூடக் கவலையாகத்தானிருந்தது. நேற்று நள்ளிரவு நேரத்துக்குப் பல்லக்கு வந்த பிறகுதான் நிம்மதியாயிற்று.''

''ஓகோ! நள்ளிரவு ஆகிவிட்டதா? தாங்களும் அத்தனை நேரமும் விழித்திருந்து வரவேற்பு அளித்தீர்களா?''

''விழித்திருந்தேன். ஆனால் வரவேற்பதற்கு நான் போகவில்லை. வீட்டுப் பெண்களை விட்டே வரவேற்கச் செய்தேன். வெறிபிடித்தவளாயிற்றே, என்ன தகராறு செய்கிறாளோ என்று கவலையாகத் தானிருந்தது. நல்ல வேளையாக, அப்படி ஒன்றும் நடக்கவில்லை. நன்றாகச் சாப்பிட்டு விட்டு, உடனே உறங்கி விட்டாள். திருமலை! உண்மையைச் சொல்லப் போனால், இன்னமும் அவளைப் பார்க்கும் விஷயத்தில் எனக்குக் கொஞ்சம் பயமாய்த் தானிருக்கிறது. நீ இச்சமயம் வந்தது நல்லதாய்ப் போயிற்று..''

''குருவே! நானும் அந்தப் பெண் மணியைப் பார்ப்பதற்கு மிக்க ஆவலாயிருக்கிறேன்...''

''அப்படியானால், வா! அந்தப்புரத்துக்குப் போகலாம். உன்னை ஏற்கெனவே அவளுக்குத் தெரியும் அல்லவா? நீ சின்ன இளவரசருக்கு வேண்டியவன் என்பதும் தெரியும். ஆகையால் உன்னிடம் சிறிது சுமுகமாக இருக்கக் கூடும்.''

குருவும் சீடனும் மாளிகையின் பின் கட்டுக்குச் சென்றார்கள். தாதிமார்களிடம் நேற்றிரவு வந்த பெண்மணியை அழைத்து வரும்படி அநிருத்தப் பிரம்மராயர் கட்டளையிட்டார்.

தாதிமார்கள் அந்த ஸ்திரீயை அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

அநிருத்தர் அவளைப் பார்த்துத் திகைத்துப் போய் நின்றார்.

ஆழ்வார்க்கடியானின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. (தொடரும்)

---

இந்த இதழ் அட்டைப் படத்தில் வரும் காட்சி பொன்னியின் செல்வன் கதையில் தொடர்ந்து வரும் ஒரு கட்டத்தைச் சித்திரிக்கிறது.

# டாக்டர் உள்ளே ஆராய்ந்து பார்க்கிறார்

. . . துன்பப்படுத்தும் எரிச்சலுள்ள இருமலுக்கு க்ளைகோடின்—டெர்ப்—வசாகாவையே குறித்துக் கொடுக்கிறார். அது ஓர் அலெம்பிக் சரக்கு.

# க்ளைகோடின்-டெர்ப்-வசாகா




அலெம்பிக்கின் நம்பிக்கைவாய்ந்த இருமல் நிவாரணி

GTV 3 T 52

பாப்பா மலர்

# அரசனும் வேலைக்காரனும்

நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்

ஒரு நாள் திருவாங்கூர் மகாராஜா தம்முடைய வேலைக்காரன் பின் வருமாறு முணுமுணுத்துக் கொண்டிருந்ததை ஒட்டுக் கேட்டார்: "இது அக்ரமக் காலம்! நான் எல்லாம் உழைக்கும் எனக்கு ஏழு ரூபாய் தான் சம்பளம். ஆனால் மோட்டார்க் காரில் சவாரி செய்வதும் மற்ற நேரமெல்லாம் சோம்பிக் கிடப்பதுமாக இருக்கும் மந்திரிக்கு இரண்டாயிர ரூபாய் சம்பளம்! என்ன அநியாயம்!"

டபேதாரின் நியாயமற்ற இந்தக் குற்றச்சாட்டை உணர்த்த வேண்டும் என்று மகாராஜா நினைத்தார். அந்தச் சமயம் தூரத்தில் ஒரு பல்லக்கு போய்க் கொண்டிருந்ததைப் பார்த்தார். உடனே வேலைக்காரனை அழைத்து அந்தப் பல்லக்கில் யார் போய்க்கொண்டிருக்கிறார்கள் என்று பார்த்து வரும்படி சொன்னார்.

டபேதார் ஓடிப் போய் விசாரித்து விட்டு வந்து, "சங்கராச்சாரியார் போகிறார்" என்று கூறினான்.

"எந்த மடத்தைச் சேர்ந்த சங்கராச்சாரியார்?" என்று கேட்டார் மகாராஜா.

மறுபடியும் அவன் ஓடிப்போய் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கத் திரும்பி வந்து, "சிருங்கேரி மடத்துச் சங்கராச்சாரியார்" என்றான்.

"சுவாமிகள் எங்கேயிருந்து வருகிறாராம்?" என்று கேட்டார் மகாராஜா.

உடனே பல்லக்கை நோக்கி ஓடிப்போய் வந்து "செங்கோட்டையிலிருந்து வருகிறாராம்?" என்று கூறினான் வேலைக்காரன்.

மறுபடியும், "எங்கே போகிறாராம்?" என்று சாவதானமாகக் கேட்டார் மகாராஜா.

மறுபடியும் ஓடலானான். பிறகு கொஞ்ச நேரங் கழித்துத் திரும்பி வந்து, "சுவாமிகள் காலடிக்குப் போகிறாராம்" என்று சொன்னான்.

"ஜகத்குரு இந்த ஊரில் தங்கப் போகிறாராமா?" என்றார் ராஜா.

மறுபடியும் ஓடிப்போய் வந்து, "ஆமாம்" என்றான் வேலைக்காரன்.

"எத்தனை நாள் தங்கப் போகிறாராம்?" என்றார் திருவாங்கூர் ராஜா.

இப்பொழுது என்ன செய்வான், பாவம்? மறுபடியும் மூச்சுத் திணற ஓடிப் போய் வந்து, "ஒரே ஒரு நாள்தான் தாமதிக்கப் போகிறாராம்" என்றான்.

ராஜா, "எங்கே தங்கப்போகிறாராம்?" என்று கேட்டார்.

ஒரே அடியாய் அலுத்துப் போயிருந்த டபேதார் மற்றுமொரு தடவை ஓடிப் போய் "கோவிலைச் சேர்ந்த மடத்தில் தான் இறங்கப் போகிறாராம்" என்று விசாரித்து வந்து கூறினான்.

"சுவாமிகளுக்கு என்னைப் பார்க்க ஒழியுமாமா?" என்றார் ராஜா.

அவ்வளவுதான். 'பிடி ஓட்டம்' என்று ஓடிப் போய், "ஆமாம், தங்களைப் பார்க்கப் போகிறாராம்" என்றான் திரும்பி வந்து.

"எப்பொழுது?" என்றார் ராஜா.

இதற்குள் சங்கராச்சாரியாரின் பல்லக்கு மடத்தை நெருங்கி விட்டது. அவ்வளவு தூரம் ஓடிப் போய்விட்டு வந்து, "இன்று, மூன்று மணிக்கு" என்றான் டபேதார்.

* * *

இதற்குள் ராஜா, மந்திரியை வரச் சொல்லி ஆள் அனுப்பியிருந்தார். மந்திரியும் வந்தார். மந்திரிக்கு அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஒன்றும் தெரியாது. அந்த மந்திரியிடம், "இன்று காலை நம் ஊருக்குப் பல்லக்கில் வந்தவர் யார் என்று விசாரியுங்கள்" என்றார் ராஜா.

உடனே மந்திரி புறப்பட்டுப் போய் அரை மணி நேரங் கழித்துத் திரும்பி வந்தார். அந்த டபேதார் முன்னிலையிலேயே மந்திரி ராஜா

விடம் கூறினார்: "மகாராஜா, சிருங்கேரி மடத்துச் சங்கராச்சாரியார் வந்திருக்கிறார். சுவாமிகள் செங்கோட்டையிலிருந்து வந்திருக்கிறார். காலடிக்குப் போகிறார். சுவாமிகள் உள்ளூர் மடத்தில் ஒரு நாளைக்குத் தங்குகிறார், இன்றைக்கு மூன்று மணிக்குத் தங்களைக் காண்பதாக இருக்கிறார். சௌகரியப் பட்டால், இன்று கோவிலில் உச்சி கால பூஜைக்கு சுவாமிகளே வந்தாலும் வரலாம்" என்றார்.

மகாராஜா டபேதார் பக்கம் திரும்பி, "இப்போது பார்த்தாயா? எந்த விஷயத்தைக் கிரகிக்க உனக்கு ஒன்பது நடை ஓடிப்போய் அலைந்து, ஐந்து மணி நேரத்தில் தெரிய வேண்டியிருந்ததோ, அதே விஷயத்தை ஒரே நடையில் அரை மணி நேரத்தில் மந்திரி தெரிந்து கொண்டு வந்து விட்டார். இப்பொழுது புரிகிறதா, உனக்கு ஏன் ஏழு ரூபாய் சம்பளம் என்பதும் அவருக்கு இரண்டாயிர ரூபாய் சம்பளம் என்பதும்?" என்று கேட்டார்.

டபேதார் வெட்கத்தால் தலை குனிந்து சிலைபோல நின்றான்

# கோபம் தணிந்தது!

நம் நாட்டிலிருந்து வெளிநாட்டுக் குழந்தைகள் யானைப் பரிசு வேண்டுமென்று கேட்கிறார்கள். நமது பிரதம மந்திரி நேருஜியும் வெளிநாட்டுக் குழந்தைகளுக்கு யானைகளைப் பரிசளிக்கிறார் அல்லவா? ஆம், பாரத தேசம் என்றாலே எந்த நாட்டினர்க்கும், 'யானை வளம் பொருந்திய நாடு' என்றுதான் முதலில் ஞாபகத்துக்கு வரும்.

இங்கிலாந்தில் ஒரு சர்க்கஸ் கம்பெனியாரிடம் ஒரு யானையிருந்தது. அது வெகு நாட்கள் அந்த சர்க்கஸ் கம்பெனியில் பல வித்தைகள் செய்து பெரியவர்களையும் சிறுவர்களையும் மகிழ்வித்து வந்தது!

ஒரு சமயம் அந்த யானை மிகவும் கோபம் அடைந்தது. அதன் அருகில் யாருமே நெருங்க முடியாமற் செய்து வந்ததாம். அதன் மாவுத்தனை மூன்று முறை கொன்று விடக் கூடப் பார்த்ததாம். சிறுவர்களும் சிறுமிகளும் அதனுடன் விளையாட நெருங்கினால் கோபங்கொண்டு துதிக்கையை இப்படியும் அப்படியுமாட்டிப் பயமுறுத்தி வந்ததாம். இந்த யானையின் அட்டகாசத்தைப் பார்த்துச் சர்க்கஸ் கம்பெனி மானேஜர் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்துப் போனார்.

கடைசியில் இந்த யானையை இன்னும் உயிருடன் வைத்துக் கொண்டிருந்தால் 'ஆபத்துத் தான்' என்று முடிவு கட்டினார். ஆகவே, அதைச் சுட்டுக் கொன்றுவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்து விட்டார்.

* * *

ரட்யார்டு கிப்ளிங் என்றொரு பிரபல ஆசிரியர் இருந்தார். அவர் நம் தேசத்தில் பிறந்தவர். நம் நாட்டில் வாழ்ந்தவர். நம் நாட்டு மிருகங்கள், அவற்றின் பழக்க வழக்கங்கள் முதலியவையெல்லாம் அவருக்கு நன்கு தெரியும். இந்த மிருகங்களை வைத்து அருமையான பல கதைகள் எழுதியிருக்கிறார். — அவைகளுக்காக 'நோபல் பரிசு' கூடப் பெற்றிருக்கிறார்.

அவர் அந்தச் சமயம் இங்கிலாந்தில் இருந்தார். சர்க்கஸ் யானையைச் சுட்டுவிடப் போகிறார்கள் என்ற செய்தி அவர் காதுவரை எட்டியது. அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை!

அந்த முரட்டு யானையைக் கூண்டுடன் கொண்டு வந்து நிறுத்தினார்கள். சர்க்கஸ் கம்பெனி மானேஜர் யானையைச் சுட்டுவிடும்படி உத்தரவு கொடுக்க வேண்டியதுதான் பாக்கி. அந்தச் சமயத்தில் யாரோ ஒருவர் வந்து சர்க்கஸ் கம்பெனி மானேஜர் கையைப் பிடித்தார். மானேஜர் திரும்பிப் பார்த்தார்.

"யார் ஐயா நீர்?" என்றார் மானேஜர்.

"யானையைச் சுட்டு விடப் போவதாகக் கேள்விப்பட்டு வந்தேன். யானையின் கூண்டுக்குள் போய் அதைச் சமாதானப் படுத்துவதற்கு எனக்கு ஒரு சந்தர்ப்பமளியுங்களேன்" என்று கேட்டுக் கொண்டார் அவர்.

"கூண்டுக்குள் போனால் யானை உம்மைச் சட்னி செய்துவிடும், தெரியுமா?" என்றார் சர்க்கஸ் கம்பெனி மானேஜர்.

"நீர் சொல்வது சரியல்ல என்று நினைக்கிறேன். எனினும், நீர் சொல்லுகிறபடி நானே உயிர் துறக்க நேர்ந்தாலும் உம்மைப் பாதிக்காதபடி, என் பொறுப்பிலேயே யானைக் கூண்டுக்குள் நுழைந்ததாகத் தஸ்தாவேஜுகள் தயாரித்துக் கொண்டு வந்திருக்கிறேன். அதனால் என்னை யானைக் கூண்டுக்குள் போக அனுமதியுங்கள்!" என்று சொல்லிக்கொண்டே அவர் தஸ்தாவேஜுகளை நீட்டினார்.

தஸ்தாவேஜை வாங்கி வைத்துக் கொண்டு, மானேஜர் அவரை யானை பிளிறிக் கொண்டிருந்த கூண்டுக்குள் போக அனுமதித்தார்.



எல்லோரும் இமை கொட்டாமல் அவரை பார்த்துக் கொண்டிருந்தனர். 'என்ன நேரப் போகிறதோ, அந்தப் புது மனிதரை யானை என்ன செய்யப் போகிறதோ!' என்ற பயம் அங்கிருந்தவர்கள் அத்

தனை பேர் மனத்திலும் இருந்தது. திக் திக் என்று நெஞ்சம் அடித்துக் கொண்டது.

கூண்டினுள் புகுந்த புது மனிதர் சும்மா நுழையவில்லை. ஏதோ பேசிக் கொண்டே நுழைந்தார். அவர் பேசியது அங்கிருந்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் அவர் மொழிகளைக் கேட்ட அந்த கஜேந்திரனோ தன் கோபமெல்லாம் அடங்கி, பசுப்போல் ஆகி விட்டது. அதன் கண்களில் கோபக் கனல் மாறி அன்புக் கண்ணீர் வந்தது. அந்தப் புது மனிதர் யானையைத் தட்டிக் கொடுத்தார். யானையும் அவருக்குத் தன் அன்பைக் காண்பித்துக் கொண்டது. இவை யெல்லாம் பத்து நிமிஷ நேரம் கூண்டுக்குள் நிகழ்ந்தன.

பிறகு வெளியே வந்த அந்த மனிதர், "யானைக்குத் தன் சுதேச ஞாபகம் வந்துவிட்டது. அதனால் தான் கொஞ்ச நாளாக அப்படிப் பொல்லாத்தனம் செய்து கொண்டிருந்தது. அதனுடன் சற்று நேரம் ஹிந்துஸ்தானியில் பேசிக் கொண்டிருந்தேன்..... இனி அது எப்பொழுதும் போலிருக்கும். கவலைப் படாதீர்கள்!" என்று மானேஜரிடம் சொல்லி விட்டு, தாம் அவரிடம் கொடுத்த தஸ்தாவேஜைக் கூடத் திரும்பி வாங்கிக் கொள்ளாமல் 'விர்' என்று போய்விட்டார்.

மானேஜர் அவரை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். கொஞ்சநேரம் கழித்து தஸ்தாவேஜைப் பிரித்துப் பார்த்த போது அடியில் "'ரட்யார்ட் கிப்ளிங்' என்று கையெழுத்திருந்தது. இப்பொழுது அவர் அடைந்த ஆச்சரியம் சொல்லும் தரமன்று!!

ஆனால் நம் பாரத நாட்டு யானையின் தேச பக்தியைப் பார்த்தீர்களா? எஸ். வி. எஸ்.



★

உபாத்தியாயர் (ஒரு ஆரஞ்சுப் பழத்தைக் கையில் வைத்துக் கொண்டு):—உலகத்தை ஆரஞ்சுப் பழத்துக்கு ஒப்பிடலாம்.

மாணவன்:— அப்படியானால் உலகத்தை எத்தனை சுளையாகப் பிரிக்கலாம்?

★

# விதி சிரித்தது!

**விஜய்**

**வா**ஞ்சிநாதன் அமானுஷ்ய வேகத்துடன் ஓடிக் கொண்டிருந்தார். அவருடைய நெற்றியிலே அரும்பி நின்ற வியர்வைத் துளிகள் அவருடைய வேக கதியின் சின்னங்களாக வழிந்தோடின. இருதயம் எந்த நிமிஷத்திலும் சுக்கல் சுக்கலாகச் சிதறி உடைந்து விடுமோ என்றவாறு 'படபட' வென்று அடித்துக் கொண்டது.

வீட்டை விட்டுக் கிளம்பும் பொழுது, "அரை மணி நேரத்தில் வந்து விடுகிறேன்" என்று தம் நோயாளி மனைவியிடம் சொல்லி விட்டுக் கிளம்பினார் வாஞ்சிநாதன். கிளம்பும் பொழுது அரை மணி நேரத்தில் நிச்சயமாகத் திரும்பி விடலாம் என்ற நம்பிக்கையுடன் தான் வீட்டை விட்டு வெளியே காலடி எடுத்து வைத்தார்.

வழக்கம் போல, அவருடைய நம்பிக்கை சோதனைக்கு ஆளாகி, நிராசையில் வந்து முடிந்து எதிர் பாராத சிக்கல்களைக் கிளப்பி விட்டுப் போய்விட்டது.

ஒரு எலிமெண்டரி பாடசாலையில் வாஞ்சிநாதன் உபாத்தியாயராக இருந்தார். வறுமையின் ஏகப் பிரதிநிதியாக இலங்கி நின்ற அவருக்கு ஒரே ஒரு பெண் பிறந்தாள். எப்படியோ கஷ்டப்பட்டு, பெண்ணை வளர்த்து ஒருவனுக்குக் கன்னிகாதானமும் செய்து கொடுத்து விட்டார்.



"எங்கள் வீட்டு நாய்க்கு நல்ல பிஸ்கோத்து வேண்டும். உங்களிடம் இருக்கிறதா?"

"ஆகா! நல்ல பிஸ்கோத்து இருக்கிறது. ஆனால் டப்பாவின் மேல் 'நாயின் ஆகாரம்' என்று போட்டிருக்கும். அது பற்றி உங்களுக்கு..!"

"......பாதகம் ஒன்றுமில்லை. என் கணவர் பிஸ்கோத்து சாப்பிட மாட்டார். நாய்க்குப் படிக்கத் தெரியாது!"

ஆனால் அவருடைய புத்திரி புக்ககம் சென்ற மூன்றாம் மாதம் தன் தாயையும் தந்தையையும் கணவரையும் மறந்து இவ்வுலகை விட்டே மறைந்து விட்டாள்.

வாஞ்சிநாதனுக்கும் அவருடைய மனைவிக்கும் வாழ்வில் விரக்தி ஏற்பட்டு விட்டது. மகளின் வாழ்வில் வறுமையை மறந்து, ஏதோ ஒரு லட்சியத்துடன் வாழ்ந்து வந்த அந்தத் தம்பதிகளின் எதிர்கால வாழ்க்கையில் ஒரு சூனியம் குடிகொண்டது.

பதினெட்டு வருஷங்களாக, அந்தத் தம்பதிகளின் கஷ்டங்களை மாற்றி, வீட்டில் கலகலப்பை நிரவி வந்த அவள் இறந்தவுடன் வாஞ்சிநாதனுக்கு உன்மத்தமே பிடித்துவிடும் போலாகிவிட்டது. அவருடைய மனைவியோ, தீராத நோய்க்கு ஆளானாள்.

வாஞ்சிநாதன் கூடியவரை, நாட்டு வைத்தியம் பார்த்தார். மனைவியின் உடல்நிலை தேறுவதாயில்லை. கடைசியில், தெரிந்த டாக்டர் ஒருவரை அழைத்து வந்தார். அவர் இலவச மருத்துவ ஆலோசனை அளித்து விட்டு ஏதோ ஒரு மருந்தின் பெயரை எழுதிக் கொடுத்தார்.

பிறகு, அந்த டாக்டர் வாஞ்சிநாதனைத் தனிமையில் அழைத்து "மிஸ்டர்! உம் மனைவியின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. நான் எழுதிக் கொடுத்த மருந்தை எவ்வளவு சீக்கிரமாக வாங்கித் தருகிறீர்களோ அவ்வளவுக்கும் நல்லது. நோயாளி ரொம்பவும் ஆபத்தான நிலையை அடைந்து விட்டார்" என்று எச்சரிக்கை செய்தார்.

வாஞ்சிநாதனின் நிலைமையை விவரிக்க வார்த்தைகளே இல்லை. மறுபடியும் பேரிடியா? முதல் இடியின் தாக்குதலை சமாளிக்க முடியவில்லை! இதற்குள் இன்னொரு இடி!!

டாக்டர் தம் கடமையைச் செய்து விட்டுப் போய் விட்டார். மருந்து வாங்க வேண்டும். அதற்குப் பணம்?

பணமில்லாத தோஷத்தினால் அல்லவா நாட்டு வைத்தியம் தெரிந்தவர்களைக் கொண்டு செய்வித்து வந்தார் அவர்?

டாக்டர் சென்ற பிறகு, ஈனசுரத்தில் 'தண்ணீர்' என்று அந்த அம்மாள் முனகிய பிறகுதான் வாஞ்சிநாதனுக்குத் தன் உணர்வு வந்தது. எலும்பும் தோலுமாகக் கிடந்த அவளைப் பார்த்தவுடன் அவர் கண்களில் நீர் மல்கியது. வறுமையிலே, தனக்கு உறு துணையாய், எத்தனையோ சோதனைகளைக் கடந்த அர்த்தாங்கி இன்று நோயின் கொடுமையால் வாடும் பொழுது தன்னால் நோயின் கொடுமையைக் குறைக்கவோ, பகிர்ந்து

கொள்ளவோ முடியவில்லையே என்ற ஏக்கம் வாஞ்சிநாதனைச் சூழ்ந்து கொண்டது.

"அவர் என்ன சொன்னார்?" என்று டாக்டர் சொன்னதை அறிய விரும்பிக் கேட்டாள் அவருடைய மனைவி.

"அவர் என்ன சொல்வார்? சரியாய்விடும், கவலைப்படாதே!" என்றார்.

"நான் எதற்குக் கவலைப் படறேனும்? நானென்ன சிறுசா? இல்லை, விவரம் தெரியாதவளா? பிராப்தம் போல நடக்கிறது."

வாஞ்சிநாதன் கண்களைத் துடைத்துக் கொண்டார். இதைக் கண்ணுற்ற அவள் "சரிதான், நீங்க எதுக்கு அழவேணும்?" என்று சொல்லிவிட்டு அவளும் அழத் தொடங்கி விட்டாள்.

கஞ்சி வைத்துக் கொடுத்த பிறகு வாஞ்சிநாதன் வெளியே கிளம்பினார். "அரை மணி நேரத்தில் வந்து விடுகிறேன்" என்று மனைவியிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே புறப்பட்டுச் சென்றார்.

"யாரையாவது போய்க் கேட்கலாம். உடனே பணம் கிடைத்துவிடும்" என்று நம்பித்தான் அரை மணிக்குள் வருவதாகச் சொல்லிச் சென்றார். ஆனால் அவருடைய துரதிருஷ்டம் எதிர்பார்த்த இடத்தில் பணம் கிடைக்கவில்லை. மேலும் பலப்பல இடங்களுக்குப் போய் அலைய வேண்டியிருந்தது. எப்படியும் மருந்து வாங்காமல் திரும்புவதில்லை என்ற திட சங்கற்பம் செய்து கொண்டு அவர், வெயிலிலே தலைக்கு மேல் துண்டைப் போட்டுக் கொண்டு அலைந்தார். அவருடைய உள்ளம் நானாவித பயங்கரக் கற்பனைகளில் மூழ்கிக் கிடந்தது.

அவர் பணத்தை எதிர்பார்த்த ஆசாமி, கடைசியில் ஒரு தோட்டத்தில் எதிர்ப்பட்டார். மாலை நேரம் நெருங்கி விட்டது. அந்த மனிதர் இவரைப் பார்த்தவுடனே யோக க்ஷேமம் விசாரிக்கத் தொடங்கினார். 'ஐயாவுக்கு இளநீர் ஒன்று வெட்டிக் கொடு' என்று பையனுக்குக் கட்டளையிட்டார்.

வாஞ்சிநாதன் நிலைமையைச் சொல்லிப் பணம் பெற்றுக் கொள்வதற்கு அரை மணி நேரத்துக்கு மேல் ஆயிற்று.

பணம் கையில் வந்தவுடன் குடையைக் கையில் பிடித்துக் கொண்டு மருந்துக் கடைக்கு ஓடினார். "ஸார், வேறு கடையிலே கேட்டுப் பாருங்கள், நாங்கள் இந்த மருந்துகளை 'ஸ்டாக்' செய்வதில்லை" என்று முதல் மருந்துக் கடைக்காரர் சொன்னவுடன் வாஞ்சிநாதனுடைய முகம் அஷ்டகோணலாக மாறியது. மறுபடியும் வேறு ஒரு மருந்துக் கடையைத் தேடிக் கொண்டு ஓடினார்.

இரண்டாவது மருந்துக் கடையில் வாஞ்சிநாதனுக்குத் தேவையான மருந்து இருந்தது. ஆனால் கடைக்காரர் வாஞ்சிநாதனுக்குச் சாவகாசமாக மருந்து கொடுத்து அவருடைய பொறுமையைச் சோதித்தார்.

வாஞ்சிநாதனின் மன உளைச்சல் கணத்திற்குக் கணம் பெருகிற்று. "தாகத்தால் தவிப்பாளே! பசிக்கிறதோ, என்னவோ? தனிமையைக் கண்டு வேறு பயப்படுவாள்!"—

வாஞ்சிநாதன் கையில் மருந்துப் புட்டி கிடைத்தவுடன் வீட்டை நோக்கிப் பறக்கத் தொடங்கினார்.

வழியிலே, விதி சிரித்தது!

எதிரில் வேகமாக வந்த லாரியில் மோதி 'பொத்'தென்று விழுந்தார். புட்டி உடைந்து மருந்து கொட்டத் தொடங்கிற்று. சமயத்தில் சமாளித்துக் கொண்டு மீதியிருந்த மருந்தைப் பத்திரப் படுத்தினார்.

அந்த நிலையில் அவர் அந்தச் செய்கையைத் தம் சுய உணர்வுடன் செய்ததாகக் கூற முடியாது. தன் கஷ்ட சுகங்களில் ஈடு கொடுத்த மனைவியின்மீது அவர் கொண்டிருந்த 'அன்பு' அப்படி அந்த மருந்துச் சீசாவைப் பற்றச் செய்தது.

ஆனால் வாஞ்சிநாதனுடைய உள்ளத்தின் ஆழத்திலே விவரிக்க முடியாத சோகத்தின் ரேகை ஒன்று ஊடுருவிப் பாய்ந்து விட்டது.

பயங்கரமான கற்பனைகள் வாஞ்சியின் உள்ளத்தில் தலை விரித்தாடத் தொடங்கின. "என்ன கெட்ட சகுனம்?" என்று மனம் கேட்டது.

நோயின் வேதனை பொறுக்க முடியாமல் முனகிக் கொண்டிருந்தாள் அம்மாள். அவ



○★○

## டில்லியில் மனோரதம்!

ஒரு நாடகத்தை மூன்று முறை பார்க்க டில்லித் தமிழர்கள் தயாராய் இருந்தார்கள் என்றால் அந்த நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் அபாரமாய் நடித்துத்தான் இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமிருக்க முடியாது. இப்படிப்பட்ட புகழுடன் டில்லி தென்னிந்தியக் கழகத்தார் சென்ற மாதம் 15, 16, 23 தேதிகளில் ஸ்ரீ டி. கே. கோவிந்தன் எழுதிய 'மனோரதம்' என்ற நாடகத்தை அபாரமாய் நடத்தினார்கள். அந்த நாடகத்தில் ஒரு காட்சியைத் தான் இங்கே வெளியிட்டிருக்கிறோம்.

○★○

ரைக் காணவில்லை. அவளுடைய நெஞ்சைத் தாகம் வரட்டிக் கொண்டிருந்தது. அரை மணி நேரமாயிற்று. ஒரு மணியுமாயிற்று.

"எங்கே போனார் இந்த மனுஷர்?..."

படுக்கையில் படுத்துக் கூரை முகட்டை வெறிக்க நோக்கிக் கொண்டிருந்த அந்த மெல்லிய உருவம் எழுந்து உட்கார்ந்து கொண்டது.

அம்மாள் தான் உட்கார்ந்திருந்த அறையை ஒரு கோட்டம் பார்த்தாள்.

இருபத்தைந்து வருஷங்களாக அந்த வீடு அவர்கள் இருப்பிடமாக இருந்தது. ஒரு சமையல் அறை, ஒரு பெரிய அறை இவ்வளவுதான். ஆனால், 'வாத்தியாரய்யாவுக்கு' வாடகையில்லாமல் கிடைத்த வீடு. அவள் அந்த வீட்டில் நுழைந்து கணவன் கைப்பிடிக்கும் பொழுது இளமை கொழிக்கும் யுவதியாக இருந்தாள். பிறகு அந்த வீட்டில் தான் அவளுடைய மகள் பிறந்து வளர்ந்து கொஞ்ச காலம் அவர்களை மகிழ்வித்தாள்.

ஏக்கப் பெருமூச்சு இதயத்தைப் பிளந்து செல்ல, அம்மாள் துன்ப நினைவுகளை நினைத்துக் கொண்டிருந்தாள்.

அந்த வீடுதான் எவ்வளவு கதை சொல்லும், வாத்தியாரய்யா குடும்பத்தைப் பற்றி?

அம்மாளுக்கு, கடந்த காலச் சம்பவங்கள் அப்பொழுதுதான் நடந்தவைபோல ஒன்றன் பின் ஒன்றாக நினைவிற்கு வரலாயின.

அறையிலிருந்த பழைய கடியாரம் ஒன்று 'டக், டக்' என்று ஒலித்து, தனக்கு உயிர் இருக்கிறதென்று தெரிவித்துக் கொண்டது.

நிமிஷ முள் நகர்ந்தது.

மணி முள்ளும் நகர்ந்தது.

அம்மாள் கடியாரத்தைப் பார்த்தாள். வாசற்படியைப் பார்த்தாள். லேசான நிழல் வாசலில் விழும்பொழுதெல்லாம் அவர் வந்து விட்டாரென்று நினைத்தாள். ஆனால் ஒவ்வொரு தடவையும் ஏமாற்றமடைந்தாள்!

* * *

மாலை இரவாகும் நேரம்.

சிறிது கண்ணயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள் அவள்.

கனவிற்கும், நினைவிற்கும் இடையில் திடீரென்று யாரோ நாலைந்துபேர் பேசும் சத்தம் கேட்டது.

கண் விழித்தாள்.

"வாஞ்சி ..." அதற்கு மேல் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் ஏதோ விபரீதம் நடந்து விட்டது என்பதைப் புரிந்து கொண்டாள்.

தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டு ரேழியை அடைந்தாள்.

அங்கே வாஞ்சிநாதன் கிடந்தார். அதாவது கிடத்தப் பட்டிருந்தார்.

அவளுக்கு விஷயம் புரிய அதிக நேரம் ஆகவில்லை.

அவளுக்கு மரணம் நேரக்கூடாது என்று யமனுடன் போராடிய அவர் யமன் பால் சேர்ந்து விட்டார். அவருடைய கை, உடைந்த மருந்து சிந்தாமல், புட்டியை ஜாக்கிரதையாகக் கவ்விக் கொண்டிருந்தது!

# உயிர் கொடுத்தவர்




" அன்புள்ள டாக்டர் அவர்களுக்கு,

என் உயிரைக் காப்பாற்றிய தங்களுக்கு எவ்விதத்தில் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுவதென்று தெரியவில்லை. தாங்கள் தயவு செய்து சிரமத்தைப் பாராமல் என் இல்லத்துக்கு வந்து வரும் ஞாயிறன்று இரவு அளிக்க விரும்பும் விருந்தை ஏற்று என்னை மகிழ்விக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நண்பன்

அருணாசலம் "

இந்தக் கடிதத்தைப் படித்ததும் டாக்டர் மதுசூதனன் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தார்.

கடிதம் திருச்சிராப்பள்ளியிலிருந்து வந்திருந்தது. பெரிய தொழில் அதிபரான அருணாசலம் எழுதியிருந்தார்.

ஸ்ரீமான் அருணாசலத்துக்கு வந்திருந்த கட்டி சாதாரணமாய் வரவில்லை. அவர் அந்தஸ்துக்கு ஏற்ற முறையில் பிரமாதமாகத்தான் வந்திருந்தது. டாக்டர் மதுசூதனன் இது வரையில் அவ்வளவு சிக்கலான ஆப்பரேஷனை யாருக்கும் செய்ததில்லை. தமது பதினைந்து வருஷ அநுபவத்தில் அவர் காணாத முறையில் அந்தப் பெரிய மனிதருக்குக் கட்டி வந்திருந்தது. டாக்டர் தம் முழுத் திறமையையும் உபயோகப்படுத்தி அந்த ஆப்பரேஷனை வெற்றிகரமாகச் செய்யப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார்.

டாக்டர் மதுசூதனன் என்றால் பட்டணத்தில் சிறு குழந்தைக்கும் அவர் பெயர் தெரியும். பிரமாதமான ஆப்பரேஷன்களையெல்லாம் எல்லோரும் வியக்கத்தக்க முறையில் சிகிச்சை செய்து அவர் பெரும் புகழுடன் விளங்கினார். அவருடைய டிஸ்பென்ஸரி வாசலில் எப்பொழுது பார்த்தாலும் ஒரு மாபெருங் கூட்டம் காத்துக் கிடக்கும். அவர் கை வைக்கும் எந்தக் கேஸும் குணமாகாமல் இருந்ததில்லை. ஆகையினால் சென்னை நகரத்தில் மட்டுமல்லாமல் மாகாணம் முழுவதிலும் அவர் புகழ் பரவிக் கிடந்தது. இந்த இளம் வயதில் டாக்டர் மதுசூதனன் அடைந்திருந்த புகழுக்கு அவருடைய திறமை மட்டும் காரணமில்லை; வைத்தியத் துறையில் நிபுணராக விளங்கிய அவர், ஏழை எளியவர்களிடமெல்லாம் மனிதனாக நடந்து கொண்டதுதான் முக்கியமான காரணம்.

பணம் செலவு செய்து சிகிச்சை செய்து கொள்ள முடியாத நிலையில் இருக்கும் ஏழை மக்களிடம்தான் டாக்டர் மதுசூதனன் மிகவும் பரிவு காட்டுவார். அவர்களிடமிருந்து ஒன்றையும் எதிர் பாராமல் மிகவும் சிரத்தையோடு அவர்களைக் கவனிப்பார்; அவர்களுக்காகத் தம் சொந்தப் பணத்தைக் கூடச் செலவு செய்வார்.

நாள் முழுவதும் ஓய்வு ஒழிவின்றி நோயாளிகளைக் கவனித்து வந்த அவருக்குத் தம் தொழில் முறையில் வரும் எந்தக் கேஸும் சிக்கலாயிருந்ததில்லை; எந்தக் கடினமான ஆப்பரேஷனையும் புன்னகை பூத்த முகத்துடன் பதட்டமில்லாமல் நிதானமாகக் கவனிப்பார்.

அப்படிப்பட்ட பெரிய டாக்டரையே இந்தத் திருச்சி கேஸ் தயங்க வைத்து விட்டது. இந்த ஆப்பரேஷனுக்காக டாக்டர் மதுசூதனன் திருச்சிக்குத் தினந்தோறும் சென்னையிலிருந்து விமானத்தில் பறந்துபோய் கவனித்து வந்தார். தொழில் அதிபரும் லக்ஷாதிபதியுமான அருணாசலத்துக்கு இந்தச் செலவெல்லாம் ஒரு பிரமாதமா!

அருணாசலத்துக்கு வந்திருந்த கட்டி முதுகெலும்பின் அருகில் வந்திருந்தமையினால் அதை ஆப்பரேஷன் செய்து சொஸ்தப்படுத்த டாக்டர் மதுசூதனன் மிகவும் சிரமப்பட வேண்டி வந்தது. ஆப்பரேஷன் வெற்றிகரமாக முடிந்து நோயாளி இறந்து விட்டால் என்ன செய்வது என்ற யோசனையில்தான் டாக்டர் மதுசூதனன் சதாகாலமும் மூழ்கிக் கிடந்தார்.

கடைசியில் ஆப்பரேஷன் வெற்றிகரமாக முடிந்துவிட்டது. அருணாசலமும் பிழைத்து விட்டார். அருணாசலத்தின் உயிருக்காக டாக்டர் மதுசூதனன் மிகவும் பாடுபட வேண்டி வந்தது. பலமுறை நினைவை இழந்து, அருணாசலம் மூர்ச்சை

யானர். அப்பொழுதெல்லாம் டாக்டர் மதுசூதனன் மிகவும் சிரத்தையுடன் ஜாக்கிரதையாகக் கவனித்துச் சிகிச்சை செய்ய வேண்டி வந்தது.

டாக்டர் மதுசூதனன் மீண்டும் ஒரு முறை அருணாசலத்தினிடமிருந்து வந்த அந்த அழைப்புக் கடிதத்தைப் படித்தார். அவருடைய சிந்தனைப் பறவை சிறகை யடித்துக் கொண்டு பல வருஷங்களுக்குப் பின்னால் சென்றது.

* * *

மதுவுக்கு அப்பொழுது பதினைந்து வயது இருக்கும். பரம ஏழைக் குடும்பத்தில் பிறந்த அவனைப் படிக்க வைக்க வேண்டும் என்று அவன் தாயார் விரும்பினாள். அதற்காக அவள் பட்ட கஷ்டங்களுக்கு அளவே இல்லை. இட்டிலிக்கு மாவு அரைத்தும், காய் கறிகள் விற்றும், அப்பளம் இட்டு விற்றும், சமையல் தொழில் செய்தும் சம்பாதித்துப் பிள்ளையைப் படிக்க வைத்தாள்.



"அப்பா, மது! நீ சிரத்தையாய்ப் படி. செலவைப் பற்றி நீ கவலைப் படாதே. இந்த உடம்பில் பலம் உள்ள வரையில் உழைத்துச் சம்பாதித்து உனக்குக் கொடுத்து விடுகிறேன். நீ படித்து எப்படியாவது முன்னுக்கு வந்தால் போதும்!" என்று அவன் தாயார் கூறுவதைக் கேட்கும் போது மதுவின் பிஞ்சு மனம் உருகிவிடும்.

"அம்மா, நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே! எனக்காக ரொம்பவும் உடைந்துக் கஷ்டப் படாதே. நான் நாலு பெரிய மனிதர்களின் காலில் விழுந்து பள்ளிக்கூடச் சம்பளத்துக்கும் புஸ்தகங்கள் வாங்குவதற்கு ஆகும் செலவுக்கும் எப்படியாவது ஏற்பாடு செய்து கொள்ளுகிறேன். நம் சாப்பாட்டுச் செலவுக்கு மட்டும் நீ உழைத்தால் போதும்!" என்று ஒரு நாள் மது கூறினான். இதைச் சொல்லி முடிப்பதற்குள் துக்கம் அவன் தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது. கண்களில் நீர் முட்டி நின்றது.

"அப்பா மது, நீ நினைப்பது போல் எந்தப் பெரிய மனிதரும் அவ்வளவு சுலபமாக உனக்கு உதவி செய்ய முன் வரமாட்டார். பணக்காரர்களுக்குத்தான் பணக்காரர்களின் உதவி கிடைக்கும். கடலில்தானே மழை பெய்கிறது! பெயருக்கும் புகழுக்கும் ஆசைப் பட்டு எத்தனையோ தர்ம ஸ்தாபனங்களுக்கும் கோவில் குளங்களுக்கும் ஆயிரம் ஆயிரமாக அள்ளி வழங்கும் வள்ளல்கள் ஒரு தனிப்பட்ட ஏழை மனிதனுக்கு உதவி செய்யும் அளவுக்குக் கீழே இறங்கி வரமாட்டார்கள்!" என்றாள் மதுவின் தாயார்.

"ஏன் அம்மா, பெரிய காரியங்களுக்கு அவ்வளவு பணம் கொடுக்கத் தயாராயிருக்கிறவர்கள் இந்தச் சின்ன உதவியைச் செய்யமாட்டார்களா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் மது.

"ஆமாம், அப்பா! உனக்கு ஒரு பணக்காரர் உதவி செய்தால் அதைப் பற்றி யாருக்குத் தெரியப்போகிறது! அதன் மூலம் அவர் பெயரும் புகழும் பெற முடியாதல்லவா!" என்றாள் அம்மா.

மதுவுக்கு ஒரே அதிசயமாகத்தான் இருந்தது. அம்மாவின் வார்த்தைகள் அவன் மனத்தில் நன்றாய்ப் படிந்து விட்டன. தான் கஷ்டப்பட்டுப் படித்து முன்னுக்கு வந்து திக்கற்ற ஏழைகளுக்குச் சேவை செய்யும் தொழிலை மேற்கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தான்.

ஒரு சமயம் மது பள்ளிக்கூடத்திலிருந்து வந்து கொண்டிருந்தபோது வேகமாக வந்த ஒரு கார் அவனை இடித்துக் கீழே தள்ளிவிட்டது. இரத்தக் காயத்துடன் மது கீழே கிடந்து துடித்தான். அந்தக் கார் ரொம்பப் பெரிய மனிதருடையது. ஆகவே, நியாயம் அவர் பக்கம்தான் நின்றது. அஜாக்கிரதையாக, கண்மூடித்தனமாக மது ஓடி வந்து தானாகவே காரில் இடித்துக் கொண்டு விட்டதாகப் போலீஸில் தீர்ப்புக் கூறப்பட்டது.

ஏழை மதுவின் தாயார் நீதியையோ நியாயத்தையோ எதிர்பார்க்கவில்லை. அவள் எதிர்பார்த்த தெல்லாம் மதுவின் உயிரைத்தான். அதைப் பெறுவதற்குத்தான் அவள் என்ன பாடுபடவேண்டியிருந்தது! அப்பப்பா! ஆஸ்பத்திரியில் அநாதைகள் வார்டில், தன் தொழிலையும் விட்டு விட்டு, கட்டிலில் பிரக்ஞையற்றுக் கிடக்கும் மதுவையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அந்த இரண்டு மூன்று நாளும் அவர்கள் இருவரும் சாப்பிடவேயில்லை. மதுவுக்குத் தன் நினைவில்லையாகையினால் அவன் சாப்பிடவில்லை; அவன் தாயாருக்குச் சாப்பிட ஒன்றுமில்லையாகையினால் சாப்பிடவில்லை. மேலும் அவளுக்குச் சாப்பாட்டிலேயே நினைவு செல்லவில்லை.

கடைசியில் எப்படியோ மது பிழைத்து விட்டான். ஒரு வேளை டாக்டர்கள் சரியாய்க் கவனிக்காததனாலேயே அவன் பிழைத்திருக்கலாம். காயம் முழுவதும் ஆறி அவன் வீட்டிற்கு வருவதற்குள் அவன் தாயார் ரொம்பவும் சிரமப்பட்டுப் போனாள். ஏழைகளுக்கு ஏதாவது நோயோ விபத்தோ நேரிட்டு விட்டால், எவ்வளவு சிரமம் என்பதை அப்பொழுதுதான் மது உணர்ந்தான்.



அப்பொழுதிலிருந்து அவன் மனம் மிகவும் தீவிரமாக வேலை செய்ய ஆரம்பித்தது. அதிலிருந்து டாக்டர் தொழிலில் அவனுக்கு ஓர் ஆர்வம் விழுந்தது. ஏழைச் சமூகத்துக்கு டாக்டரின் உதவி அதிகமாகத் தேவையாயிருக்கிறது. அதை மேற்கொண்டால், நல்ல முறையில் அவர்களுக்குச் சேவை செய்யலாம் என்று அவன் நினைத்தான். ஆனால், அடேயப்பா! டாக்டர் பரீட்சைக்குப் படிக்க வேண்டுமானால் ரொம்பச் செலவு ஆகுமே! அன்றாடம் சாப்பாட்டுக்கே வகையின்றித் தவித்த அவனால் அது எப்படி முடியும்! அதுதான் சின்னஞ் சிறு வயதான மதுவுக்குப் புரியவில்லை.

மது ஏழைப் பையனாயிருந்தாலும் கோழைப் பையனல்ல; நல்ல திட சரீரமுள்ளவன். மிகவும் நன்றாய் நீந்துவான். நீந்துவதில் அவனுக்கு ரொம்பப் பைத்தியம். தினந்தோறும் திருச்சிக் காவேரியில் குதித்து நீந்தி இரண்டாக்கி விடுவான்.

ஒரு நாள் மது வழக்கம்போல் காவேரியில் குதித்து விளையாடிக் கொண்டிருந்தான். படித்துறையில் யாரெல்லாமோ ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களில் முக்கியமாக எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தவர் ஸ்ரீமான் சந்திரசேகரன்தான். அவர் தம்முடைய குடும்பத்துடன் தினந்தோறும் காரில் வந்து காவிரியில் ஸ்நானம் செய்து விட்டுப் போவார்.

ஸ்ரீமான் சந்திரசேகரன் திருச்சிராப்பள்ளியில் ஒரு பெரிய தொழில் அதிபர். மாதம் ஆயிரக் கணக்கில் அவருக்கு வருமானம் வந்து கொண்டிருந்தது. அவருடைய ஆதரவிலும் முயற்சியிலும் பல ஸ்தாபனங்கள் இயங்கிக் கொண்டிருந்தன.

அன்றைய தினம் அவர் குடும்பத்துடன் ஸ்நானம் செய்து கொண்டிருந்தபோது ஒரு எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்து விட்டது. அவருடைய ஏக புத்திரனான பத்து வயதுப் பையன் அருண் காவேரி வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு முழுகி விட்டான். அருண் வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டான் என்று கூக்குரல் கிளம்பியதும் ஸ்ரீமான் சந்திரசேகரனும் அவர் மனைவியும் அனலிலிட்ட புழுவாய்த் துடித்தனர். வெள்ளம் பிரவாகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. யாருக்கு வெள்ளத்தோடு போகிறவனைக் காப்பாற்றத் துணிவு வரும்! ஆனால் இந்த நிலைமை சில விநாடிகள்தான் இருந்தது. மறு விநாடி ஓடும் வெள்ளத்தில் யாரோ குதித்து அவனைத் தப்புவிக்க முயன்றான். பையனைக் கரையில் சேர்க்கிறவரையில் சந்திரசேகரன் முகத்தில் ஈ ஆடவில்லை. அவர் மனைவிக்கு நினைவே தப்பிவிட்டது.

கரை புரண்டோடிய காவேரி வெள்ளத்தில் குதித்து, நீரோட்டத்தை எதிர்த்துக் குழந்தை அருணைக் காப்பாற்றியவன் மதுவேதான். அவனை ஸ்ரீமான் சந்திரசேகரன் தெய்வமாகவே மதித்தார். அருமை அருண் காவிரி வெள்ளத்துக்குப் பலியாகி விட்டான் என்று தீர்மானித்துத் துடித்துக் கொண்டிருந்த சந்திரசேகரனுக்கு, தம் மகனைத் திரும்பப் பார்த்ததும் போன உயிர் மீண்டும் வந்தது. உடனே முதல் உதவி அளித்துச் சிரமம் எடுத்துக் கொண்டதில் அரை மணி கழித்து அருண் தன் நினைவை அடைந்தான்.

சந்திரசேகரனும் அவர் மனைவியும் "அருண்! அருண்!" என்று தங்களை மறந்து அழைத்துப் பரவசமாயினர். தங்கள் மகனுக்கு உயிர் கொடுத்துக் காப்பாற்றிய மதுவைத் தழுவி மகிழ்ந்தனர். பிறகு காரில் ஏறிக்கொண்டு சந்திரசேகரன் அவர் மனைவி, குழந்தை அருண் ஆகிய மூவரும் வீட்டுக்குச் சென்றனர். சந்திரசேகரன் முதல் காரியமாக டாக்டரை வரவழைத்து அருணைக் கவனிக்க ஏற்பாடு செய்தார்.

ஒரு வாரத்தில் அருண் பூரண சௌக்கியம் அடைந்து பழையபடி உற்சாகமாக விளையாட ஆரம்பித்தான். உயிருக்கு யமனோடு போராடிக் கொண்டிருந்த தன்னைக் காப்பாற்றிய இளைஞனையே அருண் நினைத்துக் கொண்டிருந்தான். 'ஆகா, அவனுக்குத்தான் என்ன தைரியம்! தன் உயிரைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் என்னைக் காப்பாற்றினானே! அவனுக்கு இதற்காக நாம் பதிலுக்கு என்ன உபகாரம் செய்யப் போகிறோம்!' என்ற எண்ணம் அவன் மனதில் இடைவிடாமல் தோன்றிக் கொண்டிருந்தது.

அருண் இதைப் பற்றித் தன் தகப்பனாரிடம் அவர் சாவகாசமாகவும் சந்தோஷமாகவும் இருக்கும் வேளை பார்த்துத் தெரிவித்தான்.

அவன் தகப்பனார், "அவசியம் அந்தப் பையனுக்கு உதவி செய்ய வேண்டும். ஏழைப் பையன் என்று தெரிகிறது. பாவம்! அதைப் பற்றித்தான் நானும் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!" என்று சொன்னார்.

"அப்பா! அந்தப் பையனும் நம் வீட்டிலேயே இருந்து விட்டுப் போகட்டுமே! அவன் மட்டும் அன்றைய தினம் தன் உயிருக்குத் துணிந்து வெள்ளத்தில் குதித்து என்னைக் காப்பாற்றியிரா விட்டால், நான் பிழைத்திருக்க மாட்டேன் அல்லவா!" என்று கேட்டான் அருண்.

சந்திரசேகரனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அப்படியே செய்வதாக வாக்களித்தார்.

பிறகு மதுவையும் அவன் தாயாரையும் வரவழைத்து, அவர் மதுவைத் தம்மிடமே வைத்துக் கொண்டு படிக்க வைப்பதாகக் கூறினார். தன்னுடைய ஒரே ஆதரவான மகனை விட்டுப் பிரிய அவன் தாயார் விரும்பவில்லை; சமூக சேவையில்

சிறந்தது நோயாளிகளுக்குச் செய்யும் சேவையே யாதலால், தன் மகனை டாக்டருக்குப் படிக்க வைக்க விரும்புவதாகவும், அது சந்திரசேகரனைப் போன்ற பெரிய மனிதர்கள் மனம் வைத்தால் நடந்துவிடும் என்றும் கூறினாள். சந்திரசேகரன் மிகவும் மகிழ்ச்சியோடு அந்தப் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார்; அந்தப் படிப்புக்கு வேண்டிய தொகையை மதுவின் பெயரால் பாங்கியில் கட்டி ஒரு நிரந்தரவசதி ஏற்படுத்தி னார். மதுவுக்கும் அவன் தாயாருக்கும் அவருக்கு எப்படி நன்றி கூறுவது என்றே தெரியவில்லை.

மதுவும் அருணும் அதிக நாட்கள் சேர்ந்து பழக முடியவில்லை. அவர்கள் இருவரும் சேர்ந்து பழகியது ஒருமாத காலம்தான் இருக்கும். அதற்குள் அருண் பம்பாயில் உள்ள அவன் மாமாவி னிடம் செல்லும்படி யாகி விட்டது.

பம்பாயில் மிகவும் பொறுப்பு வாய்ந்த சர்க்கார் பதவியில் அவன் மாமா இருந்தார். அவருக்குக் குழந்தைகளே இல்லையாதலால் அருணைத் தம் முடன் அழைத்துச் சென்று விட்டார். அருண் மதுவையும் தன்னோடு பம்பாய்க்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று ரொம்பவும் ஆசைப் பட்டான்: பிடிவாதம் பிடித்தான்.

"மது, நீ என்னோடு பம்பாய்க்கு வந்து விடு. இரண்டு பேரும் என் மாமா வீட்டில் இருந்து கொண்டு படிக்கலாம். அவருக்கும் உன்னை அங்கே அழைத்துச் செல்வதில் விருப்பம் இருக் கிறது. அவர் பணக்காரர். நீ அங்கு வருவதனால் அவருக்கு ஒன்றும் குறைந்து போய் விடாது. மேலும் உன் படிப்புக்கு ஆகும் செலவு முழுவதை யும் என் தகப்பனார் ஏற்றுக் கொண்டு விட்டபடி யினால் நீ அதைப் பற்றிக் கொஞ்சங் கூடக் கவ லைப் பட வேண்டாம். உன் அம்மாவையும் அங்கே அழைத்துக் கொண்டு போய்விடலாம். உன் சௌகரியங்களை எல்லாம் கவனித்துக் கொள்ள நான் இருக்கிறேன்!" என்று அருண் மிகவும் அன்போடும் ஆதரவோடும் கூறினான்.

மதுவின் கண்களில் நீர் நிரம்பி வழிந்தது. சிறிது நேரம் அவன் பேச்சற்று நின்றான். பிறகு, "அருண், உன்னுடைய அளவுகடந்த அன்புக்கு நான் என்றும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்தப் பரம ஏழை அனாதைக்கு உன் தந்தை காட்டிவரும் சலுகைகளும் உதவிகளும் நான் கனவிலும் எதிர் பாராதவை. இந்த உதவிகளை நான் சரியானபடி உபயோகித்துக் கொண்டு படித்து முன்னுக்கு வர வேண்டுமானால் ஏழைமை மிகுந்த வாழ்க்கை தான் நல்லது. நான் மனோ ராஜ்யத்தில் கற்பனை செய்து கொண்டிருக்கும் டாக்டர் பதவியை நான் மிகவும் இலேசாக அடைந்து விட முடியுமா! அதற்கு மிகவும் சிரமப்பட வேண்டுமல்லவா! அதற்கெல்லாம் நான் தாயாருடன் இங்கே யிருந்து கொண்டு படிப்பதுதான் நல்லது. மேலும், பம்பாய்ப் பட்டணத்தில் செலவு அதிகம் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். என் தாயா ருடன் நான் அங்கே இருந்து கொண்டு படிப்ப தற்குச் சௌகரியப்படாது மன்னித்துவிடு. ஆனால் நான் எங்கே இருந்தாலும் உன் நினைவு மனதை விட்டு நீங்காது. உன்னால்தானே என் வாழ்க்கை மலரப் போகிறது! உன்னை விட்டுப் பிரிவதென் றால் எனக்கும் கஷ்டமாய்த்தான் இருக்கிறது. நான் எங்கே இருந்தாலும் உன் சமயத்துக்கு வந்து உயிரைக் கொடுத்து உதவுவேன்! இதைத் தவிர நான் உனக்கு என்ன சொல்ல முடியும்!" என்று மது உணர்ச்சியோடு சொன்னான்.

அருண் கண்களிலும் நீர் நிறைந்து விட்டது. வேறு வழியின்றி அவன் மதுவின் வார்த்தைகளுக் குக் கட்டுப்பட வேண்டியதாயிற்று. அவர்கள் இருவரும் பிரியாவிடை பெற்றுக் கொண்டு பிரிந்த காட்சி மதுவின் மனதில் அப்படியே பதிந்து விட் டது. அதிலிருந்து இருவர் பாதையும் பிரிந்து விட்டது. அருண் தன் மாமாவுடன் பம்பாய்க் குப் போனான். மது திருச்சியிலேயே சிரத்தையுடன் படித்துக் கொண்டிருந்தான்.

உயர் நிலைப் பள்ளிப் படிப்பு முடிந்ததும் மது மேலே கல்லூரிப் படிப்புக்காகச் சென்னைக்கு வந்து சேர்ந்தான். நல்ல புத்திசாலியாயும் சிரத்தையுள்ளவனுமாக இருந்ததனால் சென்னை மாகாணக் கல்லூரியில் சம்பளமின்றி அவன் சேர்த்துக் கொள்ளப்பட்டான்.

ஸ்ரீமான் சந்திரசேகரன் மதுவுக்கு அளித்து வந்த உதவி ஜீவநதியின் ஓட்டம்போல் நிரந்தரமா யிருந்தது. மதுவுக்கும் அவன் தாயாருக்கும் உண்டான ஆனந்தம் சொல்லி முடியாது.

# விவசாயக் கட்டுரைக்கு நூறு ரூபாய் பரிசு!

நன்செய், புன்செய், காய்கறி, பழத்தோட்டம் ஆகிய பல்வேறு விவசாயத் துறைகளில் காரியாம்சத்தில் நடந்திருக்கும் உண்மையான சாதனைகளைப் பற்றி எழுதப்படும் மிகச் சிறந்த கட்டுரைக்கு ரூ. 100 பரிசும், இரண்டாவது சிறந்த கட்டுரைக்கு ரூ. 50 பரிசும் வழங்கப்படும்.

அத்தகைய கட்டுரைகள் மற்ற விவசாயிகளுக்கு உபயோகப்படக்கூடிய யோசனைகளுடனும் புள்ளி விவரங்களுடனும் இருக்க வேண்டும். அதே சமயத் தில் வாசகர்கள் சுவையுடன் படிக்குமாறும் அமைந்திருக்க வேண்டும்.

சில விவசாயிகள் தங்கள் நிலங்களில் அதிகம் நெல்லும் மற்ற தானியங்களும் விளைவித்துச் சர்க்காரிடம் பரிசு பெற்றிருக்கிறார்கள். பரிசு பெற்றவர்கள் தங்கள் சொந்த அனுபவங்களை வைத்துக்கொண்டு எழுதலாம். அல்லது பக்கத்தில் உள்ளவர்கள் அந்தப் பரிசு பெற்ற விவசாயிகளைக் கண்டு அவர்களுடைய சாதனைகளைப்பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டும் எழுதலாம்.

நேயர்களின் விருப்பத்தின்படி கட்டுரைகள் அனுப்ப வேண்டிய கடைசித் தேதி டிஸம்பர் மாதம் முப்பத்தோராம் தேதி வரையில் நீடித்திருக்கிறோம். தயவு செய்து உறையின் மேலே 'விவசாய சாதனைக் கட்டுரை' என்று குறிப்பிடவும்.

# நம்ப முடியவில்லையே!

ராத்திரி இரண்டு மணி யிருக்கும். திருவாளர் நில்லைநாயகம் ரொம்பவும் சங்கடப் பட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு என்ன செய்வது என்று கொஞ்சங் கூடப் புரியவில்லை.

அவருடைய அருமை மனைவி வயிற்று வலிதாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தாள். அதுதான் நில்லைநாயகத்தின் சங்கடத்துக்கும் கஷ்டத்துக்கும் காரணம்.

அந்த இரவு வேளையில் அந்த அம்மாளின் அபெண்டிசிட்டிஸ் நோய்க்கு அவர் என்ன செய்ய முடியும்! பகல் நேரமாக இருந்தாலும் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்று ஆப்பரேஷன் செய்யலாம். இந்த வேளையில் அவர் என்ன செய்ய முடியும்! ஆனால் அம்மாவின் கூப்பாடோ தாங்கக் கூடியதாக இல்லை.

கடைசியில் தூங்கிக் கொண்டிருக்கிற டாக்டரை எழுப்ப வேண்டியதுதான் என்று முடிவு கட்டினார்.

டெலிபோனை எடுத்து, அவருக்கு நன்கு பழக்கமுள்ள டாக்டர் குடும்பராவுக்குப் போன் செய்தார்.

"ஹலோ! டாக்டர் குடும்பராவா!... நான்தான் நில்லைநாயகம் பேசுகிறேன்... என் மனைவி அபெண்டிசிட்டிஸ் வலி பொறுக்க முடியாமல் தவிக்கிறாள். நீங்கள் உடனே புறப்பட்டு வந்து ஆப்பரேஷன் செய்துவிட்டுப் போங்கள். என்னால் அவள் படும் உபாதையைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை......"

"என்ன! உம்முடைய மனைவிக்கு அபெண்டிஸிட்டிஸா! இதென்ன ஐயா, கூத்தாக இருக்கிறது! நம்பக் கூடியதாக இல்லையே" என்றார் டாக்டர்.

"ஏன்!"

"மூன்று வருஷத்துக்கு முன் உம் மனைவிக்கு அபெண்டிஸிட்டிஸ் ஆப்பரேஷன் செய்தவன் நான்தானே! மறுபடியும் இரண்டாந்தடவை அபெண்டிசிட்டிஸ் முளைக்கும் என்று இத்தனை வருஷ என் வைத்திய அநுபவத்திலே கேட்டதே இல்லையே, ஐயா!" என்றார் டாக்டர்.

"அபெண்டிசிட்டிஸ் இரண்டாம் தடவை முளைக்காம லிருக்கலாம். நான் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேனே!" என்றார் நில்லைநாயகம்.

"அம்மா, நீ முன்பெல்லாம் பணக்காரர்களைப் பற்றிச் சொல்லுவாயே, அது சந்திரசேகரனைப் பொறுத்த வரையில் பொய்யாகி விட்டது. அவர் மட்டும் இந்த உதவியைச் செய்ய முன் வரவில்லையென்றால் நாம் சென்னைக்கு வர முடியுமா!" என்று ஒருநாள் மது கூறினான்.

"உண்மைதான் அப்பா! நான் பொதுவாக உலக இயல்பைக் கூறினேன். அவரைப் போன்ற உத்தமர்கள் இந்த உலகில் இல்லாமல் இல்லை. நாம் அவருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்!" என்றாள் அவன் தாயார்.

மது மிகவும் கஷ்டப்பட்டுப் படித்து டாக்டர் பரீட்சையில் முதன்மையாகப் பாஸ் பண்ணினான். ஒரு பெரிய டாக்டரிடம் தொழில் அநுபவம் பெறுவதற்கு அமர்ந்தான். இனி மதுவை டாக்டர் மதுசூதனன் என்றே அழைக்கலாம்.

அப்பொழுதுதான் அந்தப் பாழாய்ப் போன உலக மகா யுத்தம் வந்தது. அந்த டாக்டருடன் மதுசூதனனும் போர்முனைக்குப் போகவேண்டி வந்தது. அம்மாவிடம் சிரமப்பட்டு விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

வருஷங்கள் பல சென்றன. மதுசூதனனின் தாயார் மகனைப் பிரிந்த ஏக்கத்தில் இறந்து விட்டாள். தாயார் இறந்துபோன செய்தி சில மாதங்களுக்குப் பிறகுதான் அவன் நண்பன் ஒருவன் மூலம் எட்டியது. மதுசூதனன் சென்னைக்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்தான். அப்பொழுதுதான் சந்திரசேகரன் காலமாகிவிட்ட செய்தி அவனுக்குத் தெரியவந்தது. அவருடைய குடும்பத்தினரைக் கண்டு பேச ஆவல் கொண்டு மதுசூதனன் திருச்சிக்குப் போனான். திருச்சியில் அவர்கள் குடும்பத்தினர் யாரும் இல்லை. அவர்கள் பங்களாவில் யாரோ குடித்தனம் இருந்தார்கள். அங்கு விசாரித்ததில் அவர்கள் கிராமத்துக்குச் சென்று விட்டதாகத் தெரிய வந்தது. பிறகு மதுசூதனன் தன் நண்பன் அருணைப் பார்க்க ஆவல் கொண்டு பம்பாய்க்குப் போனான். அங்கே அருண் இல்லை. அவன் தொழில் அநுபவம் பெறுவதற்கு அமெரிக்கா சென்றிருக்கிறான் என்று தெரிந்தது. இதனாலெல்லாம் மனம் முறிந்த மதுசூதனன், மீண்டும் கடல் கடந்து சென்று மேலும் மேலும் வைத்தியத் துறையில் ஆராய்ச்சி செய்து அநுபவம் பெறுவதில் தன் முழு கவனத்தைச் செலுத்த ஆரம்பித்தான்.

* * *

திருச்சி வழியே செல்லும் இலங்கை விமானத்தில் முன்னதாகவே ஸீட் ரிஸர்வ் செய்துகொண்டு டாக்டர் மதுசூதனன் புறப்பட்டார்.

திருச்சி விமான நிலையத்தில் ஸ்ரீமான் அருணாசலத்தின் கார் தயாராகக் காத்துக் கொண்டிருந்தது. விமானத்தி லிருந்து இறங்கியதும் டாக்டர் மதுசூதனனும் அருணாசலமும் ஒருவரை யொருவர் நன்றாய்ப் பார்த்துக் கொண்டனர். நோயுற்றிருந்த போது அருணாசலம் மதுசூதனனைச் சரியாய்ப் பார்க்கவே இல்லை.

"அருண், அருண்! என்னைத் தெரியவில்லையா!" என்று கேட்டு டாக்டர் மதுசூதனன் அருணாசலத்தை ஆலிங்கனம் செய்து கொண்டார். அருணாசலம் சற்று நேரம் மெய்மறந்து போனார்.

"நீங்கள் மது......இல்லையா!" என்று கேட்டு விட்டு, "நீங்கள் எனக்கு இரண்டு முறையும் உயிர் கொடுத்துப் பிழைக்க வைத்தீர்கள். அடே

யப்பா! எத்தனை வருஷங்களுக்குப் பிறகு சந்திக்கிறோம்! என் தொழில் முறையில் உலகம் முழுவதும் சுற்றித் திரிந்து கொண்டிருந்ததில் உங்களைப் பற்றிய நினைவு என் மனதிலிருந்து கொஞ்சம் நழுவித்தான் போய் விட்டது!'' என்று அருணாசலம் ஏதேதோ கூறினார்.

பேச்சு சுவாரஸ்யத்தில் தம் பங்களா வந்து விட்டதுகூட அவருக்குத் தெரியவில்லை. டிரைவர் காரை பங்களாவுக்குள்ளே செலுத்தி, நிறுத்திக் கொண்டு, "ஸார், நம்ம...பங்களா......வந்தாகி விட்டது!'' என்று மரியாதையுடன் சொல்லிக் காரின் கதவைத் திறந்த பின்புதான் அருணாசலத்துக்குத் தம் சுய நினைவு வந்தது.

காரை விட்டு அருணாசலமும் டாக்டர் மதுசூதனனும் இறங்ியதும் பின்புற ஆசனத்திலிருந்து இன்னொரு பெண்மணி இறங்கினாள். அவளுக்கு வயது இருபத்திரண்டு இருக்கும். உயர்தரக் கல்வியும் நல்ல நாகரிகமும் உடையவள் என்பதை அவளுடைய கம்பீரமான முகம் நன்கு எடுத்துக் காட்டியது. அவளுடைய அழகிய முகத்தில் நாணம் நாசூக்காகக் குடி கொண்டு அவள் முகத்தை மேலும் அழகு படுத்தியது.

"அண்ணா, உன் பங்களாவைத்தான் மறந்து விட்டாய்! உன் அருமைத் தங்கை உன்னோடு விமான நிலையத்துக்கு வந்தாளே, அவளையுமா மறந்து விட்டாய்!'' என்று கேட்டு அந்தப் பெண்மணி சிறு வெண்கல மணியின் நாதம்போல் கலகலவென்று சிரித்தாள்.

"டாக்டர், ஸார்! இவள் என் தங்கை விமலா. இந்த வருஷம்தான் டாக்டர் பரீட்சையில் தேறியிருக்கிறாள். முன்பு நீங்கள் என்னைக் காவேரி வெள்ளத்திலிருந்து காப்பாற்றிய போது இவள் குழந்தை!'' என்று கூறி அருணாசலம் அவளை அறிமுகம் செய்து வைத்தார்.

பிறகு, விருந்து கனஜோராக நடந்தது. விருந்து முடிந்ததும், தம் நண்பர்களுக்கு எதிரில் அருணாசலம், எழுந்து நின்று, "எனக்கு இரண்டு தடவை உயிர் கொடுத்துக் காப்பாற்றிய என் அருமை நண்பர் டாக்டர் மதுசூதனனுக்கு என்ன பரிசு தருவதென்று எனக்குத் தெரியவில்லை. உயிர் கொடுத்தவருக்கு உயிரைத்தான் கொடுக்க வேண்டும். அதுதான் பொருத்தமான பரிசு! ஆகையினால் என் உயிருக்கும் மேலான என் தங்கை விமலாவை டாக்டர் மதுசூதனனுக்குப் பரிசாக அளிக்கிறேன்! அவர் ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றுகூறி மதுசூதனனுடைய கரத்தில் விமலாவின் கரத்தைப் பிடித்து வைத்தார். அவர்கள் இருவர் உடம்பும் சிலிர்த்தது.

பிறகு அருணாசலம், மதுசூதனனைப் பார்த்து, "டாக்டர் ஸார், என் தங்கை விமலா உங்கள் காரியம் யாவினும் கை கொடுப்பாள். உங்கள் வைத்தியத் தொழிலுக்கும் வாழ்க்கைக்கும் அருந்துணையா யிருப்பாள்!'' என்று கூறினார். மதுசூதனன் பதில் அளிப்பதற்கு வார்த்தை அகப்படாமல் தவித்தார். டாக்டர் விமலா அவர் முகத்தைப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

படித்துப் பாருங்கள்!

# பூசல் தீர்ந்தது

தஞ்சை ஜில்லாவில் மிகவும் அதிகரித்து வந்த லேவாள் — மிராசுதார் தகராறுகளையும் மனக்கசப்பையும் போக்குவதற்காக நம் சென்னை சர்க்கார் ஒரு அவசரச் சட்டம் கொண்டு வந்தனர் அல்லவா! தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் கூட்டத்தில் மேற்படி விவசாயச் சீரமைப்புச் சட்டத்தைப் பற்றி ராஜாஜி பேசுகையில், "நிலத்தில் உழைத்துப் பாடுபடுபவனுக்குப் போதுமான உற்சாகம் கொடுத்தா லொழிய உற்பத்தி அதிகரிக்க முடியாது. சாகுபடி செய்பவருக்கு நிலத்தைக் கொடுத்து விடும்படி நான் உங்களுக்கு யோசனை கூறவில்லை. அவ்விதமான விபத்து நேராமல் தடுக்கவே நான் இந்த அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்தேன். ஐந்து வருஷத்துக்குச் சாகுபடி உரிமை உத்தரவாதமாக இருக்கும் என்று தெரிந்தால், சாகுபடியாளர் தன் முழு முயற்சியையும் உபயோகித்து விளைச்சலை அதிகமாக்குவதில் கண்ணுங்கருத்துமாக இருப்பார்" என்றார்.

மேற்படி சட்டத்தைப் பற்றிய முழு விவரங்களும் **பூசல் தீர்ந்தது-புதுயுகம் பூத்தது** என்னும் இச் சிறு நூலில் அடங்கி யிருக்கின்றன.

மேற்படி அவசரச் சட்டத்தைக் குறித்துப் பெரிய மிராசுதார்களின் பிரதிநிதிகள், சாதாரண பட்டாதார்களின் பிரதிநிதிகள், உழவர்களின் பிரதிநிதிகள் பலர் தெரிவித்த அபிப்பிராயம் அவரவர்களுடைய படங்களுடன் இந் நூலில் தொகுத்து வெளியிடப் பட்டிருக்கின்றன. அரசாங்க விளம்பர இலாக்கா என்னமாதிரி வேலை செய்ய வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாக இந்தப் பிரசுரம் அமைந்திருக்கிறது.

நம் சென்னை அரசாங்கம் பூரண மதுவிலக்கை வெற்றிகரமாகக் கொண்டு வந்து, மற்ற மாகாணங்களுக் கெல்லாம் வழிகாட்டியாக விளங்குகிறது. ஏழை மக்களை வாழவைக்கும் அந்த அரும் பெரும் திட்டத்தினால் விளைந்திருக்கும் நன்மைகளெல்லாம் **பூரண மது விலக்கு** என்னும் வெளியீட்டில் விளக்கப் பட்டிருக்கின்றன.

மாதர் முன்னேற்றத்துக்காகவும், கிராமத்தில் வாழும் ஏழைப் பெண் குலத்துக்கும், ராயலசீமைப் பிரதேசங்களில் தொழிலின்றி வாடும் மாதர்களுக்கும் சென்னை சர்க்கார் மாதர் நலன் இலாக்கா ஆற்றிவரும் தொண்டின் விவரங்களை **Women's Welfare in Madras State** என்னும் வெளியீடு சாங்கோ பாங்கமாகக் கூறுகிறது.

சென்னை சர்க்கார் ஹரிஜனங்களின் நல அபிவிருத்திக்கு அளித்து வரும் ஆக்க வேலைகளின் விவரத்தை, **சென்னை ராஜ்யத்தில் ஹரிஜன முன்னேற்றம்** என்னும் நூலில் தெரிந்து கொள்ளலாம்.

நமது ராஜ்யத்தில் ஆழ் கடலிலும், மற்றும் உள்ள நீர் நிலைகளிலும் மிகுந்து காணப்படும் மீன் வளத்தைப் பெருக்கி நாட்டு நலனுக்கு உற்ற முறையில் பயன்படுத்தும் வழியை **மீன் வளம்** என்னும் நூல் கூறுகிறது.

1949ம் வருஷத்திலிருந்து சர்க்கார் பஸ் போக்குவரவு இலாகாவின் சாதனைக ளெல்லாம் சித்திர விளக்கத்துடன் **Government Transport** என்னும் வெளியீட்டில் கூறப்பட்டிருக்கின்றன.

**Agricultural Research in Madras State, Feeding the Soil, Labour Welfare in Madras State** என்னும் நூல்கள் விவசாயத்தைப் பற்றியும் தொழிலாளர் நலனைப் பற்றியும் கூறுகின்றன. மேற்படி நூல்கள் கிடைக்குமிடம்: சென்னை சர்க்கார் செய்தி, விளம்பர இலாக்கா, சென்னை.

# இரண்டு பிள்ளைகள்

**கே. ஆர். கௌஸல்யா**

மூட்டை முடிச்சுகளை ஒவ்வொன்றாக ஏற்றிவிட்டு, "போய்விட்டு வரேண்டா சந்தானம்! அடிக்கடி கடுதாசி எழுதிக் கொண்டிரு!" என்று சொல்லிக் கொண்டே வண்டியில் ஏறி உட்கார்ந்தாள் விசாலம்.

சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவன் போல் வண்டிக்குள்ளிருந்து தலையை நீட்டினாள் அவள். "ஏன்! சொல்லியானதெல்லாம் போதவில்லையாக்கும்! இன்னும் என்ன தலையை நீட்டலாட்டம்!" என்று முணுமுணுத்தாள் ரேழியில் நின்று கொண்டிருந்த கமலா.

"கமலா, உன் உடம்பை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்" என்று சொல்லிவிட்டுத் தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள்.

"ஐயோ! என்ன அக்கறை! என்ன அக்கறை!" என்று முகவாயைத் தோளில் இடித்துக் கொண்டே கமலாவின் மெல்லிய குரல் 'கட' 'கட' வென்று நகர்ந்த வண்டியின் ஓசையில் தேய்ந்து விட்டது.

விசாலத்தின் ஒரே அருமைக்குமாரன் சந்தானம். அவனுக்குக் கமலாவை விவாகம் செய்து வைத்தபோது தனக்கு நாட்டுப் பெண் வந்துவிட்ட பெருமையில் பூரித்துப் போய் விட்டாள் விசாலம்.

விவாகமாகி இரண்டு மூன்று மாதங்களுக்கெல்லாம் புக்ககம் வந்தாள் கமலா. வந்த புதிதில் மாமியாரும் நாட்டுப் பெண்ணும் இழைந்து இழைந்து பழகியதைக் கண்டு ஊராரே அதிசயித்துப் போய்விட்டனர். மாமி அதிகாரம் செய்தால் நாட்டுப் பெண் பணிந்து போவதும் 'கமலா! கமலா' என்று அடிக்கொரு தடவை தன் நாட்டுப் பெண்ணை அன்பொழுக விசாலம் அழைப்பதும் எதிர்வீட்டு எச்சுமுவின் கண்ணை உறுத்தியது. கமலா வஞ்சனையில்லாமல் மாமியாரை உட்கார வைத்து ஒருத்தியே ஓடியாடிக் காரியங்கள் செய்வதைக் கண்டு அவள் உள்ளம் கொதித்தது.

மெள்ள விசாலம் வீட்டிலில்லாத சமயங்களில் வந்து கமலாவிடம் உறவு கொண்டாட ஆரம்பித்தாள் அவள். தேனொழுகப் பேசும் அவளுடைய வஞ்சகப் பேச்சில் மயங்கி விட்டாள் கமலா.

"ஏண்டி, பைத்தியமே! என்னதான் நாட்டுப் பெண்ணாக இருந்தால் என்ன! இப்படி உழைத்து உழைத்து ஓடாய்ப் போக வேண்டுமா என்ன? ஏரி குளங்களுக்குப் போய்த் தண்ணீர் எடுத்து வருவது முதல், வீட்டில் பாத்திரங்கள் தேய்ப்பது வரையில் நீதானா எல்லாம் செய்ய வேண்டும்? உட்கார்ந்திருக்கிறாளே உன் மாமியார்! அவளுக்கு என்ன கேடு வந்து விட்டது? வெளியிலே போய்ச் செய்கிற காரியங்களையாவது அவள் செய்யக் கூடாதா என்ன?..." என்று ஒரு நாள் பேச்சு வாக்கில் கூறி அவள் உள்ளத்தில் ஒரு விஷவிதையை ஊன்றிவிட்டாள் அவள்.

கமலாவின் உள்ளத்தில் நாளா வட்டத்தில் மாமியார் மேல் அளவு கடந்த வெறுப்பு வேர்விட்டது. முன்போல் விசாலம் 'மாமியார்' என்ற முறையில் செய்யும் அதிகாரத்தை அவள் இப்போதெல்லாம் வாயை மூடிக் கொண்டு கேட்டுக் கொண்டிருப்பதில்லை. 'பளிச்' 'பளிச்'சென்று எதிர்த்துப் பதில் பேசி வந்தாள். அவளுடைய திடீர் மனமாற்றம் விசாலத்துக்கு அளவற்ற வெறுப்பையும், வியப்பையும் அளித்தது.

"பாழாய்ப் போன வீட்டில் உழைச்சு உழைச்சு என்னுடம்பு துரும்பாய்ப் போகிறது. இதே எங்கம்மாவாயிருந்தால் இதைப் பார்த்துக்கொண்டு சும்மாவா இருப்பாள்?"—'நக்'கென்று குடத்தைக் கீழே வைத்துக் கொண்டே மெல்லிய குரலில் முணுமுணுத்தாள் கமலா.

"அதிசயமாகத்தான் இருக்கிறது! நாட்டுப் பெண் என்று வீட்டுக்கு வந்தால், அவளை ஊஞ்சலாடச் சொல்லி விட்டு மாமியாரா வேலை செய்வாள்? காலம் தலைகீழாகத்தான் வரவர மாறிக் கொண்டு வருகிறது!" என்று இரைந்தாள், கமலாவின் பேச்சைக் கேட்டுக் கொண்டே வந்த விசாலம்.



பெரிய மனிதர்:— காரை ரொம்ப வேகமாக விடாதேயப்பா! எனக்குப் பயமாயிருக்கிறது!

டிரைவர்:— நீங்கள் பயப்படாதீர்கள். கார் வேகமாய்ப் போகும் போது என்னைப் போல நீங்களும் கண்ணைக் கெட்டியாக மூடிக்கொண்டுவிடுங்கள்!



சந்தானத்தின் நிலை தர்ம சங்கடமாகி விட்டது. தாய்க்குப் பரிந்து பேசினால் மனைவி உறுமுவாள். மனைவிக்குப் பரிந்தால் தாய் கண்ணீர் சிந்துவாள். அதனால் எதுவும் பட்டும் படாமலும் அவன் இருந்து வந்தான்.

அன்று புறக்கடைக் கிணற்றடியில் உரத்த குரலில் பக்கத்து வீட்டு மாமியிடம் 'லெக்சர்' அடித்துக் கொண்டிருந்தாள் கமலா.

"இப்போ பாருங்கள் மாமி! என் தங்கை சுபத்ராவுக்கு ஒரு நல்ல வரன் வந்திருக்கு! கோயமுத்தூரில நல்ல சம்பளத்தில் உத்தியோகத்திலே இருக்கிறானாம். சுதர்சன் என்று பெயராம்! அப்பா, அம்மா என்று வேறே உறவினர் என்று யாரும் கிடையாதாம்! இந்த வரன் கிடைத்தால் எங்க சுபத்ராவை விட அதிர்ஷ்டசாலி யாருமே இல்லை. மீதி விஷயமெல்லாம் எப்படியிருந்தாலும் என் மாதிரி, இந்த மாமியாரிடம் படுகிற கஷ்டங்கள் இருக்காது. இல்லையா? புருஷனோடே 'ஹாய்'னு இருக்கலாம். ஆனால் ஏதோ பணத் தகராற்றிலே கல்யாணம் நின்று விடும் போலிருக்கிறதாம். அப்பா ரொம்ப தூரம் வருத்தப்பட்டு எழுதியிருக்கிறார். இந்த வருஷம் நிலத்திலே விளைச்சலும் ரொம்பக் குறைவாம். பணக் கஷ்டத்திலே கை கொடிச்சுப் போய் நிற்கிறாராம். அவர் கடிதாசைப் படிச்சதிலிருந்து எனக்கு மனசு சரியாகவே இல்லை" என்று சொல்லிக் கொண்டே குடத்தை எடுத்துக் கொண்டு உள்ளே வந்தாள் கமலா.

ஒருநாள் அடுப்பில் காய்ந்து கொண்டிருந்த பாலைப் புடவைத் தலைப்பால் பிடித்து இறக்கி வைத்தாள் கமலா.

"புடவைத் தலைப்பால் பாலை இறக்கி வைப்பானேன்? அதற்கென்று இருந்த துணி எங்கே போச்சு? தினமும் செய்கிற காரியங்களைக் கூட விதரணையாகச் செய்யத் தெரியவில்லை" என்றாள் விசாலம்.

"ஆமாம்!... துணி அகப்படவில்லை என்றால் இனிமேல் பாலைப் பொங்கி வழிய விட்டுவிட வேணும் என்று இப்பத்தான் தெரிந்தது! இனிமேல் அப்படியே செய்கிறேன்!" என்று கோபத்துடன் சொல்லி முகத்தைத் திருப்பிக் கொண்டாள் கமலா.

இந்தவிதமாக நாளொரு சண்டையும், பொழுதொரு தர்க்கமுமாகக் கமலா-விசாலம் அன்யோன்ய பாவம் வளர்ந்து கொண்டே வந்தது! வீட்டுக் காரியங்கள் ஒவ்வொன்றும் போட்டா போட்டியின் மேல் நடந்து வந்தன. மாமியாரும் நாட்டுப் பெண்ணும் பக்கத்து வீடு, எதிர்வீடு என்று மாறி மாறிச் சென்று தங்கள் குறைகளை ஓயாமல் வெளியிட்டு அங்கலாய்த்துக் கொண்டனர்.

"ஏன்டி! உன் தங்கைக்கு மாமியார் இல்லாத இடமாக வாய்க்க வேணும் என்று வேண்டுமானாலும் சொல்லிக்கொள். அண்டை அயலிலே இருக்கிறவர்களிடமெல்லாம் எதற்கு என் பேரை இழுக்கிறாய்?" என்ற குரல் கேட்டு நிமிர்ந்தாள் கமலா.

விசாலம் எதிரே கோபத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

"ஆமாம்! குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கிறதாக்கும். நான் 'மாமியார் இல்

வாத இடமா' இருக்கணும்னுதானே சொன்னேன்! உங்களுக்கு ஏன் பொத்துக் கொண்டு கோபம் வருகிறது!" என்று சொல்லி விட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே சென்று விட்டாள் கமலா. அன்று விஷயம் ரொம்ப தூரத்துக்கு முற்றி விட்டது.

அன்று மாலை சந்தானம் ஆபீஸிலிருந்து எப்போது வரப் போகிறான் என்று ஆவலோடு காத்துக் கொண்டிருந்தாள் கமலா. அவன் வந்ததும் வராததுமாக அன்று நடந்த விஷயத்தை யெல்லாம் ஒன்று விடாமல் மனப்பாடம் செய்தவள் போல் ஒப்பித்துக் கண்ணீர் உகுத்தாள்.

"ஊரிலேதான் உங்களுக்குக் கல் கோட்டையாட்டமா வீடு இருக்கே! அவ்வளவு நல்ல வீட்டை விளக்கு ஏற்றிவைக்க ஆளில்லாமல் பூட்டி வைத்துப் பாழடிப்பானேன்! அங்கே போய் உங்கம்மா இருக்கக் கூடாதா என்ன!" என்று கடைசியாக ஒரு விசும்பலுடன் கூறினாள் கமலா.

சந்தானம் ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தான். "இதோ பாரு, கமலா! திடீர் என்று நான் அம்மாவிடம் போய் 'நீ ஊருக்குப் போ' என்று எப்படிச் சொல்கிறது? முதலாவது எனக்கே மனசு வராதுபோல இருக்கே!"

"சரி! நீங்கள் சொல்லவே வேண்டாம். அவருடைய அதிகாரத்தையும், அதட்டலையும் நான் வாயை மூடிக்கொண்டு சகித்துக் கொள்கிறேன். சரிதானே! திருப்திதானே?" இப்படிப் படபட வென்று கூறிவிட்டு உள்ளே சென்று விட்டாள் கமலா.

மறுநாள் காலை ஞாயிற்றுக்கிழமையாதலால் சந்தானம் மெதுவாகத்தான் படுக்கையை விட்டெழுந்தான். கூடத்தில் அவனுடைய தாயார் மூட்டை முடிச்சுகள் கட்டிக் கொண்டிருந்தாள்.

"ஏன் அம்மா, இதென்ன! எங்கேயாவது புறப்படறயா, என்ன!" என்று அதிசயத்துடன் கேட்டான் அவன்.

"ஆமாண்டாப்பா! என்னவோ நேற்று ராத்திரி ஏதோ நினைத்துக் கொண்டேன். ஊரிலே கடலாட்டமா வீணாகப் பூட்டிக் கிடக்கு. அங்கு விளக்கேற்றி வைப்பாரில்லாமல் பாழாகப் போகிறதே என்று தோன்றியது. அங்கே போய்க் கொஞ்ச நாள் இருந்துவிட்டு வருவோமென்று புறப்பட்டுவிட்டேன். இங்கே எனக்கும், கமலாவுக்கும் என்னவோ ஒத்துக் கொள்ளவில்லை. என்னால் படபட என்று பெரியவா சுபாவப்படி நாலு வார்த்தை சொல்லாமல் இருக்க முடியவில்லை. கமலாவுக்கு அதைப் பொறுத்துக் கொள்ளக் கஷ்டமாயிருக்கு. கொஞ்ச நாள் இரண்டு பேருமே பிரிந்திருந்தாலாவது மனசு சமாதானப்படுமோ என்றுதான் புறப்பட்டு விட்டேன்."

முதல் நாள் தானும் கமலாவும் பேசிக் கொண்டிருந்ததற்கேற்ப இன்று தானாகவே விசாலம் புறப்பட்டு விட்டதை எண்ணி வியப்பால் ஸ்தம்பித்து விட்டான் சந்தானம்.

"சரி, போய்விட்டுவா அம்மா! நான் வேறே என்ன சொல்லப் போகிறேன்!" என்றான் அவன் சுருக்கமாக. விசாலம் ஊருக்குப் புறப்பட்டு விட்டாள். கமலாவின் உள்ளத்தில் நிம்மதி பிறந்தது.

முற்றத்து வெய்யிலில் ஒரு விறகைக் காயப் போட்டுக் கொண்டிருந்தாள் விசாலம். "போஸ்ட்" என்ற குரல் கேட்டுப் பரபரப்புடன் ஓடிய அவள் தபால்காரன் நீட்டிய கார்டை வாங்கிக் கொண்டு உள்ளே வந்தாள். கடிதம் சந்தானம்தான் அவளுக்கு எழுதி யிருந்தான்.

"அம்மாவுக்கு நமஸ்காரம்,

இங்கு எல்லோரும் சௌக்கியம். அங்கு உனக்கு அசௌகரியமொன்றுமில்லாமலிருக்கிறதா! நீ ஊருக்குச் சென்று விட்டதிலிருந்து வீடே வெறிச் சென்றிருக்கிறது.

கமலாவின் தங்கை சுபத்ராவுக்கு நல்ல வேளையாக முன்பு சொல்லிக் கொண்டிருந்த வரனே நிச்சயமாகி விட்டது. கல்யாணம் வருகிற ஞாயிறன்று கோயம்புத்தூரில்தான் நடக்கப் போகிறது. நீ இருக்கு மிடத்திலிருந்து அந்த ஊர் ரொம்பக் கிட்டத்திலிருப்ப



## திருமணம்

திருச்சூர் "லோகப்பிரகாசம்" ஆசிரியர் ஸ்ரீ டி. எஸ். வைத்தீஸ்வரய்யர் அவர்களது குமாரர் சிரஞ்சீவி டி. வி. பரமேஸ்வரனுக்கும் கும்பகோணம் சப் - ரிஜிஸ்திரார் ஸ்ரீ டி. ஆர். கிருஷ்ணமூர்த்தி ஐயர், பி. ஏ. அவர்களது குமாரி சௌபாக்கியவதி சாவித்ரிக்கும் சமீபத்தில் கும்பகோணத்தில் விவாகம் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க பரமேஸ்வரன் - சாவித்திரி!

தாலும். அவசியம் விவாகத்திற்கு நீ வந்து போகவேண்டுமென்பது கமலாவின் பெற்றோரின் விருப்பமாதலாலும், நீ அவசியம் வருவாய் என்று எதிர்பார்க்கிறேன். நானும், கமலாவும் கல்யாணத்தன்று முதல் நாள் இங்கிருந்து புறப்படுகிறோம். — சந்தானம்''

கடிதத்தைப் படித்து முடித்த விசாலம் உள்ளே வேலைகளைக் கவனிக்கச் சென்றாள். அவள் உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது.

வருவோரும் போவோருமாகக் கல்யாண வீடு அமளி துமளிப் பட்டுக் கொண்டிருந்தது. விசாலம் கூடத்தில் ஒரு புறமாக அமர்ந்து கொண்டிருந்தாள். அவளை யாரும் கவனிக்கவுமில்லை. ஒரு வார்த்தை பேசவுமில்லை. கமலா மட்டும் 'மாமியாராயிற்றே' என்று ஒப்புக்கு இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டுத் தன் பிறந்த வீட்டவர்களிடம் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள்.

முகூர்த்தம் முடிந்து சிறிது நேரத்திற்கெல்லாம் மாடியிலிருந்து ஏதோ எடுத்து வருவதற்காகச் சென்றாள் கமலா. பாதிப் படிக்கட்டுகளை வேகமாகக் கடந்து சென்றுவிட்ட அவள் கால்களை மேலே ஏறவொட்டாமல் தடுத்து நிறுத்தியது, மாடியில் கேட்ட அந்தப் பேச்சுக் குரல்.

"மாமி! நீங்கமட்டும் என்னை அவ்வளவு வற்புறுத்திச் சொல்லியிராவிட்டால் நிச்சயமாக இந்தக் கல்யாணத்திற்கு நான் சம்மதித்திருக்கவே மாட்டேன். இவ்வளவு படிப்பு படிச்சிருக்கிறதுக்கும் இவ்வளவு உயர்ந்த உத்தியோகத்திலே அமர்ந்திருக்கிறதுக்கும் என்னுடைய சிநேகிதர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நான்தான் இந்த ஏழைக் குடும்பத்திலே சம்பந்தம் பண்ணியிருக்கிறேன். ஆதியிலே, திக்கற்ற ஒரு நிலைமையிலே நான் இருந்த போது நீங்க வளர்த்துப் பெரியவனாக்கியதற்கு நான் உங்களுக்குப் பட்டிருக்கும் நன்றிக் கடனைத் தீர்க்க வேறே என்னதான் செய்யப் போகிறேன்! என்றுதான் இந்த விவாகத்துக்குச் சம்மதித்தேன்!''

"சுதர்சனா! உன்னிடம் நான் இத்தனை நாள் சொல்லவில்லை. இந்தக் கல்யாணப் பெண்ணினுடைய அக்கா கமலாதான் என் நாட்டுப் பெண். அவளுக்கு விவாகம் செய்து வைக்கிறபோது அவள் அப்பா எவ்வளவோ தன்முய்ந்தான் சீர் செனத்தியெல்லாம் செய்தார். ஆனால் சமீப காலத்திலேயிருந்துதான், மழையில்லாம நிலமெல்லாம் காய்ந்துபோய் அவர் கைகொடிக்கப் போய் நிற்கிறார். இப்படிப்பட்ட ஒரு கஷ்ட நிலைமையிலே தவிக்கிறவாளுக்குக் கை கொடுத்து உதவ நீ உன் கௌரவத்தை விட்டுக் கொடுத்ததற்காக வருத்தப்படாதே! பெருமைப்பட்டுக்கோள்!''

"மாமி! உங்கள்மாதிரி பெருந்தன்மை உலகத்திலே எங்கேயோ ஒருத்தரிடம்தான் அபூர்வமாக இருக்கும்!''

"அதெல்லாம் கிடக்கட்டும்! ஆதியிலே உன்னை நான் காப்பாத்தினது பெரிசில்லை. அந்த நன்றி விசுவாசத்திலே இப்போ நீ இருக்கிற அந்தஸ்து எல்லாத்தையும் மறந்துட்டு, என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டது தான் அதிசயம். சந்தானம் என் வயிற்றில் பிறந்த பிள்ளை. நீ நான் வளர்த்த பிள்ளை. அவ்வளவுதான். மற்றப்படி பாசம் என்பது எனக்கு உங்களிருவரிடத்திலும் சமமாகத்தான் இருக்கிறது'' என்றாள் கமலாவின் மாமியார் விசாலம்.

தட தடவென்று மாடியேறி வந்தாள் கமலா. சுதர்சன் கீழே இறங்கிச் சென்றுவிட்டான்.

"அம்மா!'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் அழைத்து, விசாலத்தின் இரு கரங்களையும் நடுங்கும் தன் கைகளால் பிடித்துக் கண்களில் ஒத்திக் கொண்டாள் கமலா. பேசுவதற்கு அவளுக்கு வார்த்தையே வரவில்லை. விசாலத்தின் கைகள் கமலாவின் கண்ணீரில் நனைந்தன. கமலா சொல்ல வேண்டிய சமாசாரம் அவ்வளவையும் உணர்ச்சி மிகுந்த அவள் கண்ணீர்ப் பிரவாகம் சொல்லி விட்டது.

"கமலா, என்ன இது? ஏன் அழுகிறாய்? உன் மேல் ஒரு தவறும் இல்லை. கண்ணீரைத் துடைத்துக் கொள்!'' என்று மிகவும் பரிவோடு கூறிக் கமலாவை விசாலம் அணைத்துக் கொண்டாள்.

# தங்கையின் பாசம்

## இதயவாசி

மாலை அலங்காரத்தை முடித்துக் கொண்டு மாடிக் கைப்பிடிச் சுவருக்கருகில் வந்து நின்றாள் சாரதா. அவள் கண்கள் தெருவைத் துழாவின. தூரத்தில் வரும் பச்சை நிற 'பியூக்' காரைக் கண்டதும் அவள் முகத்தில் மின்வெட்டுப் போன்ற ஒரு புன்னகை தெளித்தது. 'இன்று சீக்கிரமாகவே வந்து விட்டாரே! காப்பி தயாராக இருக்கிறதோ என்னவோ?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சமையலறையை நோக்கி விரைந்தாள். மறுபடியும் ஆவி பறக்கும் காப்பியுடன் கணவன் எதிரில் வந்து நின்றாள். ஆபீஸ் உடைகளைக்கூடக் களையாமல் ஆயாசத்துடன் சோபாவில் சாய்ந்த சந்திரன் மனைவியிடம் ஒரு திருமண அழைப்பிதழை நீட்டினான். காப்பியை மேஜைமேல் வைத்த சாரதா ஆவலுடன் அழைப்பிதழை வாங்கிப் பார்த்தாள். அவளுடைய கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன.

"நம்ம சரசுவுக்கா கல்யாணம்? அப்பாவா பத்திரிகை அனுப்பி யிருக்கிறார்?" என்று வியப்பு பொங்கக் கேட்டாள் அவள்.

"உன் அப்பா அருமைப் பெண்ணுக்குப் பத்திரிகை அனுப்பி யிருக்கிறார்! ஆசையைப் பாரு, ஆசையை! பிள்ளை வீட்டிலிருந்து நமக்கு அழைப்பு வந்திருக்கிறது. மாப்பிள்ளை என் ஆபீஸ் மானேஜர்" என்றான் சந்திரன் மிகவும் ஏளனமாக.

சாரதாவின் முகம் சிறுத்து வாடியது. விழிகளில் லேசாக நீர் திரையிட்டது. தலை குனிந்தாள். மனக் கண்முன்னே சரசுவின் முகம் நிழலாடியது.

"அப்பாவைச் சொன்னவுடன் பெண்ணுக்கு ரோஷம் வந்து விட்டதாக்கும்! சரி, நீ சினிமாவுக்கு வரப்போகிறாயா இல்லையா?"

"நான் வரவில்லை!" என்று வெடுக்கென்று பதில் சொன்னாள் அவள்.

"அப்படியானால் நான் போய்விட்டு வருகிறேன். சினிமா கொட்டகையில் ராகவன் காத்திருப்பான்" என்று சந்திரன் காப்பியைக் குடித்துவிட்டுப் புறப்பட்டான். சாரதா அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்தாள். வெளியே ஒளியை விழுங்கிக் கொண்டு இருள் கனத்தது. சாரதாவின் உள்ளத்திலும் சிந்தனை அலைகள் புரண்டு எழும்பிக் கொக்கரித்தன. பிறந்த வீட்டின் நினைவு பெரிதாக விரிந்து கொண்டே போயிற்று. கவனிப்பாரற்ற ரேடியோ ஏதோ கத்தி ஹால் முழுவதும் ஒலியைப் பரப்பிக் கொண்டிருந்தது.

சீனிவாசய்யரின் மூத்த பெண் சாரதா. சாரதாவுக்குப் பதினைந்து வயது நடக்கும் பொழுதே தாயை இழந்து விட்டாள். அவளுக்கு இரண்டு தங்கைகள் இருந்தனர். தங்கைகளை வளர்க்கும் பொறுப்பும் குடும்ப பாரமும் அறியாச் சிறுமியின் தலையில் வந்து விழுந்தது. வெகு சாமர்த்தியமாகக் குடும்பத்தை நடத்தினாள் அவள். பல இடங்களில் வரன் தேடிச் சந்திரனை மாப்பிள்ளையாகத் தேர்ந்து எடுத்தார் சீனிவாசய்யர். சந்திரன் ஏழை வீட்டுப் பிள்ளை. தாய் தந்தையை சிறு வயதிலேயே இழந்து விட்டான் அவன். ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக இருந்த சந்திரன் மாமனார் வீட்டிலேயே வந்து விட்டான். குடும்பம் முதல் வருஷம் மிகவும் இன்பமாகத்தான் கழிந்தது.

அடுத்த வருஷமே ஒரு குழந்தைக்குத் தாயானாள் சாரதா. பேரன் பிறந்ததுமே சீனிவாசய்யருக்கு மாப்பிள்ளையிடமும் பெண்ணிடமும் சலிப்பு தட்டியது. அவர்களால் தனக்குச் செலவு அதிகமாகிறது என்ற எண்ணம் உள்ளத்தில் வேர்விட்டது. அடுத்த பெண் குடித்தனம் நடத்தும் அளவுக்கு வளர்ந்துவிட்டாள். இனி சாரதாவின் உதவி தேவையில்லை. பெண்ணும் மாப்பிள்ளையும் தனிக் குடித்தனம் போய்விட வேண்டும் என்ற தீர்மானம் அவர் உள்ளத்தில் உறுதியாக உறைந்தது. மனதிலுள்ளதை வாய் விட்டுச் சொல்லாமல் மாப்பிள்ளையிடம் பேசுவதைக் குறைத்துக் கொண்டார். கபடமற்ற சந்திரனால் அவர் போக்கைப் புரிந்துகொள்ள முடியவில்லை. சாரதாவும் தந்தையிடம் அளவுக்கு மீறிப் பாசம் வைத்திருந்தாள். தங்கைகள் தந்தைக்குச் சாதம் போடச் சம்மதிக்காது அவள் மனம். தானே தினந்தோறும் அப்பாவுக்குப் பரிமாறுவாள்.

அன்று காலை எழுந்திருக்கும் போதே வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. பிசு பிசுவென்ற தூறல் தரையை நனைத்துக் கொண்டிருந்தது. சாரதாவுக்கு இரண்டு நாளாகவே உடம்பு சரியில்லை. அதிலும் இன்று கொஞ்சம் அதிகமாக இருந்தது சாரதாவின் உடல்நிலை. மணி ஏழு அடித்தும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை அவள். ஈர விறகை வைத்துக் கொண்டு அடுப்பு எரியாமல் திண்டாடிக் கொண்டிருந்தாள் சாரதாவின் தங்கை ரோகிணி.

பல்லைத் தேய்த்து விட்டு உள்ளே நுழைந்த சீனிவாசய்யருக்குக் காப்பி ஆகாததைக் கண்டதும் கோபம் பொங்கியது.

"இன்னும் காப்பி ஆகவில்லையா?" என்று ஆத்திரத்துடன் கேட்டார் அவர்.

"அடுப்பு எரியவே மாட்டேன் என்கிறது! காப்பிக்கு அவசரப் பட்டால் என்ன செய்கிறது!" என்று முனகினாள் ரோகிணி.



நினைத்து வருந்தினாள். பல்லைக் கடித்துக் கொண்டு அன்று வேலைகளை முடித்த அவள் படுக்கையில் படுக்கும்பொழுது நல்ல ஜுரம் வந்துவிட்டது. மறு நாளும் ஜுரத்துடன் வேலை செய்து மழையிலும் நனைந்துவிட்டாள் அவள். ஜுரமும் குளிரும் அத்து மீறிவிட்டன. தன் நினைவிழந்து படுக்கையில் விழுந்தாள் சாரதா.

சீனிவாசய்யர் இது ஒன்றையும் கவனிக்காதது போல நடந்து கொண்டார். மாமனார் ஏன் இப்படி விலகி நடந்து கொள்ளுகிறார் என்று தெரியாது சந்திரன் திகைத்தான். டாக்டரை அழைத்து வரக் கையில் காலணா காசில்லை. நிமிஷத்துக்கு நிமிஷம் சாரதாவுக்கு ஜுரம் ஏறிக் கொண்டிருந்தது. புலம்பல் அதிகமாகிப் பார்ப்பவர்களுக்குப் பயத்தை ஊட்டின. சந்திரனுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. நண்பர்களிடம் கடன் கேட்டும் இரண்டு ரூபாய் கூடக் கிடைக்கவில்லை. குழப்பமும் கவலையும் இதயத்தை முற்றுகை யிட்டன. கடைசியில் மாமனாரைப் பணம் கேட்பதைத் தவிர வேறு வழியில்லை.

சீனிவாசய்யர் அப்பொழுதுதான் சாப்பிட்டு விட்டுச் சாய்வுநாற்காலியில் வந்து சாய்ந்தார். சந்திரன்

சீனிவாசய்யரின் கோபம் உச்ச நிலைக்கு ஏறியது. "உன் அக்கா எங்கே தொலைந்து போனாள்?" என்று இரைந்தார்.

தந்தையின் கத்தலைக் கேட்ட சாரதா பரபரப்புடன் எழுந்து வந்தாள். அவள் உடம்பு தள்ளாடியது. "இதோ காப்பி யாகிவிட்டது, ஏன் அப்பா கத்துகிறீர்கள்?" என்றாள் நிதானமாக.

சீனிவாசய்யருக்கு அடக்கி வைத்திருந்த ஆத்திர வெள்ளம் உடைத்துக் கொண்டு பொங்க ஆரம்பித்தது.

"ஏழு மணி வரையில் ராணி மாதிரி படுத்துக் கொண்டிருந்தால் வீட்டு வேலை எப்படியாகும்? இனிமேல் சமையல்காரன் போட வேண்டியதுதான். தண்டச் செலவு செய்வதற்குத்தானே நான் சம்பாதிக்கிறேன்!" மடை திறந்த வெள்ளம் போலச் சுழித்துக் கொட்டின வார்த்தைகள்.

"உடம்பு சரியில்லை, அப்பா! அதனாலே தான் எழுந்திருக்கவில்லை." துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினாள் சாரதா.

"உடம்பு உனக்கு என்றைக்குத்தான் சரியாக இருக்கிறது? அந்த இரண்டு குழந்தைகள் இருக்கிறது வேலை செய்ய! நீ போய்ப் படுத்துக் கொள்" என்று என்னென்னவோ இரைந்தார் அவர்.

சாரதாவுக்கு அழுகை வந்துவிட்டது. தன் தந்தையா இப்படிப் பேசுகிறார் என்று

தயங்கிக் கொண்டே அவர் எதிரில் வந்து நின்றான். அவனை நிமிர்ந்து பார்த்து விட்டுப் பேப்பரில் கண்ணோட்டத்தைச் செலுத்தினார் அவர்.

"மாமா, பத்து ரூபாய் பணம் இருந்தால் கொடுங்கள். சம்பளம் வாங்கினதும் கொடுத்து விடுகிறேன்" என்று தட்டுத் தடுமாறிக் கேட்டுவிட்டான் சந்திரன்.

"பணமா! என்னிடம் ஏது? உனக்கு எதுக்குப் பணம்?" என்று கேள்வி மேல் கேள்வியாக அடுக்கினார் சீனிவாசய்யர்.

"சாரதாவுக்கு ஜுரம் அதிகமாக இருக்கிறது. டாக்டரை அழைத்து வரலாம் என்றால் கையில் காலணா இல்லை!" என்றான் சந்திரன் வேதனையுடன்.

"இந்த ஜுரத்திற்கு டாக்டரை அழைத்து வர வேண்டுமா? டாக்டர் வந்தால் உடம்பு சரியாகிவிடுமா, என்ன? உங்களுக்குச் சாப்பாடு போடுவது போதாதென்று வைத்தியத்துக்குக்கூட நான் பணம் கொடுக்க வேண்டுமா? எனக்கு மட்டும் பணம் கொட்டியா வைத்திருக்கிறது? வர வர உங்கள் தொந்தரவுதான் எனக்கு அதிகமாகி விட்டது!" என்று அவர் மனத்தில் உருவாகி யிருந்த தீர்மானம் வார்த்தைகளாக உருவெடுத்து உதிர்ந்தன.

பாவம், சந்திரன் உடல் கூசியது. அவமானம் தாங்காமல் அவன் தலை குனிந்தான்.

சாரதாவுக்கு மெள்ள மெள்ள நினைவு வந்து கொண்டிருந்தது. படுக்கையில் புரண்டாள். தந்தையின் சொற்கள் அவள் காதில் நாராசம் போல நுழைந்தன.

"இதுவரையில் வாங்கிய பணமெல்லாம் திருப்பிக் கொடுத்து விட்டேனே!" என்று மெதுவான குரலில் சொன்னான் சந்திரன். சீனிவாசய்யருக்கு ஆத்திரமும் வெறுப்பும் எல்லையில்லாது பொங்கின.

"நீ கொடுக்கும் பணத்தில் உன் பெண்டாட்டிக்கும் குழந்தைக்கும் இந்தக் காலத்தில் சாதம் போட முடியுமா? யோசித்துப் பார்! போதாதென்று மேலும் ஐந்தும் பத்தும் வந்து கேட்கிறாய்! உங்களுக்கே கொடுத்துக் கொண்டிருந்தால் எனக்கு வேறு குழந்தைகளே இல்லையா? அவரவர்கள் தனிக் குடித்தனம் செய்து பார்த்தால்தான் பணத்தின் அருமை தெரியும். நிலைமைக்குத் தகுந்தவாறு செலவு செய்ய வேண்டும். ஏதோ பெரிய மகாராஜன் வீட்டு மனிதர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!" என்று கத்தினார் சீனிவாசய்யர்.

தந்தையின் கத்தலைக் கேட்ட சாரதா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். சந்திரன் கற்சிலையைப் போல நின்று கொண்டிருந்தான். அவள் இதயம் வெடித்து விடும் போல இருந்தது.

அதற்கு மேல் அங்கு நிற்க விரும்பாதவர் போல் சீனிவாசய்யர் வெளியே போய்விட்டார். சந்திரன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். தந்தையின் செய்கையால் மனம் குன்றிப் போனாள் சாரதா. அன்று சாயந்திரமே சாரதாவை ஜெனரல் ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்தான் சந்திரன். தெய்வத்தின் அருளால் சாரதா பிழைத்தெழுந்து விட்டாள். மறுபடி பிறந்த வீட்டுக்குப் போக அவளுக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை. மாப்பிள்ளையிடம் பேசுவதை அறவே நிறுத்திக் கொண்டார் சீனிவாசய்யர். அவமானமும் மனவேதனையும் சேர்ந்து சந்திரனை மாமனார் வீட்டிலிருந்தே விரட்டின. சென்னையில் தனி அறை வாடகைக்கு எடுத்துக்கொண்டு தனிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்தனர் தம்பதிகள்.

நாளடைவில் சாரதாவை அவளுடைய தகப்பனார் முற்றிலும் மறந்து விட்டார். இரண்டு பெண்களுடன் கோயமுத்தூருக்கு மாற்றலாகிப் போய்விட்டார். கடிதம் கூட அவர் எழுதுவதில்லை.

பணத்தின் உறவில் பாசம் செத்துவிட்டதை எண்ணி எண்ணி ஏங்கினாள் சாரதா. ரோஹிணிக்குக் கோயமுத்தூரில் பிரமாதமாக விவாகம் நடந்தது என்று பேப்பரில் பார்த்ததும் துயரம் அளவு கடந்தது. பெற்ற பெண்ணில்



ஒரு பெண்ணை ஒதுக்கிவிட்டுக் கல்யாணத்தை நடத்திவிட்டார் சீனிவாசய்யர். அவருக்குச் சமமாக உயர்ந்த பதவியில் சந்திரன் இருந்தால் அவனுக்கு அழைப்பு வந்திருக்கும். சந்திரனும் மனம் நொந்தான். பணம் செய்யும் விந்தைகளைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான். நாட்கள் தேய்ந்து உருண்டு வருடங்களை விழுங்கிக் கொண்டிருந்தன.

காலச் சக்கரம் சுழன்றது. அத்துடன் சந்திரனின் அதிருஷ்ட சக்கரமும் சுழன்றது. பிள்ளையில்லாத அவனுடைய மாமா தன் சொத்து அனைத்தையும் சந்திரனுக்கு எழுதி வைத்து விட்டு இறந்தார். சென்னையில் பிரபலமாக விளங்கும் 'பரசுராம் மில்லின்' முதலாளி சந்திரன் பெரிய பணக்காரன் ஆனான். மனைவியை ராணியாக்கி மகிழ்ந்தான். கௌரவமும் மதிப்பும் அவனைத் தேடி வந்தன. செல்வத்தின் மடியில் தவழ்ந்தது அவர்கள் குடும்பம். பங்களா, கார், சமையல்காரன் முதலிய சகல சௌகரியங்களுடனும் வாழ்க்கை நடந்தது.

"அம்மா, நேருஜி நம்ம ஊருக்கு வரப் போகிறாராம். இன்னிக்கி ரேடியோவிலே சொன்னார்கள்!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறிய கண்ணனின் குரல் கேட்டுச் சாரதாவின் சிந்தனை திரும்பியது.

"என்றைக்கு வருகிறாராம்?" என்று கேட்டுக் கொண்டே மகனைத் தன் பக்கம் இழுத்து அணைத்துக் கொண்டாள் சாரதா.



வாங்குபவர் :— இது பழைய கடிகாரம் தானே? இதற்குப் போய் நாற்பது ரூபாய் கேட்கிறாயே! ரொம்ப அநியாயம் அப்பா அது!

விற்க வந்த ஆசாமி :- என்ன ஸார், இப்படிச் சொல்றீங்க? இந்தக் கடிகாரத்தைக் கொண்டு வந்து கொடுக்கிறவங்களுக்கு இனாம் நூறு ரூபாய் கொடுக்கிறதாக விளம்பரம் செய்திருக்காங்களே! நாற்பது ரூபாய் கொடுக்கப்படாதா?

"அடுத்த செவ்வாய்க்கிழமை வரப் போகிறார். ஊர்வலம் கூட நடக்குமாம். என்னை அழைச்சண்டு போய்க் காண்பிக்கிறாயா, அம்மா?" கொஞ்சலுடன் கேட்டான்.

"ஆகட்டும். போய்ச் சாப்பிட்டு விட்டுச் சமர்த்தாகப் படி" என்று சொல்லி விட்டுச் சாரதா இடத்தை விட்டு எழுந்தாள். அவள் மனம் எதிலும் செல்லவில்லை. சரசுவின் கல்யாணத்தைச் சுற்றியே வட்ட மிட்டது. இப்பொழுது நான் பணக்காரி தானே! இந்தக் கல்யாணத்திற்காவது அழைப்பு அனுப்பக் கூடாதா? என்னை மறந்தே விட்டாரே அப்பா! இம்மாதிரி எண்ணங்கள் நெஞ்சில் பொங்கி அலை மோதின. மனசுக்குள் நீறு பூத்திருந்த பாசம் மெள்ளக் கனிந்தது.

கல்யாண நாள் நெருங்க நெருங்கச் சாரதாவுக்குச் சென்னையில் இருப்புக் கொள்ளவில்லை. தந்தையையும் தங்கைகளையும் பார்க்கத் துடித்தது உள்ளம். கணவனிடம் இது பற்றிப் பேசப் பயமாக இருந்தது அவளுக்கு.

அன்று காலை பூஜை அறையில் உட்கார்ந்து சாரதா பூத் தொடுத்துக் கொண்டிருந்தாள். அடுத்த வெள்ளிக்கிழமை சரசுவுக்குக் கல்யாணம். இந்த நினைவு எழுந்ததும் சாரதாவின் கண்களில் நீர் துளித்தது.

"சாரதா! சாரதா! யார் வந்திருக்கிறார்கள் பாரு!" என்று உரத்த குரலில் கூவினான் சந்திரன். பாதி கட்டிய மாலையை அப்படியே வைத்துவிட்டு முன் ஹாலுக்கு வந்தாள் சாரதா. அங்கு உட்கார்ந்திருந்த மனிதரைக் கண்டதும் அவளுக்கு மிகுந்த வியப்பு மேலிட்டது.

"சாரதா, சௌக்கியமா அம்மா?" என்று கேட்டுக் கொண்டே வெற்றிலைத் தட்டை மகளிடம் நீட்டினார் சீனிவாசய்யர். 'அக்கா!' என்று ரோஹிணி மேலே பேச முடியாமல் திண்டாடினாள்.

"அப்பா, இவ்வளவு நாள் கழித்து என் ஞாபகம் வந்ததா?" என்று சாரதா தந்தையின் கைகளைப் பிடித்துக் கொண்டாள். சீனிவாசய்யர் பேசவில்லை. அவர் கண்களில் உணர்ச்சி தாங்காமல் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

"அம்மா, இவாளெல்லாம் யாரு? நீ ஏன் அழறே?" என்ற மகனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டான் சந்திரன்.

"இவர் உன் தாத்தா. இது உன் சித்தி!" என்று பிள்ளைக்கு அறிமுகப் படுத்தினான்.

"தாத்தாவா? அப்படின்னா இன்னொரு சித்தி இருக்கான்னு அம்மா சொல்லுவாளே! அவள் எங்கே?" என்றான் கண்ணன்.

"அந்த சித்திக்குத்தான் கல்யாணம். அவள் ஊரிலே இருக்கா. உங்களை எல்லாம் அழைத்துக் கொண்டு போகத்தான் நான் வந்திருக்கிறேன்" என்று கூறிச் சீனிவாசய்யர் பேரனைத் தம் பக்கமாக இழுத்துக் கொண்டார். தம்பதிகள் இருவரும் பார்த்துக் கொண்டனர். பணத்தினிடையே பாசம் பிறந்து விட்டது என்பது போலிருந்தது அந்தப் பார்வை!

உங்கள் ஈரலை
பைகோலேட்டினால்
உறுதிப் படுத்துங்கள்

**BI-COLATES**

Make sure seal is unbroken

ஸீல் உடைக்கப்படாமலிருக்கிறதா எனக் கவனித்து வாங்கவும்

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்

## S. S. "ரஜூலா"

சென்னை புறப்படும் தேதி — 1952 டிஸம்பர் 8உ
நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1952 டிஸம்பர் 9உ

கப்பல் புறப்படும் தேதியன்று காலை 6 மணிக்கு மேல் சாமான்கள் ஏற்றப்பட மாட்டாது.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள்:

சென்னையிலிருந்து 8-12-52: *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கும் ஸலூன் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

நாகப்பட்டினத்திலிருந்து 9-12-52: *பெர்த் வசதியற்ற டிக்கட்டுள்ளோர் காலை 6 மணிக்கும், ஸலூன் டிக்கட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 8-12-52 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகி விடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டியிருப்பதால் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இனாகுலேஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லும்படியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்
7, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

மதுரா கம்பெனி லிமிடெட்
முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம்

---




'ஆஸ்ப்ரோ' 'ஸீல்டைட்'
பாக்கிங் செய்யப்பட்டு
இருக்கிறதா என்று
பார்த்து வாங்குங்கள்!

3 வில்லைகள் 1½ அணா
30 வில்லைகள் 15 அணா





# பார்த்த முகம்



பரிசுக் கதை : பி. எம். சாந்தோஸ் (பிலிப்பைன்)    மொழிபெயர்ப்பு: வாஞ்சி

**வீ**ட்டுக்குள் நுழைந்த அவனைக் கிழவர் திரும்பிப் பார்க்கவில்லை. இருந்தாலும் காலடிச் சப்தத்திலிருந்து அவன்தான் வருகிறான் என்பதை அவர் தெரிந்து கொண்டார்.

“இருட்டுக்கு முன் வீட்டுக்கு வந்திருக்கக் கூடாதா, ஸித்ரா?” என்று கேட்டார் கிழவர் அவனுடைய முகத்தைப் பார்க்காமலேயே.

அவர் அப்போது அடுப்பில் வெந்து கொண்டிருந்த சோற்றைக் கிளறிக் கொண்டிருந்தார். அவர் வார்த்தைகளில் கண்டிப்பும் கனிவும் ஒருங்கே கலந்திருந்தன.

“கோபித்துக் கொள்ளாதே, அப்பா. எனக்கு நாழிகை ஆனதே தெரியவில்லை” என்றான் ஸித்ரா பரபரப்புடன்.

சாப்பிட்ட பின் இரவு வெகு நேரம் வரையில் தந்தையும் மகனும் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இருவரும் யாரைப் பற்றி எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அவனைப் பற்றி அவர்கள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவனைப் பற்றிப் பேசி ஒருவர் மனத்தை ஒருவர் கிளறி வேதனையை உண்டாக்கிக் கொள்ள அவர்கள் விரும்பாததே அதற்குக் காரணம்.

“அப்பா, இன்னும் யுத்தம் நிற்கவில்லையா?” என்று கேட்டான் ஸித்ரா.

“நிற்கவில்லை. ஆனால், சீக்கிரம் நின்றுவிடும் என்று நினைக்கிறேன்” என்றார் கிழவர்.

“நாம் யுத்தத்தில் ஜெயிப்போமா?”

“ஆம், ஜெயிப்போம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது” என்றார் தந்தை.

“நாம் ஜெயிப்பதாக வைத்துக் கொள்வோம். அதனால் நமக்கு என்ன லாபம்? நமக்கு என்ன நன்மை ஏற்படும்?”

ஸித்ரா கேட்ட இந்தக் கேள்விக்கு என்ன பதில் அளிப்பது என்பது கிழவருக்குச் சங்கடமாகிவிட்டது.

“நமக்கு அதனால் என்ன நன்மை? யுத்தம் முடிந்தால்...சரி, நாழிகை ஆகிவிட்டது. பேசாமல் தூங்கு” என்றார் கிழவர்.

“யுத்தம் முடிந்தால் அவன் வந்துவிடுவான்” என்று சொல்ல வாயெடுத்தார். ஆனால் அவ்விஷயத்தை ஞாபகப்படுத்தினால் அவனுடைய மனவேதனையைக் கிளறுவதாக முடியுமோ என்று எண்ணிக் கிழவர் பேசாமல் இருந்து விட்டார்.

“இன்று அதிக நாழிகை ஆகிவிடவில்லையே. அதற்குள் எப்படித் தூங்க முடியும்?...அப்பா, அது என்ன சப்தம்?” என்று கேட்டான் ஸித்ரா.

“விமானங்களின் சப்தம் போல் இருக்கிறது” என்று விளக்கினார் கிழவர்.

“சப்தம் மிகவும் அதிகமாக இருக்கிறதே! ஏராளமான விமானங்கள் பறந்து செல்லுகின்றனவோ?”

“இருக்கலாம்.”

“நம்முடைய விமானங்களா?”

“நான் எப்படிச் சொல்ல முடியும்? நம்முடையதாக இருந்தாலும் இருக்கலாம்.”

ஸித்ராவுக்குத் தன் தந்தையிடம் பல விஷயங்களைக் கேட்க வேண்டும் போல்

இருந்தது. போர் முனைக்குச் சென்றுள்ள தன் கணவனைப் பற்றிப் பல கேள்விகள் கேட்க வேண்டும் போலிருந்தது. எனினும் கேட்பதற்கு வாய் வரவில்லை. எனவே, அவள் மௌனமாகப் படுத்துக் கொண்டாள்.

எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. விமானங்களின் சப்தம் இப்போது மறைந்து விட்டது. எனினும் காற்றில் மரங்கள் அசையும் சப்தமும் கடல் அலைகளின் சப்தமும் ஸித்ராவின் கொந்தளிக்கும் மனத்தை மேலும் கிளறி அவளை என்னவோ செய்தன.

செல்மோ (ஸித்ராவின் கணவன்) இன்னும் ஏன் போர் முனையிலிருந்து திரும்பி வரவில்லை? அவன் இதற்கு முன் சேர்ந்தாற் போல் இவ்வளவு அதிக காலம் அவளை மறந்து இருந்ததில்லையே!

ஸித்ரா தன்னுடைய கணவனின் பெயரை அடிக்கடி வாய்க்குள் சொல்லிய வண்ணம் கிழவருக்குத் தெரியாமல் மெதுவாக அழுது கொண்டிருந்தாள். தான் அவ்விதம் பெயரைச் சொன்னால், தன் கணவன் எங்கு இருந்தாலும் அவனுடைய காதில் விழலாம் என்பது அவள் நம்பிக்கை!

ஸித்ரா சந்தடி செய்யவில்லையாயினும், அவள் தூங்கவில்லை என்பது கிழவருக்குத் தெரியும். இருந்தாலும் அதை அவர் வெளிக் காட்டிக் கொள்ளவில்லை.

செல்மோ வெகு காலமாகத் திரும்பி வராததைக் குறித்து அண்டை வீட்டுக்காரர்களும் உறவினர்களும் ஸித்ராவிடம் ஓயாமல் தங்கள் கவலையைத் தெரிவித்தனர். கவலையையும் துக்கத்தையும் வெளிக்குத் தெரியாமல் தான் எவ்வளவு மறைத்தாலும், பிறர் அதை அறிந்து கொள்வது அவளுக்கு வெட்கமாக இருந்தது. தன் கணவன் திரும்பி வராததைக் குறித்து அவர்கள் எல்லோரும் உண்மையாகவே கவலைப்படுகிறார்கள் என்று தான் அவள் எண்ணினாள்.

"எனக்காக இத்தனை பேரும் கவலைப்பட்டு மனத்தை அலட்டிக் கொள்வது நியாயமா?" என்று தந்தையைக் கேட்டாள் ஸித்ரா.

"எல்லாம் கடவுள் கிருபைதான், ஸித்ரா! அவர்கள் எல்லாரும் அவ்வளவு அன்பு உள்ளம் படைத்தவர்கள்" என்றார் கிழவர்.

• • •

**அ**ந்தத் தீவை ஒரு நாள் திடீரென்று யுத்தம் சூழ்ந்து கொண்டது. திடீரென்று ஆகாயத்தைப் பிளந்து கொண்டு போர் வந்து விட்டதுபோல் ஜனங்களுக்குத் தோன்றியது. ஆகாயத்தில் ஒரு மேகம்கூட இல்லாமலிருந்தும் எங்கிருந்தோ இடியும் மின்னலும் தோன்றின. கட்டிடங்கள் எரியத் தொடங்கின.

அப்போது தான் ஆகாயத்தில் பறக்கும் பகை விமானங்கள் குண்டுகளை வீசுகின்றன என்பது ஜனங்களுக்குத் தெரிந்தது. அவர்கள் குழந்தை குட்டிகளுடன் அலறிக் கொண்டும் அழுது கொண்டும் அங்குமிங்கும் அலங்கோலமாக ஓட ஆரம்பித்தனர்.

அப்போது ஒரு சோள வயலுக்கு மத்தியில் ஒரு விமானம் எரிந்த வண்ணம் பேரிரைச்சலுடன் கீழே விழுந்தது.

அதைக் கண்ட ஸித்ராவின் தந்தை விமானம் விழுந்த இடத்தை நோக்கி ஓடினார். என்ன நேர்ந்தது என்பது தெரியாமலேயே, ஸித்ராவும் 'செல்மோ' 'செல்மோ' என்று அலறிக் கொண்டு தந்தையைப் பின் தொடர்ந்து ஓடினாள்.

எரியும் விமானத்தைச் சுற்றி ஜனங்கள் நின்று கொண்டிருந்தனர். ஸித்ரா வெறி பிடித்தவள் போல் எல்லோரையும் தள்ளிக் கொண்டு முன்னே சென்றாள்.

மேற்படி விமானத்தின் நாலா புறத்திலிருந்தும் ஜ்வாலை சீறியது. அதிலிருந்து வெளியே தப்பிவர ஓர் இளைஞன் பெரு முயற்சி செய்து கொண்டிருந்தான்.

'செல்மோ' 'செல்மோ' என்று அலறிக் கொண்டு ஸித்ரா விமானத்துக்கு அருகில் சென்றாள். உடனே அவளது தந்தையும் மற்றப் பெண்களும் அவளைப் பிடித்து அப்பால் இழுத்துத் தள்ளினர். அவர்கள் இழுத்துத் தடுத்திராவிடில், ஸித்ரா ஜ்வாலைக்குள் பிரவேசித்திருப்பாள்.

எப்போதும் அவள் செல்மோவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்ததால், விமானத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பவன் செல்மோவாக இருக்குமோ என்ற பிரமை அவளுக்கு ஏற்பட்டு விட்டது!



"பாவம்! அவன் ஒரு சிறு பையன்போல் தோன்றுகிறது. யாராவது அவனுக்கு உதவி செய்யுங்கள்" என்றனர் சில பெண்கள்.

"அவன் பகை விமானி அல்லவா? அவனுக்கா உதவி செய்வது?" என்று சில இளைஞர்கள் சீறிவிழுந்தார்கள்.

"யாராவது சென்று அவரை ஜ்வாலையிலிருந்து காப்பாற்றுங்கள்" என்று கூக்குரலிட்டான் ஸித்ரா.

"கூடாது, கூடாது. அவன் சாகட்டும்" என்றனர் சிலர்.

"நாம் அருகில் சென்றால் திடீரென்று அவன் நம்மைச் சுட்டாலும் சுட்டு விடுவான்" என்று கூறினார் கூட்டத்திலிருந்த ஒருவர்.

விமானியோ ஜனங்களைப் பார்த்துப் பரிதாபமாகக் கையை உயர்த்தினான்.

"அவன் இனிப் பிழைக்க மாட்டான்" என்று அங்கலாய்த்தனர் சிலர்.

"அவனைக் கொல்லுங்கள், அவனைக் கொல்லுங்கள்" என்று வேறு சிலர் கூக்குரலிட்டார்கள்.

அருகில் இருந்த ஒரு இளைஞன் ஒரு பாறைக் கல்லை எடுத்து விமானியின் தலையை நோக்கி வீசி எறிந்தான். நல்ல வேளையாக அது குறி தவறிவிட்டது.

ஸித்ராவின் தந்தை அந்த இளைஞனைக் கோபத்துடன் பார்த்துவிட்டு, ஓடிச் சென்று ஜ்வாலையிலிருந்து அந்த விமானியை வெளியே தூக்கிப் போட்டார். பிறகு மற்றொருவருடைய உதவியின்பேரில் அவர், உயிருக்குப் போராடும் அந்த இளைஞனைத் தன் வீட்டுக்குத் தூக்கிச் சென்றார்.

பகை விமானியை மேற்படி கிழவர் அவ்வாறு காப்பாற்ற முற்படுவதைக் கண்டு சிலர் ஆத்திரம் கொண்டனர். எனினும் அதையெல்லாம் கிழவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

"ஆகாயத்தில் இருக்கும் வரையில்தான் அவன் நமக்கு விரோதி. கீழே விழுந்து காயம் அடைந்தால், அவனுக்கு உதவிசெய்ய வேண்டியது நம் நாட்டின் நற்பெயரில் அக்கறையுள்ள ஒவ்வொருவரின் கடமையும் ஆகும். காயம் அடைந்து குற்றுயிரும் குலையுயிருமாக விழ்ந்து கிடப்பவனைக் கொல்லுவது ஜீவகாருண்யமற்ற, மனிதத் தன்மையற்ற கொடியசெய்கை யல்லவா? நமது விமானிகள் பகை நாட்டில் விமானம் நொறுங்கி விழுவதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் காயமடைந்து உயிருக்கு ஊசலாடும்போது பகை நாட்டினர் அவர்களைக் கொல்ல முற்பட்டால் நம் மனம் என்ன பாடுபடும்?"

இவ்விதம் அந்தக் கிழவர் கூறியதைக் கேட்டுப் பலர் வாயடைத்துப் போயினர்.

* *

கிழவரின் முயற்சியால், பகை விமானியின் காயங்களுக்கு ஒரு நர்ஸ் கட்டுக் கட்டினான். அந்த விமானிக்கு வேண்டிய உணவு முதலியவற்றை ஸித்ரா கொண்டு வந்து கொடுத்



தான். அவ்விதம் செய்தால் தன் கணவன் போர்முனையிலிருந்து யாதொரு காயமுமின்றி உயிர்தப்பித் திரும்பி வந்துவிடுவான் என்பது அவளது நம்பிக்கை!

பகை விமானியான அந்த இளைஞனுக்குப் பல இடங்களில் கடுமையான காயங்கள் ஏற்பட்டிருந்தன. எனவே, அவன் இனி பிழைப்பது அரிது என்பது கிழவருக்குத் தெரிந்து விட்டது. எனினும் அதற்காக அவனுக்குச் சிகிச்சை செய்யாமல் அலட்சியமாக விட்டு விடலாமா?

அந்த இளைஞனால் பேச முடியவில்லை. சைகையினால் கிழவருக்கும் மற்றவர்களுக்கும் தன் நன்றியைத் தெரிவித்தான். அதற்கு மேல் அவன் கூற விரும்பியது என்ன என்பதை அவர்களால் ஊகிக்க முடியவில்லை.

"இவனுடைய முகத்தை எங்கேயோ பார்த்ததுபோல் இருக்கிறது. நீங்கள் எப்போதாவது இவனைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள் ஸித்ரா.

"நாம் இவனைப் பார்த்ததில்லை. இருந்தாலும் இவனை நமக்குத் தெரியும்" என்று கிழவர் கூறியது ஸித்ராவுக்கு ஒரு புதிர் போல் தோன்றியது.

கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட யாவரும் நமக்குத் தெரிந்தவர்கள்தான் என்ற கிழவரின் உயர்ந்த சித்தாந்தத்தை, உலக அனுபவம் இல்லாத ஸித்ரா எவ்வாறு உணர்ந்து கொள்ள முடியும்?

அந்த இளைஞனைப் பார்த்ததும் ஸித்ராவுக்கு அவனது தோற்றம் அகால மரணம் அடைந்த தன் சகோதரனைப் போல் இருந்தது. கிழவருக்கும் தன் பிள்ளையைப் போல் தோன்றியது. அவரது மகன் இப்போது இருந்தால் வயதிலும் தோற்றத்திலும் அந்த இளைஞனைப் போலவே இருப்பான்!

உயிர் பிரியும் தறுவாயில் இருந்த இளைஞன் திடீரென்று கிழவரின் கையைப் பிடித்து அன்புடன் முத்தமிட்டான்.

"இன்னும் சிறிது நேரத்தில் எல்லாம் முடிந்து விடும்" என்றார் கிழவர் மிகுந்த துக்கத்துடன்.

கிழவரின் கையைப் பிடித்திருந்த இளைஞனின் கைகள் தடாலென்று கீழே விழுந்தன.

அதைக் கண்டதும் ஸித்ரா விம்மி விம்மி அழுதாள். கிழவரின் கண்களிலிருந்தும் நீர் ததும்பி வழிந்தது.

"என் வாழ்க்கையில் இரண்டு புதல்வர்களை இழந்தேன். என் ஒரே பெண்ணான ஸித்ரா பிரிவாற்றாமையால் வேதனைப் படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இப்போது என் கையை எடுத்து முத்தமிட்ட இந்த இளைஞனின் பிரிவும் எனக்கு அவ்வளவு துக்கத்தைக் கொடுக்கிறது" என்று கிழவர் அரற்றத் தொடங்கினார்.

நமக்கு அவர்கள் பகைவர்கள்; அவர்களுக்கு நாம் பகைவர்கள். நாம் நம்முடைய சொந்த நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்வதாக நினைக்கிறோம். பகைவர்கள் தங்களுடைய சொந்த நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்வதாக நினைக்கிறார்கள். மேற்படி கடமை உணர்ச்சி போரில் வந்து முடிகிறது. இவர்களில் யார் குற்றவாளி? யார் குற்றவாளி அல்ல? இதை எவர்தான் நிர்ணயமாகக் கூறமுடியும்? இந்த இளைஞனைப்போல் எத்தனை லட்சக் கணக்கானவர்கள் போருக்குப் பலியாகின்றனர்? படுகாயமடைந்து கிடக்கும் ஓர் இளைஞன் தலையில் கல்லைத் தூக்கிப் போடும் அளவுக்கு ஜனங்களிடையே துவேஷத்தைத் தூண்டும் போரின் கொடுமையை என்னவென்று சொல்வது?

இவ்விதமாகக் கிழவரின் சிந்தனைகள் ஓடிக் கொண்டிருந்தன.

ஸித்ராவோ, போர் முனைக்குச் சென்றுள்ள தன் கணவனைப் பற்றிய நினைவில் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள்.

இந்த இளைஞனின் மனைவியும் தன்னைப் போல் எந்த ஊரில் துடித்துக் கொண்டிருக்கிறாளோ? அவள் மாத்திரமா? போர்முனைக்குச் சென்றுள்ள கணவன்மாரின் பிரிவாற்றாமையால் இன்னும் எத்தனை லட்சக் கணக்கான பெண்கள் சோகத்தில் ஆழ்ந்திருக்கிறார்களோ? உலகத்தில் போரைக் காட்டிலும் மானிட வர்க்கத்துக்குப் பயங்கரமான ஒரு விஷயம் வேறு எதுவும் இல்லை. போர் காரணமாக எத்தனை குடும்பங்கள் சிதைந்து சீர்குலைகின்றன? இரத்த வெள்ளம் ஓடும்படி செய்யும் கொடிய போர் கண்ணீர் வெள்ளமும் ஓடும்படி செய்கிறது.

இத்தகைய சிந்தனைகளால் ஸித்ராவின் உடல் நடுங்கியது.



பிரசங்கி (தலைவருக்கு நிறைய மாலையைப் போட்டு விட்டு):— சபையோர்களே, நமது மாபெரும் தலைவர் அவர்களின் திரு முகத்தை நேரில் பார்க்கும் பாக்கியம் இப்பொழுதுதான் நமக்குக் கிடைத்திருக்கிறது!













MILK
OF
MAGNESIA




ஐஸ் போட்ட சர்பத் ஒன்றை வாங்கிக் குடித்து விட்டுக் கயிற்றில் தொங்கிய ஒரு வாரப் பத்திரிகையை எடுத்துப் பிரித்துக் கொண்டே பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்தார் ஒரு கண்ணாடிக்காரர்.

"சில்லறை இல்லை, ஸார்!" என்று மாடசாமி சொன்னது அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. ஏனெனில் அவர் பத்திரிகையில் ஆழ்ந்து விட்டார்.

மாடசாமி நோட்டை வாங்கிச் சில்லறைப் பெட்டியில் போட்டு விட்டு வியாபாரத்தைக் கவனிக்கலானான்.

ரயிலுக்குப் போகிற கூட்டம் ஒருவாறு கலைந்ததும் அவன் கண்ணாடிக்காரரைக் கவனித்தான். அவர் பிளாட்பாரத்துத் தூண் ஓரத்தில் கிடந்த பெஞ்சியில் உட்கார்ந்து பத்திரிகையில் புதைந்திருந்தார்.

அவருக்குச் சில்லறை கொடுப்பது எப்படி என்று மாடசாமி யோசித்தான். கடை முதலாளி ராமையா கல்லாப் பெட்டியைப் பூட்டி விட்டுப் போயிருந்தார். தட்டில் கிடந்த சில்லறையெல்லாம் மூன்று ரூபாய்க்கு மேல் இராது. வேறு எங்காவது போய் நோட்டை மாற்றி வரலாமென்றாலும்......வேறு எங்கு போவது? அந்த ஸ்டேஷனுக்குள் இருந்தது இன்னும் ஒரு டீக் கடை மட்டும்தான். அந்த டீக் கடை நாயர் சில்லறை இருந்தாலும் கொடுக்க மாட்டான்.

அவரிடமே நோட்டைக் கொடுத்து விட்டுச் சில்லறை கொடுக்கும்படி கேட்டாலென்ன என்று மாடசாமிக்குத் தோன்றியது.

அவரிடம் சில்லறை இருந்தால் நோட்டை ஏன் கொடுக்கிறார் என்ற நினைவும் அத்துடன் கூடவே எழுந்தது.

சில்லறை இல்லாவிட்டால் பத்திரிகையையாவது திரும்ப வாங்கிக் கொள்ளலாம். சர்பத் சாப்பிட்டதற்கு......?

இப்படி யோசனை செய்து கொண்டிருந்தான் மாடசாமி.

மதுரை பாஸஞ்சர், தான் புறப்படுவதற்கு முன்னறிவிப்பாக ஒரு முறை ஊதிற்று.

இந்தச் சமயத்தில், நாயர் கடையில் காப்பி சாப்பிட்டுவிட்டு வந்த ஒரு பிரயாணி ஒரு அணாவைக் கொடுத்து வெற்றிலைப் பாக்கு கேட்டார். அவருக்கு வெற்றிலை எடுத்துக் கொடுத்துக் கொண்டிருக்கும்போதே மதுரை வண்டி நகர்ந்தது. அப்போது பத்திரிகை பார்த்துக் கொண்டிருந்த கண்ணாடிக்காரர் திடீரென்று எழுந்து, வாரிச் சுருட்டிக் கொண்டு வண்டியை நோக்கி ஓட ஆரம்பித்தார். நோட்டைக் கொடுத்தவர் பாக்கிச் சில்லறை வாங்காமல் போவதைப் பார்த்த மாடசாமி அவரைக் கூப்பிட யத்தனித்தான். அதற்குள் ஓடிக்கொண்டிருந்த வண்டியில் அவர் தாவி ஏறிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்று விட்டார். வண்டி போய் விட்டது.

கடைக்குச் சேர வேண்டிய ஆறணாப் போக, ஒன்பது ரூபாய் பத்தணா அனாமத்தாகப் பெட்டியில் கிடந்தது. அதை என்ன செய்வது? முதலாளி வந்ததும் விஷயத்தைச் சொல்லி அவரிடம் கொடுத்து விடுவதா?

அல்லது......

மாடசாமியின் மனசில் ஆயிரம் யோசனைகளும், புனராலோசனைகளும் எழுந்து எழுந்து குமைந்தன.

மாடசாமி சுமார் பத்து வருஷங்களுக்கு முன், டிக்கட் இல்லாமல் அந்த ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தான். அவன் அங்கே இறங்க வேண்டுமென்ற உத்தேசத்தோடு வரவில்லை. அந்த டிக்கட் பரிசோதகர் அவனை அங்கே இறக்கி விட்டு விட்டார்.

அவன் பரக்கப் பரக்க விழித்துக் கொண்டு பிளாட்பாரத்தில் நின்றபோது, பெட்டிக் கடை ராமையா அவனைப் பார்த்தார்.

"வாடா, அப்பனே! எங்கிருந்து வருகிறாய்?" என்று பரிவுடன் கேட்டார்.

"தென்காசியிலிருந்து!" என்று கணீரென்று பதில் சொன்னான் மாடசாமி.

ராமையா கட கட வென்று சிரித்து விட்டு, அவனை அருகில் அழைத்தார். அவனுடைய ஊர், பெயர், விவரம் எல்லாவற்றையும் அன்புடன் விசாரித்தார். பையனுடைய கவர்ச்சியான தோற்றமும், துடுக்கான பேச்சும், அவருக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. தன்னுடைய தாயும் தந்தையும் இறந்து விட்டார்கள் என்றும், எங்காவது போய் வேலைசெய்து பிழைத்துக் கொள்ளலாமென்று புறப்பட்டதாகவும் அவன் சொன்னான்.

அவன் பசியோடிருப்பதை அறிந்து நாயர் கடையிலிருந்து இரண்டு தோசைகள் வாங்கிக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார்.

அன்று முதல் அந்தப் பெட்டிக் கடைக்கு எடுபிடி வேலை செய்து கொண்டு ராமையாவின் ஆதரவில் வளர்ந்து வந்தான் பையன்.

மாடசாமி கொஞ்சம் பெரியவனான பிறகு சில சமயம் அவனைக் கடையிலிருத்தி வியாபாரத்தைக் கவனிக்கச் சொன்னார் ராமையா.

மாடசாமியும் இரவிலேயே பெட்டிக் கடைக்காரனாக இருந்தான். இந்தப் பத்து வருஷ காலமாக எஜமான விசுவாசத்துடனும் காசு விஷயத்தில் கறை கண்டிப்பாகவும் நடந்து வந்தான் மாடசாமி. இதுவரை அவனுக்கு வேண்டியிருந்ததெல்லாம் வயிற்றுக்கு உணவும், உடுத்திக் கொள்ளத் துணியுமே. இதற்கு ராமையா எவ்விதக் குறைவும் வைக்கவில்லை. மற்றபடி மாடசாமியின் வீடு, வாசல், படுக்கை நடமாட்டம் எல்லாம் அந்தப் பெட்டிக் கடையும் பிளாட்பாரமும்தான்.

ஆனால் கொஞ்ச காலமாக மாடசாமியின் மனசில் ஒரு குறை ஏற்பட்டிருந்தது. தன்னுடைய உழைப்புக்குத் தகுந்த ஊதியம் ராமையா கொடுக்கவில்லை யென்பதுதான் அந்தக் குறை. எத்தனை காலத்துக்குத்தான் இப்படியே வயிற்றுக்கு மட்டும் உழைப்பது? நாலு பேரைப் போல் வீடு, வாசல், சம்பாத்தியம், குடித்தனம் என்று தானும் இருக்க வேண்டாமா?

கடை நல்ல லாபத்தில்தான் நடந்து வந்தது. இதிலிருந்து கிடைத்த வருவாயைக் கொண்டு பஜாரில் ஒரு 'ஷாப்' திறக்கும் நிலையிலிருந்தார் ராமையா. இவ்வளவு உண்மையுடன் உழைக்கும் தனக்கு 'இந்தா, ஒரு ஐந்து ரூபாய் சம்பளம்' என்று கொடுக்க அவருக்கு மனசு வரவில்லையே என்று மனம் புழுங்குவான் மாடசாமி.

அதிலும் நாலு தினங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் ஒன்று மாடசாமியின் மன நிலைக்கு முத்தாய்ப்பு வைத்தது போலிருந்தது.

**மா**டசாமியின் தாய் மாமன், குடும்பத்துடன் பழனிக்குப் போகிறவர் அன்று அவனை அகஸ்மாத்தாகச் சந்தித்தார். மாடசாமியைக் கண்டவுடன் அளவற்ற மகிழ்ச்சியுடன் க்ஷேம சமாசாரங்களை விசாரித்து விட்டு, உடனே பக்கத்திலிருந்த மனைவியையும் மகளையும் அழைத்துக் கொண்டு வந்தார். அவர்கள் எல்லாரும் வண்டி மாறுவதற்காக அங்கே இறங்கியிருந்தார்கள்.




"அட நிறுத்தப்பா! தலையிலே பிளாஸ்திரி போட்டுண்டா பெரிய 'கிங்காங்' ஆயிட்டதா எண்ணமோ?"

அத்தையைக் கண்டவுடன் மாடசாமி கை கூப்பிவிட்டுப் பக்கத்தில் நின்ற பெண்ணைப் பார்த்து, "இது நம்ம கோமதி யில்லையா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

பத்து வருஷங்களுக்கு முன் பரட்டைத் தலையுடன் பாவாடை கட்டிக் கொண்டிருந்த போது அவளை அவன் பார்த்திருந்தான். இப்போது அவள் எப்படி வளர்ந்து ஒரேயடியாக உருமாறிப் போயிருந்தாள்!

"ஆமப்பா; உன் கோமதிதான்" என்று அவர் சொல்லி விட்டுச் சற்று நேரம் அர்த்த புஷ்டியான மௌனம் சாதித்தார்.

கோமதி இதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டவள் போல் உடனே தன் தாயார் பின்னால் போய் மறைந்து கொண்டாள்.

பின்பு அவர்கள் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, இன்னும் பதினைந்து தினங்களில் திரும்பி வரும்போது அவனைப் பார்ப்பதாகச் சொல்லிப் போய்விட்டார்கள்.

அவர்கள் திரும்பி வரும்போது கோமதிக்குத் தனது அன்பளிப்பாக ஒரு அருமையான ஆறு கஜம் புடவை வாங்கி மாமனிடம் கொடுக்க வேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டான் மாடசாமி.

இதற்கு வேண்டிய ஒரு பத்து ரூபாய் இவ்வளவு நாள் உழைத்ததற்காக ராமையாவிடம் கேட்டால் கொடுக்க மாட்டாரா?

இதை மெள்ள அன்று ராமையாவிடம் கேட்டும் விட்டான் மாடசாமி.

"பணம் ஒன்றும் இப்போது கிடையாது, அப்பனே! போய் வேலையைக் கவனி!" என்று நிர்த்தாட்சண்யமாகச் சொல்லி விட்டார் ராமையா.

மாடசாமிக்கு மனசு இடிந்து விட்டது. அவருக்கு வேண்டியது வேலை. மற்றவர்களுடைய ஆசாபாசங்களைப்பற்றி என்ன கவலை? அதற்கெல்லாம் அவனவனுக்கு என்று நாலு காசு கையிலிருந்து......

மாடசாமியின் கண்கள் பெட்டியில் கிடந்த பத்து ரூபாய் நோட்டைப் பார்த்தன. அவனுடைய ஆசையைப் பூர்த்தி செய்யத் தெய்வமே கொடுத்தது போல் பத்து ரூபாய் அநுமத்தாகக் கிடந்தது. அதை எடுத்து வைத்துக் கொண்டாலென்ன? வேண்டுமானால் கடைக்குச் சேரவேண்டிய ஆறணாச் சில்லறையைப் பெட்டியில் போட்டு விடலாம். மற்றபடி இதனாலே ராமையாவுக்கு என்ன நஷ்டம்? மாடசாமி அந்த நோட்டைக் கையால் எடுத்தான். அது பளபளவென்று புதுமை குலையாமல் அழகாக இருந்தது.




அதைப் பார்க்கப் பார்க்க அவனுடைய நெஞ்சு 'திண், திண்' என்று வேகமாக அடித்துக் கொண்டது.

மாடசாமியின் மனசு இப்போது வேறு திசையில் திரும்பிற்று.

ஒரு வேளை அந்தக் கண்ணாடிக்காரர் நாளை ரயிலில் திரும்பி வருபவராக இருந்து ராமையா இருக்கும் போது வந்து இதைப் பற்றிக் கேட்டு விட்டால் என்ன செய்வது?

கையிலிருந்த நோட்டைப் பெட்டியில் போட்டு விட்டு மாடசாமி மீண்டும் யோசித்தான்.

அவ்வளவு திட்டமாக அவர் இங்கே வந்து எப்படிக் கேட்க முடியும்? இப்பேர்ப்பட்ட மறதிப் பேர்வழி அதை வேறு எங்கேயாவது ஏன் தொலைத்திருக்கக் கூடாது?

"இங்கே ஒன்றும் நீங்கள் ரூபாய் நோட்டு கொடுக்கவில்லை, ஸார்!" என்று முழுப் போடாகப் போட்டு விட்டால் அவரால் என்ன பண்ண முடியும்? தவிர அவர் நாளைக்கே வந்து—அதுவும் ராமையா இருக்கும் போது கேட்கப் போகிறார் என்பதுதான் என்ன நிச்சயம்?

அந்தப் பத்து ரூபாய் நோட்டு மாடசாமியின் கண்ணைப் பறித்தது. அவன் மனசைக் கொக்கி போட்டு இழுத்தது. அதைச் சட்டென்று எடுத்து மடித்துக் கைக்குள் வைத்துக் கொண்டான் மாடசாமி.

......ஒரு வேளை அவர் வந்து கேட்டு விட்டால்?

மாடசாமியின் பொல்லாத மனசு ஆசையையும் இளப்பி விட்டு, பிறகு எதிர்வாதமும் பேசிற்று. அவன் களைத்துப் போனவன் போல 'உஸ்' என்று வாயால் பெருமூச்சு விட்டான்.

"அதுதான் ஒரே போடாக......

அவர் அதை ஒப்புக் கொள்ளாத பிடிவாதக்காரப் பேர்வழியாக இருந்தால்...... சச்சரவு வலுக்கிறது—நாலு பேர் கூடுகிறார்கள். அந்த டீக் கடை நாயர் வலிய முன்னால் வந்து 'என்ன ராமையா! இவ்வளவு பெரிய மனிதர் சும்மா பொய் சொல்வாரா?' என்று பரிந்து பேச வருகிறான். அப்பொழுது என்ன செய்வது?

இதையெல்லாம் பார்க்கும்போது ராமையா என்ன நினைப்பார்? இத்தனை காலமாகக் களங்கமற்ற நம்பிக்கையுடனிருந்தவர் என்ன சொல்வார்......?

மாடசாமியின் மனசு 'கிர்' என்று பத்து வருஷங்களைக் கடந்து சென்றது. அவன்

# பிரபல டாக்டர்



டாக்டர் கந்தசாமியைப் பற்றிக் கேள்விப் படாதவர் இருக்க முடியாது. அவ்வளவு பிரபலமான டாக்டர்; கைராசிக்காரர் என்று ஊர் எல்லாம் பேச்சு. ஆறுமாசப்பட்ட வியாதியெல்லாம், அவர் கலந்து கொடுக்கும் வெப்புத் தண்ணீருக்கும் பச்சைத் தண்ணீருக்கும் பயந்து அலறி யடித்துக் கொண்டு ஓடி விடுமாம்.

ஒரு நாள் அவரிடம் திருவாளர் பொன்னம்பலம் வந்தார். அவர் கையில் ஏதோ கட்டி மாதிரியிருந்தது. வலி பொறுக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். வெகு நேரம் கழித்து டாக்டர் வந்து பார்த்தார். "இது ஒன்றும் பிரமாதமில்லை. சும்மா, வெந்நீர் ஒத்தடம் கொடுங்கள். இரண்டு நாளில் சரியாகப் போய்விடும்" என்றார்.

பொன்னம்பலம் அவர் சொன்னதைக் கேட்டுக் கொண்டு வீட்டுக்கு வந்தார்.

பொன்னம்பலம் தமது சமையற்காரனிடம் ஒரு பாத்திரத்தில் வெந்நீரும் பஞ்சும் கொண்டு வரச் சொன்னார். சமையற்காரன் "எதுக்குங்க!" என்று கேட்டான்.

"கையிலிருக்கிற கட்டிக்கு வெந்நீர் ஒத்தடம் கொடுக்கத்தான்" என்றார் பொன்னம்பலம்.

"கட்டிக்கு வெந்நீர் ஒத்தடமா! கூடவே கூடாதுங்களே! வெந்நீர் ஒத்தடம் கொடுத்தால் கட்டி பழுத்துப் பெரிசாகப் போய்விடுமே! வேண்டாம். குளிர்ந்த தண்ணீரில் நனைத்த துணியை வைத்துக் கட்டுங்கள். இரண்டு நாளில் குணமாகி விடும்" என்றான்.

அவனே அந்த வைத்தியமும் செய்யத் தொடங்கி விட்டான். பொன்னம்பலம் என்ன செய்வார் பாவம், வைத்தியத்துக்கு உட்படுவதைத் தவிர.

மூன்றாவது நாள் காலை ஸ்ரீமான் பொன்னம்பலம் டாக்டர் கந்தசாமி வீட்டுக்குப் போனார். வழக்கம் போல் நோயாளிகள் கூட்டம் அதிகமாயிருந்தது. இருந்தாலும் டாக்டர் கந்தசாமி, பொன்னம்பலத்தைப் பார்த்ததும் "என்ன ஸார்! கட்டி எப்படியிருக்கிறது!" என்று கேட்டார்.

"கட்டி குணமாகி விட்டது!" என்றார் முகத்தில் சந்தோஷம் பொங்க.

"தேவலையே! பேஷ்!!" என்றார் டாக்டர்.

உடனே பொன்னம்பலம் "ஆனால்..." என்றார்.

"என்ன ஸார்! ஆனால்...?" என்றார்.

"நீங்கள் சொன்னபடி வெந்நீர் ஒத்தடம் கொடுக்கவில்லை. என் சமையற்காரன் வெந்நீர் ஒத்தடம் கொடுத்தால் கட்டி இன்னும் பெரிசாகி விடும்; குளிர்ந்த தண்ணீர் ஒத்தடம்தான் கொடுக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தான். அதனால் அவன் இஷ்டப்படியே விட்டு விட்டேன்!" என்றார் பொன்னம்பலம்.



டாக்டர் ஏதோ யோசித்தவாறே, "என் சமையற்காரன் கட்டிகளுக்கு வெந்நீர் ஒத்தடம் கொடுக்க வேண்டும் என்று சொல்வான். அதனால் தான் சொன்னேன்..." என்றார். -வேந்து

கண்கள் எதிரேயிருந்த கம்பித் தூணைப் பார்த்தன. அங்கே தான் அவன் அனாதையாக வந்து நின்றான். இதே இடத்தில் நின்று கொண்டு தான் "வாடா, அப்பா!" என்று ராமையா அன்புடன் அவனைக் கூப்பிட்டு ஆதரவு அளித்தார்.

அதே ராமையா 'போடா வெளியே!' என்று இப்போது கண்களில் தீ பறக்கக் கத்துவது போன்ற பிரமை ஒரு கணம் அவனுக்கு ஏற்பட்டது. அப்படிப்பட்ட நிலையை நினைக்கக் கூட அவன் மனசு நடுங்கிற்று. கையிலிருந்த ரூபாய் நோட்டைப் பெட்டியில் போட்டு விட்டு ஒரு பெருமூச்சுடன் உட்கார்ந்தான் மாடசாமி.

அவனுடைய முகமெல்லாம் வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. சர்வ சுதந்திரமாக ஒரு டம்ளரில் சர்பத் போட்டுக் குடித்து விட்டு நிம்மதியாக உட்கார்ந்தான்.

சற்று நேரத்தில் வெளியே இருந்து வந்த ராமையா சில்லறைப் பெட்டியைப் பார்த்து விட்டு, "ஏதப்பா! அரைமணி நேரத்துக்குள் பத்து ரூபாய்க்கு மேல் என்ன வியாபாரம் நடந்தது?" என்று கேட்டார்.

மாடசாமி நடந்த விஷயத்தை விஸ்தாரமாகச் சொன்னான்.

ஆனால் ராமையா இதில் சிரத்தையில்லாதவர் போல் சாதாரணமாகக் கேட்டுவிட்டுப் பேசாமல் போனது மாடசாமிக்குச் சிறிது ஏமாற்றமாகவே இருந்தது.

★

சுமார் ஒரு வாரத்துக்குப் பிறகு ராமையா இன்னொரு ஆசாமியுடன் கடைக்கு வந்தார். அவருடைய முகத்தில் சந்தோஷம் பொங்கிக் கொண்டிருந்தது. "மாடசாமி! நானும் இவரும் சேர்ந்து பஜாரில் ஒரு புதுக் கடை ஆரம்பிக்கப் போகிறோம். இந்தக் கடை இனி உன் பொறுப்பு. லாபத்தில் பாதிப் பங்கு உன்னைச் சேர்ந்தது. என்ன சொல்கிறாய்? உனக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டார் ராமையா.

மாடசாமிக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. அவனுக்கு உச்சியில் ஒரு குளிர் ஏற்பட்டு உள்ளங்கால் வரை பரவிக் கொண்டிருந்தது. அவன் கைகள் தாமாக எழுந்து ராமையாவை நோக்கிக் கூப்பின. அவனுக்கு ஏற்பட்டிருந்த பரவசத்தில் ராமையாவுடன் நின்றிருந்த ஆசாமி அதே கண்ணாடிக்காரர்தான் என்பதைக் கூடக் கவனிக்கவில்லை.







அறிவாளி!
ஸெவன் ஓ'க்ளாக்
ஸ்லாட்டெட்
பிளேடுகளினால்
தினசரி முகத்தை
க்ஷவரம் செய்து
கொள்கிறார்.



# ஸெவன் ஓ'க்ளாக்
## ஸ்லாட்டெட் பிளேடுகள்

முகத்தைச் சுத்தமாக க்ஷவரம் செய்திருப்பது முன்னேற்றத்தின் அறிகுறியாகும். ஆனால் தினசரி க்ஷவரம் செய்து வருதல் அவசியம். நாவிதரைக் கொண்டு க்ஷவரம் செய்வதால் அதிகச் செலவு நேரிடும்.

ஆனால், தினமும் சிக்கனமான முறையில், சுத்தமாக க்ஷவரம் செய்து கொள்வதற்கு ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகள் கிடைத்திருப்பது ஓர் அதிர்ஷ்டமே. ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகள் அதி கூர்மையானவை, சுத்தமாக க்ஷவரம் செய்பவை, நெடுநாள் உழைப்பவை, உண்மையான சிக்கனம் வாய்ந்தவை.

வெற்றியடைந்த, வசீகரத் தோற்றமுடைய, மனிதர்களோடு சேர்ந்து கொள்ளுங்கள்! தினசரி ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகளினால் க்ஷவரம் செய்யுங்கள்.

# 7 o'clock

ஸெவன் ஓ' க்ளாக் ஸ்லாட்டெட் பிளேடுகள்




10 ப்ளேடுகள் கொண்ட
பாக்கெட் ரூ. 1

S3(1) TAM.




## 16. ஆபத்தும் ஆராய்ச்சியும்

மாதவி அப்பொழுது பார்த்த உருவம் வேறு யாரும் இல்லை. சந்தேகமும், முரட்டுத்தனமும் கொண்ட கோவிந்தன்தான். கோவிந்தன்தான் என்பது தெரிந்ததும் அவள் மனத்திலிருந்த பயமும் நடுக்கமும் மறைந்து, கோபமும் ஆத்திரமும் பொங்கி எழுந்தன.

"நான் நினைத்தபடியேதான் ஆயிற்று. எனக்குத் தெரியும், இன்று ராத்திரி நீ அந்த நாடோடிப் பசங்கள் வைக்கிற விருந்தை வேடிக்கைப் பார்க்கப் போவாயென்று. நான் நினைத்தபடியேதான் நடந்து விட்டது. உனக்கு அந்த முரட்டுப் பொறுக்கிப் பயல் சிங்காரத்திடம் ஒரு மோகம் விழுந்திருக்கிறது என்பதும் எனக்குத் தெரியும்" என்றான் கோவிந்தன் தன்னுடைய திறமையால் ஒரு ரகசியத்தை கண்டு பிடித்து விட்டவன்போல்.

"அதைப்பற்றி உனக்கென்ன! என் கையை மரியாதையோடு விட்டு விடு. இல்லாவிட்டால்..." என்று சீறினாள் மாதவி.

"அவ்வளவு படபடப்பாகப் பேசாதே, மாதவி. இப்போது நீ என் கையில் சரியானபடி சிக்கிக் கொண்டிருக்கிறாய் என்பதை மறந்து விடாதே. நாளையதினம் நான் உன் தாத்தாவிடம் நம் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பேசி ஒரு முடிவு செய்யப் போகிறேன். ஆனந்தனுக்கு உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லை என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆகையால் முறைப்படி நான்தான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டியவன். உண்மையை உணர்ந்து நான் சொல்கிறபடி கேளு......" என்று அவளிடம் சமாதானமாகப் போகிறவன் போல் அவளைத் தன்னோடு அணைத்துக் கொள்ள முயற்சித்தான் கோவிந்தன்.

அந்தச் சமயத்தில் அவனிடமிருந்து மீளுவதற்குச் சரியான வழி எது வென்று யோசித்தாள் மாதவி. பிறகு சட்டென்று தன் இடையிலிருந்து எதையோ எடுத்தாள். நிலவு வெளிச்சத்தில் அவள் கையிலிருந்த அந்தச் சிறிய கத்தி பளபளவென்று மின்னியது. கோவிந்தன் அந்தக் கத்தியைக் கண்டதும் "ஹா......" என்று கூச்சலிட்டான்.

"மரியாதையோடு என் கையை விட்டு விடு. இல்லாவிட்டால் இந்தக் கத்தி உன் நெஞ்சில் ஏறும்" என்றாள் மாதவி, கத்தியை அவன் கழுத்துக்குச் சமீபமாகக் கொண்டு போய்.

கோவிந்தன் மாதவியின் கையிலுள்ள கத்தியைக் கண்டு உண்மையிலே பயந்து விட்டான். ஆனால் அவன் தன் பயத்தை வெளியே காட்டிக் கொள்ளாமலிருக்கப் பிரயத்தனப் படுகிறவன் போல் ஒரு சிரிப்புச் சிரித்தான். மாதவியின் கையை விடாமலேயே, "இதென்ன மாதவி! இந்தமாதிரி வேடிக்கை யெல்லாம் நீ இதற்கு முன் செய்ததில்லையே......! திடீரென்று உனக்கு ஏன் இந்த விளையாட்டில் பிரியம் வந்தது! உனக்கு எதற்கு இந்தமாதிரி முரட்டு ஆயுதங்களெல்லாம்......!" என்றான். மங்கிய நிலவின் ஒளியில் அப்பொழுதுதான் அவள் உடுத்தியிருந்த உடையைக் கவனித்தான். "ஓ, அப்படியா! இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. நீ அந்த நாடோடிகள் மாதிரியே உடை உடுத்திக் கொண்டிருக்கிறாயே......! அதற்குத் தகுந்தாற்போல் இந்த ஆயுதமும் உன் கையிலே இருக்க வேண்டியது நியாயம்தான். அந்தக் காட்டுமிராண்டிக் கூட்டத்தை விட்டுத்தான் நீ வந்து விட்டாயே! இனிமேல் உன் கையில் கத்தி எதற்கு! அதை வீசி எறிந்து விடு......" என்றான்.

திடீரென்று அவர்கள் இருவருடைய கவனத்தையும் கவர்ந்தது இன்னொரு காலடி ஓசை! அவர்கள் இருவரும் திரும்பிப் பார்த்தனர். ஆனந்தன் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவர்களுக்குச் சமீபமாக வந்து இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு

அவன். "இந்த வேளையில் இந்த இடத்தில் உங்களுக்குள் என்ன சச்சரவு! இவன் உன்னை ஏதாவது தொந்திரவு செய்தானா, மாதவி!" என்று கேட்டான் சம்சயத்தோடும் பதட்டத்தோடும்.

மூன்றாவதாக ஒருவன் அவர்களிடையே வந்து நுழைந்தபோது கோவிந்தன் தன் உணர்ச்சிகளைச் சிறிது மாற்றிக் கொள்ள வேண்டியிருந்தது. அவன் மெதுவாகத் தன் பிடியிலிருந்து மாதவியின் கையை நழுவ விட்டான். மாதவி சட்டென்று நகர்ந்து நின்று கத்தியை மறுபடியும் தன் இடையில் செருகிக் கொண்டாள். "முரட்டுத்தனமாக என்னைக் கெடுக்க வேணும் என்று நினைக்கிறவர்களுக்கு நான் நல்ல புத்தி கற்பிக்க வேண்டாமா, அத்தான்...!" என்றாள் ஆனந்தனைப் பார்த்து.

அப்பொழுது அங்கே என்னதான் நடந்திருக்குமென்று ஆனந்தன் உணர்ந்து அறிந்து கொண்டான். "அந்த நாடோடிகளின் பழக்கத்தினால் அவர்கள் முரட்டுத்தனமெல்லாம் உனக்கும் வந்திருக்கிறது, மாதவி. நீ இப்பொழுது அந்தக் கருத்தில்தான் எதையும் செய்யத் துணிந்திருக்கிறாய் என்று நினைக்கிறேன்" என்றான் ஆனந்தன்.

"அந்தக் கருத்து எனக்கு இல்லை. ஆனால் என்னை நான் பாதுகாத்துக் கொள்ள வேண்டாமா!......இப்பொழுது சொல்கிற வார்த்தை, அத்தான்! மறுபடியும் இவன் என் வம்புக்கு வரக்கூடாது. அப்படி வந்தால் நிச்சயம் ஒரு நாள் இவனைக் கொன்று விடுவேன்" என்றாள் மாதவி ஆவேசத்துடன்.

மாதவி மிகுந்த கோபத்தோடும் ஆவேசத்தோடும் இருப்பதை ஆனந்தன் தெரிந்து கொண்டான். தன்னுடைய திறமையாலும் வார்த்தைகளினாலும் மாதவிக்குச் சமாதானம் ஏற்படும்படி செய்ய நினைத்தான். "அந்த நாடோடிகளின் போக்கே அச்சமாய் இருக்கிறது. அவர்களெல்லாம் நம்மைப்போல அல்ல, மாதவி! இந்த வேளையில் அவர்களுடைய விருந்திற்குச் சென்று வேடிக்கை பார்க்க வேண்டுமென்று உனக்கு ஆசை தோன்றியதுதான் விநோதம். எங்களையெல்லாம் விட அவர்களோடு நெருங்கிப் பழக உனக்குத் துணிச்சல் இருக்கிறது. நீ அவர்களைப் போல உடை யணிந்திருப்பதைப் பார்த்தால் உண்மையாக நீயும் அவர்களைச் சேர்ந்தவளோ என்று கூடத் தோன்றுகிறது. உனக்கு இருக்கும் ஆசையில் நீ அவர்களோடு போய்ச் சேர்ந்து விடுவாயோ என்றுகூட எனக்கு அச்சமாய் இருக்கிறது..." என்றான்.

"நான் அவர்களை நாடிப்போனாலும் என்னை ஏற்றுக் கொள்ள அவர்கள் சித்தமாய் இருக்கிறார்கள். எனக்கு அவர்களோடு பழகும்போது ஏற்படும் ஆனந்தம் வீட்டில்கூட ஏற்படுவதில்லை. என்னுடைய ஆசை முழுவதும் திறந்த வெளியில் நிலவில் சுதந்திரமாகவும் கட்டுப்பாடு இல்லாமலும் ஓடியாடி வாழவேண்டும் என்பதுதான். அநேக சமயங்களில் நானும் அவர்களைச் சேர்ந்த பிறவிதானோ என்றுகூட எனக்குத் தோன்றுகிறது......" என்றாள் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே.

அதைக் கேட்ட ஆனந்தன் அவளைப் பச்சாத்தாபத்தோடு ஒருமுறை பார்த்தான்.

"ஆமாம். உண்மையிலேயே அவள் ஒரு நாடோடிதான்" என்று சொல்லிவிட்டுக் கோவிந்தன் அந்த இடத்தை விட்டுச் சிறிது தூரத்தில் நகர்ந்து நின்றான்.

ஆனந்தன் மாதவியை வீட்டில் கொண்டுபோய் விட்டு விட்டுத் திரும்பி வந்தான். பிறகு கோவிந்தனும் அவனும் பேசிக்கொண்டே வீட்டை நோக்கி நடந்தனர். "மாதவிக்கு இவ்வளவு கோபம் வரும்படியாக நீ என்ன செய்தாய் என்றுதான் எனக்கு விளங்கவில்லை. பிறருடைய அன்பைப் பெறும் வழியே உனக்குத் தெரியவில்லை. நீ உலகத்தில் இன்னும் ரொம்பப் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும். பெண்களிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதே உனக்குத் தெரியவில்லை. உன்னை விரும்பாத பெண்களிடம் நீ நெருங்கவே கூடாது. மாதவி உனக்குக் கெடுதலை உண்டாக்க நினைத்திருக்க மாட்டாள் என்பதுதான் என் அபிப்பிராயம். நீ தான் அவளுக்கு ஏதோ கெடுதல் செய்ய முயற்சி செய்திருக்கிறாய்..." என்றான் ஆனந்தன் வருத்தத்தோடு.

"அவள் என்னை அந்தக் கத்தியால் குத்திக் கொன்று விடத்தான் நினைத்தாள். அவள் அப்படிச் செய்வாளென்று எனக்குத் தெரியும். அதற்குத் தகுந்தாற்போல் தான் நானும் அவளிடம் வெகு ஜாக்கிரதையாக நடந்து கொண்டு வருகிறேன். ஒருநாள் அவள் என்னைக் கத்தியால் குத்திக் கொன்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அதற்காக நான் பயப்படப் போவதுமில்லை. என்னுடைய எண்ணமெல்லாம் நம்முடைய மாமாவின் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமென்பதுதான். ஒருநாள் மாதவியின் ரகசியமும் அந்த வேலைக்காரி வள்ளியின் ரகசியமும் அம்பலமாகப் போகிறது. இந்தக் கோவிந்தனுக்கு ஒரு சந்தேகம் விழுந்தால் கடைசி வரையில் அதைச் சோதித்துத் தெரிந்து கொள்ளாமல் விடமாட்டான் தெரிந்துகொள்" என்றான் ஆத்திரத்துடன்.

"கோவிந்தா! ஏதாவது பிதற்றிக் கொண்டு திரியாதே. மாதவி ஒரு வெகுளி. துடிப்பான பெண். முரட்டுச் சுபாவமுள்ளவள். இதைத் தவிர அவளிடம் ஏதோ ரகசியம் இருப்பதாக நீ நினைக்கிறாயே, இதெல்லாம் முட்டாள்தனம்" என்றான் ஆனந்தன்.

"நான் முட்டாளாகவோ பைத்தியக்காரனாகவோ இருக்கத் தயார், ஆனந்தா! என்னைப் பற்றி நீ கவலைப்படாதே! மாதவியின் வாழ்க்கையிலேயே ஒரு அந்தரங்கம் இருப்பதாக நான் நினைப்பது மாத்திரம் பிசகாக முடியாது..." என்றான் கோவிந்தன் தீர்மானமான குரலில்.

"ஆனந்தன் அவனுடைய அபிப்பிராயத்தைப் பெரிதாகக் கருதித் தன் மூளையை உடைத்துக்



ரெபரி :—இந்தக் குஸ்திச் சண்டை உங்கள் இருவருக்கும்தான். நான் வெறும் ரெபரி என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

கொள்ள விரும்பவில்லை. கோவிந்தனுடைய அபிப்ராயமெல்லாம் பைத்தியக்காரத்தனமானது என்றுதான் முடிவு கட்டினுன். அவன் கோவிந்தனுக்கு எவ்விதமான பதிலும் சொல்லாமல் வீட்டை நோக்கி நடந்தான்.

கோவிந்தனின் மனத்தில் எழுந்த சந்தேகங்களெல்லாம் இப்பொழுது பெரிது பிரகாசமடைந்தன. அவன் அன்று காலை பெத்தண்ணன் மூலமாக அறிந்து கொண்டு சில விஷயங்களை மறுபடியும் நினைத்துப் பார்த்தான். கார் விபத்தின் காரணமாகக் காணமற்போன குன்னத்தூர் பட்டக்காரரின் பேத்தியைக் காணமற் போன பன்னிரண்டு மணி நேரத்திற்குப் பிறகுதான் போலீசார் ஒரு நாடோடி ஸ்திரீயிடமிருந்து கைப்பற்றியிருக்கின்றனர். அதற்குப் பின் இரண்டொரு நாட்களுக்கெல்லாம் வள்ளி தன் கூட்டத்தாரை விட்டுவிட்டு வந்து அந்தக் குழந்தையை வளர்ப்பதற்காக வேலை ஒப்புக் கொண்டிருக்கிறுள். அவள் தனக்குப் பிறந்த குழந்தையை அந்த நாடோடிகள் வசமே விட்டுவிட்டு வந்திருக்கிறுள். ஏன் அவள் அப்படி வரவேண்டும்! அது போகட்டும். அந்த நாடோடிகள் வசம் விட்டுவிட்டு வந்த அந்தக் குழந்தையைப் பற்றிய கவலையே அவளுக்கு ஏற்படவில்லையே, அது ஏன்! இன்று அந்தப் பெண் வளர்ந்து பரிச விருந்து வைத்திருக்கிறுர்கள். அதற்குக்கூட அவள் போகவில்லை. உண்மையாகத் தாய் என்றுல் இப்படியிருப்பாளா! அவளுடைய தாயன்பு முழுவதும் மாதவியிடமே இருக்கிறது. மாதவியும் கிட்டத்தட்ட உருவில் வள்ளியைப் போலவே இருக்கிறுள். பட்டக்காரரின் வம்சத்தில் பிறந்த பெண்ணுகவே தோன்றவில்லை. அதுவும் அவள் இன்று அணிந்திருந்த உடையிலிருந்து இந்தச் சந்தேகம் இன்னும் நிச்சயமாகிறது. நாம் நினைப்பது போல் இது உண்மையாக இருந்தால் பதினேழு வருஷங்களுக்குப் பிறகு அவர்கள் இடம் மாறுவதற்கு வசதி உண்டா! இத்தனை நாள் நாடோடிகளிடம் வாழ்ந்த பெண் திடீரென்று பட்டக்காரரின் பேத்தியாகிவிட முடியுமா!" என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான் கோவிந்தன்.

வள்ளியின் சொந்தக் குழந்தை நாடோடிகளின் ராணியாக விளங்கும் தங்கம். உண்மையில் அவள் அழகான பெண்தான். ஆனல் தாயின் ஜாடை துளிக்கூட அவளிடம் இல்லை. பட்டக்காரர் வீட்டில் மாட்டப்பட்டிருக்கும் அவருடைய மருமகளின் புகைப்படத்தின் ஜாடையாக இருக்கிறுள் தங்கம். இவ்வளவு அழகான பெண் வள்ளிக்குப் பிறந்திருக்கும் என்று ஒருவராலும் நம்பவே முடியாது. இது ஏதோ மோசக் கருத்தோடு தான் நடந்திருக்கிறது. ஏதோ ஒரு காரணத்திற்காகத் தான் இந்த நாடோடிகள் திருட்டுத் தனமாக இந்த இரு குழந்தைகளையும் இடம் மாற்றியிருக்கிறுர்கள். இந்த ரகசியம் வள்ளிக்கும், அந்த நாடோடிகளில் சிலருக்கும், கடவுளுக்கும்தான் தெரியும். இந்த ரகசியத்தை மாத்திரம் நான் முயற்சி செய்து வெளியாக்கி விட்டால் அப்புறம் என்னைவிட அதிர்ஷ்டசாலி இந்த உலகில் வேறு ஒருவருமே இருக்க முடியாது. ஒரு நாளைக்கு நான் வள்ளியை மிரட்டி அவளிடமிருந்து இந்த ரகசியத்தை எப்படியாவது வெளிப்படுத்தி விடுகிறேன்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் கோவிந்தன்.

* * *

பரிச விருந்து நடந்ததற்கு மறுநாள் தங்கம் வருத்தத்தோடும் குழப்பத்தோடும் இருந்தாள். இனிமேல் தன்னுடைய சமூகத்தினரால் சரியாக மதிக்கப்பட மாட்டோம் என்று அவள் கருதினுள். முதல் நாள் விருந்து எதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததோ, அந்தக் காரியம் நிறைவேறவில்லையல்லவா! அதனுல் எல்லோருக்குமே அவளிடம் மனவருத்தம் இருக்குமென்று அவள் நினைத்தாள். அவள் தனக்காக ஒரு கணவனைத் தேர்ந்தெடுக்காததால் அவளைச் சேர்ந்தவர்களெல்லாம் அவள் மீது வெறுப்படையாமல் என்ன செய்வார்கள்! இவ்வளவு பணம் செலவு செய்து மறுபடியும் அவர்களால் ஒரு விருந்து ஏற்பாடு செய்ய முடியுமா! பல இடங்களிலும் சிதறியிருக்கும் உறவினர்களும், நண்பர்களும் மறுபடியும் ஒன்று சேருவார்களா! எவரும் அவளிடம் எவ்விதமான வார்த்தைகளும் பேசவில்லை. ஆனல் ஒவ்வொருவர் முகத்திலும் ஒரு மாறுதலிருந்தது. எப்பொழுதும் பார்க்கும் கண்களால் அவர்கள் அப்பொழுது தங்கத்தைப் பார்க்கவில்லை. அவர்கள் கண்களில் ஒரு அலட்சியமும் வெறுப்பும் கலந்திருப்பதைத் தங்கம் நன்கு உணர்ந்தாள். யாருடனாவது ஏதாவது பேசவோமென்றாலும் ஒருவரும் முகங்கொடுத்து அவளோடு பேசக் கூடியவர்களாகத் தெரியவில்லை.

சிங்காரமும் அப்பொழுது மன வருத்தத்தோடுதான் இருந்தான்.





அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"Of all the toilet creams that I have used, I unhesitatingly prefer Oatine Cream as being the pleasantest and most satisfactory for improving the complexion."*

Kanan Devi



# வலியை ஒழியுங்கள்




ஸாரிடன்
'ரோஷ்'

VO 5611 (A)




# பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ்

## கம்பெனி லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிதம்: 1933)

தலைமை ஆபீஸ்: **மதுரை**

சிறந்த சேவை செய்து வருகிறது

## நெருப்பு, கப்பல், மோட்டார், விபத்து

முதலிய சகலவித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள்

**மொத்த ஆஸ்திகள் — ரூ. 87,00,000**

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, நாகபுரி, சென்னை
திருவனந்தபுரம், கோயம்புத்தூர்.

அவனும் எல்லோராலும் புறக்கணிக்கப் பட்டான். அவனைச் சேர்ந்தவர்களெல்லாம் முதல் நாள் சடங்கின் போது அவன் ராணியின் கண் பார்வையில் படாமல் வேண்டுமென்று எங்கோ சென்று விட்டதை எண்ணிக் கோபமடைந்திருந்தனர். பாவம்! அந்தக் கூட்டத்தாரிடையே தங்கத்தை எண்ணிச் சிங்காரமும், சிங்காரத்தை எண்ணித் தங்கமும்தான் பச்சாதாபப்பட வேண்டி யிருந்தது.

ஆகவே, தன்னோடு தங்கமாவது முகங் கொடுத்துப் பேசுவாளோ என்று சிங்காரம் எண்ணியதும், அதேபோலச் சிங்காரமாவது இனிய முகத்தோடு பேசுவானோ என்று தங்கம் எதிர்பார்த்ததும் இயற்கைதானே! சிங்காரம் தங்கம் இருக்கும் இடத்தைத் தேடிக் கொண்டு போனான்.

ஏரிக் கரைக்குச் சமீபமாக உள்ள பசும் புல் தரையில் அவள் தனிமையில் உட்கார்ந்திருப்பதைக் கண்ட சிங்காரம் அவளை நெருங்கினான்.

சிங்காரம் தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் தங்கம் பரபரப்போடும் பயத்தோடும் எழுந்து நின்றாள். சிங்காரத்தின் கரு விழிகளில் சாத்விகமும் இரக்கமும் காணப்பட்டதை அவள் அறிந்தாள். அவளுடைய படபடப்பும் பயமும் சிறிது தணிந்தன. "என்னைக் கண்டு எதற்காக இப்படி பயப்படுகிறாய்! இப்போது இங்கு நான் உன்னைத் தொந்திரவு செய்ய வரவில்லை. என்னைப் பார்த்தாலே அது உனக்கு விளங்கவில்லையா! எல்லோரும் நேற்று எப்படி முடியுமென்று நினைத்தார்கள் என்று எனக்குத் தெரியும். அவர்களுடைய நம்பிக்கையும் நினைப்பும் பாழாய்ப் போச்சு. அவங்க உனக்குத் தகுந்த புருஷன் நான்தானென்றும் எனக்குத் தகுந்த பெண்சாதி நீதானென்றும் நினைச்சு இரண்டு பேரையும் இணைக்கப் பார்த்தாங்க. அவங்க நினைத்ததிலே தவறில்லே. ஆனால் எனக்குத் தெரியும், உன் மனசு அப்படி இல்லே என்று. தங்கம், என் மனசும் அப்படி இல்லே. எது பொருத்தமாயிருந்தாலும் மனசு பொருந்த வேண்டாமா! நீயும் நானும் குழந்தைப் பருவத்திலிருந்தே சினேகமா யிருந்திருக்கிறோம். அப்போதிருந்தே உன் மனசு என் மனசோடு ஒட்டினதாயில்லே என்று எனக்குத் தெரியும்" என்று சொல்லியவாறே சிங்காரம் உட்கார்ந்தான்.

அவளும் அவனுக்குச் சமீபமாக உட்கார்ந்தாள். "ஆமாம், சிங்காரம்! நீயும் நானும் நெடுநாளாகச் சினேகமாகத் தானிருக்கிறோம். உன் மேலே எனக்கு ரொம்பப் பிரியம் உண்டு. ஆனால் நான் உன்னைப் புருஷனுக்கிக் கொள்ள ......" என்று சொல்லியவள் மேலே பேசத் தோன்றாமல் தலை குனிந்து கொண்டாள்.

"...... ஆசைப்படவில்லே, என்பது எனக்குத் தெரியும், தங்கம். இதற்காக நீ கவலைப்படாதே. நானும் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லே. உன்னுடைய எண்ணம் சரியானதாகத்தான் எனக்குப் படுகிறது. உன் மனசு எனக்குத் தெரியும். ஒருநாள் பட்டக்காரர் வீட்டிலிருந்து இரண்டு பையங்க வந்தாங்களே, அவர்களில் ஆனந்தன் என்கிற பையன்கிட்டே உனக்கு ஆசை. இல்லையா!" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சிங்காரம்.

இதைக் கேட்டதும் தங்கம் அவனை வியப்போடு பார்த்தாள். "உனக்கு எப்படித் தெரியும்......!" என்று கேட்டாள்.

சிங்காரம் சிரித்துக் கொண்டே, "எனக்குத் தெரியும். ஏன் தெரியுமா......! நானும் உன்னைப் போலத்தான் இந்த மனசை ஒரு இடத்திலே பறி கொடுத்துவிட்டுத் தவிக்கிறேன். உன் மனசிலே உள்ள ரகசியம் எனக்குத் தெரிஞ்சதாலே என் மனசிலே உள்ளதையும் உன்னிடம் சொல்லுகிறேன். அந்தப் பையங்களோடே பட்டக்காரரின் பேத்தி மாதவின்னு ஒருத்தி வந்தாளே, அவள்தான் என்னை மயக்கிப் பித்தாக்கி விட்டாள். ஆனால் என் கதை உன் கதையைவிட மோசமானது. அவளுக்கும் என்மேலே ஆசை இருக்கிறது. வானத்து நட்சத்திரம் 'வா. வா' என்று கூப்பிட்டாலும் நம்மாலே அதை நெருங்க முடியுமா! இந்த ஊருக்கே சொந்தக்காரரான ஒருவருடைய பேத்தியைப் பற்றி நான் மனசால்கூட நினைக்க முடியுமா! ஆனால் நினைச்சு நினைச்சு உருகிக் கொண்டிருக்கிறேன். நட்சத்திரத்தையும் எட்டிக் கையால் பிடிச்சது போல் கனவு கண்டு கொண்டிருக்கிறேன்......" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டான்.

தங்கம் அவன் முகத்தைப் பரிதாபத்தோடு பார்த்தாள். "ஆனந்தனும் என்மேலே ரொம்ப இச்சைதான் வைத்திருக்காரு. ஆனால் அதனால் என்ன புண்ணியம், சிங்காரம்! அவங்களுக்கெல்லாம் பணம், காசு, வீடு, வாசல், நிலம், நீச்சு, ஊரு, உலகமெல்லாம் உண்டு. பெரிய மனிதர்கள். ஆனால் நாம் நாடோடிகள்தானே! நமக்கு எந்த விதத்தில் அவர்களோடு உறவுகொள்ள அருகதை! இதெல்லாம் பைத்தியக்காரத்தனம்தான். ஆனால் இந்த மனசு ஏனோ கிடந்து போராடுது. இவ்வளவு துரதிர்ஷ்டத்தோடு பிறந்த எனக்கு எதற்காக இந்த உயிரை வைத்துக் கொண்டிருக்க வேணும் என்றுகூடத் தோணுது......!" என்றாள்.

"வீணாகச் சஞ்சலப்பட்டு ஏதாவது செய்துடாதே, தங்கம். நீ அந்த மனிதன் மேலே வைத்த ஆசை ஒருநாளும் வீணாகாது. அவனுக்கு உன்மேலே ஆசை ஏற்பட்டிருக்குன்னா அதைச் சாதாரணமாய் நினைத்துவிடக் கூடாது. நீ வீணாக வருத்தப்படாதே. நிச்சயம் ஒருநாள் அவன் உன்னைக் கல்யாணம் செய்துகொண்டு இந்தக் கூட்டத்தை விட்டு உன்னைப் பிரித்து அழைத்துக் கொண்டு போகப் போகிறான், பார்!" என்றான் திடமான குரலில்.

"அப்படி நடக்கும் என்று என்ன நிச்சயம், சிங்காரம்!" என்று கேட்டாள் தங்கம்.



உபாத்தியாயர் (கணக்கு வகுப்பில் ஒரு சின்னப் பெண்ணுக்குக் கழித்தல் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்):—இதோ பார், உனக்குப் பத்து விரல்கள் இருக்கின்றன. அதில் நான்கு விரல்கள் இல்லை என்று வைத்துக் கொள்வோம்... அப்போது...!

மாணவி:—ஆர்மோனியப் பாடம் நின்று போய் விடும், ஸார்!



"என்ன சார்! நிறை பார்க்கும் கருவியைத் தூக்கிக் கொண்டு கிளம்பி விட்டீர்கள்?"

"என்ன சார், பண்ணுகிறது! புதிசாக வாங்கி வந்தேன். ஏறி நின்றதும் உடைந்து விட்டது. திருப்பிக் கொடுக்கக் கொண்டு போகிறேன்!"

"ஏன் நிச்சயமாக அப்படித்தான் நடக்கப் போகுது. அந்த மனிதனைப் பார்த்தாலே தெரியவில்லையா, அவனைப் பூரணமாக நம்பலாம் என்று! ஆனால் நம்மைச் சேர்ந்தவங்க நமக்குள்ளே இருக்கிற இந்த ரகசியத்தைத் தெரிந்து கொள்ளக் கூடாது. அப்படித் தெரிந்தாலும் அவங்க நம்மை நம் விருப்பப்படி சந்தோஷத்தோடு விட்டு விடும்படி செய்தாகணும். இதைத்தான் நான் உன்னிடம் சொல்வதற்காக வந்தேன். எல்லோரும் இப்போ நம்ப இரண்டு பேர் மேலும் கோபமாயும் வெறுப்பாயும் இருக்காங்க. ஒருபுறம் அவங்க கோபத்தையும் வருத்தத்தையும் சமாதானம் செய்தாப்போலே நடந்துகிட்டு நம்ப காரியத்தையும் சாதிச்சுக்கணும். நானும் நீயும் சேர்ந்து சந்தோஷமா இருக்காப்போலே காட்டிக்கிட்டா எல்லோர் மனத்துக்கும் திருப்தியாயிடும். உன்மீதோ என்மீதோ சந்தேகம் விழாது. நாம் இருவரும் தினமும் சேர்ந்தே நம்முடைய இடத்தை விட்டு வெளியே கிளம்பணும். அப்புறம் தனியாகப் பிரிந்து நான் மாதவியையும் நீ ஆனந்தனையும் சந்திக்கவேணும். நாம் இருவரும் சேர்ந்து போவதைக் கண்டால் எல்லோரும் நாம் தனியாகப் போய் எங்கோ உல்லாசமாய்க் காலத்தைக் கழிக்கப் போகிறோமென்று நினைத்துக் கொள்ளுவாங்க. வேறு எந்தவிதமான சந்தேகமும் கொள்ள மாட்டாங்க. இதில் உனக்குச் சம்மதம்தானே!" என்றான் சிங்காரம்.

"சம்மதம்தான், சிங்காரம்" என்று சொல்லி அவன் முகத்தைப் பார்த்தாள் தங்கம்.

அப்பொழுது அவர்கள் மனத்திலிருந்த இருள் கலைந்து ஒளி ஏற்பட்டதுபோல் இருவருடைய கண்களிலும் ஒரு பிரகாசம் ஏற்பட்டது.

* * *

கோவிந்தன் தன் மனத்தினுல் மாதவி ஒரு கழைக் கூத்தாடியின் பெண்ணாகத் தானிருக்க வேண்டுமென்று தீர்மானித்தான். ஆனால் அவனுக்கு அதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ளத் தகுந்த சந்தர்ப்பமே வாய்க்கவில்லை. வேறு எவ்விதமான ஆதாரமும் கிடைக்கவில்லை. வள்ளியைத் தனியாக சந்தித்துப் பேசச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. ஆனால் என்றாவது ஒருநாள் அவளைத் தனியாகச் சந்தித்து மிரட்டி உண்மையைத் தெரிந்து கொண்டுவிட வேண்டுமென்று அவன் திட்டமிட்டிருந்தான்.

ஆனால் இத்தகைய காரியத்தில் பிரவேசிக்கும்போது தன்னுடைய சொந்த நலனை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது என்று அவன் சிந்திக்கவேயில்லை. அவனுடைய ஆசையெல்லாம் பட்டக்காரரின் சொத்திலேயே இருந்தது. அவன் பட்டக்காரருடைய பேத்தியைக் கல்யாணம் செய்து கொண்டால் தான் அவருடைய சொத்துக்களைச் சுலபமாக அடையலாம். ஆனால் உண்மையில் அவருடைய பேத்தி யாரென்றுதான் அவனுக்கு விளங்கவில்லை. உண்மையாகவே நாடோடிகளின் ராணியாக இருக்கும் தங்கம்தான் பட்டக்காரரின் பேத்தி என்று நிரூபிக்கப்பட்டால் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள அவன் முயற்சிக்க வேண்டும். ஆனால் அதற்கு ஆதாரமில்லாமல் போய் மாதவியே பட்டக்காரரின் பேத்தி என்று நிரூபிக்கப்பட்டு விட்டால் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டிய முயற்சியில் ஈடுபட வேண்டும். ஆனால் மாதவிக்கும் அவனுக்கும் அவ்வளவு பொருத்தம் இல்லை. அதுவும் சில நாட்களாக அவன் மீது அவளுக்கு என்றுமில்லாத வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. அன்று இரவு அவனைக் கத்தியால் குத்திக் கொல்லக்கூட அவள் தயாராயிருந்தாளல்லவா!

ஆனால் அவன் மாதவியிடம், தான் அறிந்து கொண்ட ரகசியத்தைச் சொல்லி மிரட்டி அவளைத் தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி செய்யலாமல்லவா! அப்படிச் செய்தாலும் மாதவியே விரும்பி அவனைக் கல்யாணம் செய்து கொண்டதாகத்தான் உலகத்தினர் நினைப்பர் என்று எண்ணினான். இதை எண்ணும்போது உண்மையாகவே பட்டக்காரரின் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமென்பதை அவன் மறந்து விட்டான். மாதவி தன்னைக் கல்யாணம் செய்து கொண்டு அதனால் பட்டக்காரரின் சொத்து முழுதும் அவனுக்குக் கிடைப்பதாக இருந்தால் எந்த ரகசியத்தையும் அவன் மனத்தோடு வைத்துக் கொள்ளச் சித்தமாய் இருந்தான்.

இதையெல்லாம் நினைக்கும் போது ஏரிக்கரையில் தன்னைக் கீழே தள்ளி அடித்த சிங்காரத்தின் நினைவு அவனுக்கு வந்தது. அவனுடைய கட்டான உடலமைப்பும், தைரியமும், அவனுடைய நினைவுக்கு வந்தன. மாதவி அவன் மீது ஆசை வைத்திருக்கிறாள், அவள் சிங்காரத்தை இரண்டு மூன்று தடவை தனிமையில் சந்தித்திருக்கிறாள், அவர்கள் ஒருவரை ஒருவர் மிகவும் நேசிக்கிறார்கள் என்பதும் அவனுக்குத் தெரியும். சிங்காரத்தின் மீது வைத்த மோகத்தில் அவன் வார்த்தைகளுக்கு இணங்கி மாதவி எத்தகைய துணிகரமான காரியத்தையும் செய்வாள் என்று அவனுக்குப் பட்டது. முதலில் சிங்காரத்தை ஒழித்தால் தான் மாதவியிடம் அவன் நெருங்க முடியும். சிங்காரத்துக்கும் மாதவிக்கும் உள்ள தொடர்பை அறுத்துவிட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. இது பிரமாதமல்ல. தன்னுடைய மாமாவாகிய பட்டக்காரரிடம் சொன்னால் போதும். ஆனால் அவரிடம் இந்த ரகசியத்தைக் கொண்டு போனால் வேறு ஏதாவது விபரீதமாக முடிந்தாலும் முடியலாமல்லவா!

அந்த யோசனை அவனுக்கு அவ்வளவு தரமானதாகப் படவில்லை.

(தொடரும்)

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மூன்று விதமாக வேலை செய்கிறது—பற்களை வெளுப்பாக்கி, ஈறுகளைப் பலப்படுத்தி, சுவாசத்தை இனிதாக்குகிறது — இவை எல்லாம் ஒரே சமயத்தில் தான். அதனால்தான் லக்ஷக்கணக்கான பேர்கள் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையையே தேர்ந்தெடுக்கிறார்கள். மக்ளீன்ஸ் தினமும் இரு தடவை உபயோகியுங்கள்.

"...உங்களது அற்புதமான மக்ளீன்ஸ் பற்பசையை மதிக்கிறேன் என்பதைத் தெரிவிக்கவே நான் எழுதுகிறேன். எனது சிநேகிதரில் பலர் இப்பொழுது இதை உபயோகிக்க ஆரம்பித்திருக்கிறார்கள்."

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மையாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு :-

ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6527, பம்பாய் 26, தபால் பெட்டி 287, கல்கத்தா
தபால் பெட்டி 1270, மதறாஸ்.

MTY. 16. TAM.

# தியாகி யார்?

எஸ். பி. ஹர்ஷன்

"அவள் என்ன இருந்தாலும் பணக்காரி என்பதைக் காட்டி விட்டாள். தான் வந்தால்கூட அது நமக்குக் கௌரவம் கொடுப்பதாக ஆகும் என்பதைக் காண்பிக்கிறுளோ, என்னவோ?" என்ருள் சுசிலா.

"என்னவோ, நாம் கொடுத்து வைத்தது அவ்வளவு தான். அவளைக் குற்றம் சொல்லி என்ன லாபம்?" என்ருன் சுந்தரம். ஆனல், அவன் மனமும் உள்ளூறத் தங்கையின் உதாசினத்தை எண்ணி வருந்தத்தான் செய்தது.

அவன் உள் பக்கம் நுழைந்த போது அடுத்த வீட்டுப் பாட்டி வேருெருத்தியுடன் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. "இருந்திருந்து அவன் குழந்தைக்கு ஆண்டு நிறைவு கொண்டாடுகிருன். ஆனல், அவன் தங்கை சாந்தா பத்து ரூபாயை அனுப்பி விட்டுத் தான் வரமுடியாது என்று கடிதம் எழுதி விட்டாளாமே!"

"அவளுக்கு என்னம்மா பணக்காரி. அண்ணுவா யிருந்தாலும் அவன் ஏழை தானே! அவன் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்தால் கௌரவம் குறைந்து விடாதா?"

"பணக்காரியா? அந்தப் பணமும் கௌரவமும் யாராலே வந்தது என்பதை நினைத்துப் பார்த்தால் தரனே! பார்க்கப் போனுல் அவள் பணக்காரியானதால் தான் சுந்தரம் ஏழையானுன். அவன் அந்தக் காலத்தில் செய்ததை ஒரு தடவை இல்லாவிட்டால் ஒரு தடவை நினைத்துப் பார்க்க வேண்டாமா?"

சுந்தரம் தலையைப் பிடித்துக் கொண்டான். அவர்கள் சொன்னது உண்மைதான். தான் ஏழையானதால் தான் அவள் பணக்காரியாக முடிந்தது என்பதை உணர்ந்தபோது அவன் மனம் இறந்த நாட்களை நோக்கிப் பாய்ந்தன. தன் நினைவற்று உட்கார்ந்திருந்தான்.

***

பதினெட்டு வயதிலேயே அனுதையானுன் சுந்தரம். அவனுக்கு அவன் வயிற்றுப் பாட்டைக் கவனிக்க வேண்டியதுடன் பதின்மூன்று வயதில் ஒரு தங்கையைப் பராமரிக்கும் பொறுப்பும் ஏற்பட்டிருந்தது. நல்ல வேளையாக அவன் தந்தை அவனுக்குக் கொஞ்சம் நிலத்தைக் கொடுத்திருந்தார்.

அவன் அப்போது எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து இருந்தான். மேலே படிக்க வேண்டும் என்ற ஆசை அவனுக்கு நிரம்ப இருந்தது. ஆனல், பொறுப்பை உணர்ந்த அவன் வேலை தேடிப் புறப்பட்டான். அதிர்ஷ்டவசமாக அவனுக்கு வேலையும் கிடைத்தது. நிலத்தின் மூலம் வரும் வருவாயையும், ஊதியத்தையும் வைத்துக் கொண்டு ஒருவாருக ஒப்பேற்றி வந்தான்.

நாட்களின் போக்கில் அவன் தங்கை சாந்தாவுக்குக் கல்யாணம் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் நெருங்கிற்று.

வரன் தேடும் விஷயத்தில் படே படே பேர்வழிகள் எல்லாம் தாளம் போடுவது இயல்பு என்ருல் சுந்தரம் எந்த மூலை? அவன் அலைந்ததுதான் மிஞ்சிற்றே தவிரச் சரியான வரன் எதுவும் கிடைக்கவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் தான் அவன் மிராசுதார் சாம்பசிவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவருக்கு ஒரு மகன் இருப்பதாகவும், நல்ல குணமும் பொறுமையும் கொண்ட பெண்ணுயிருந்தால் ஏழையாக இருந்தாலும், அவளை மருமகளாக ஏற்றுக்கொள்ளச் சாம்பசிவம் தயார் என்றும் அறிந்தான்.

மறுநாளே, தஞ்சைக்குப் புறப்பட்டான் சுந்தரம். சாம்பசிவத்தைப் பார்த்துப் பேசினுன். "பெண் மனதுக்குப் பிடித்திருந்தால் போதும்" என்ருர் சாம்பசிவம். "ஆனல், கல்யாணத்துக்கு எங்கள் கையை விட்டு எதுவும் செலவழிக்கத் தயாராக இல்லை. ஏனென்ருல் பார்ப்பவர்களுக்கு நாங்கள் கதி கெட்டுப் போய்ப் பணம் செலவழித்துப் பெண் எடுத்ததாக இருக்கக் கூடாது அல்லவா? மற்றொன்று, கல்யாணத்தில் எதற்கும் குறைவு இருக்கக் கூடாது. அது சம்பிரதாயப்படி நடந்தாக வேண்டும்" என்ருர் சாம்பசிவம்.

சுந்தரத்துக்கு முதலில் மலைப்பாக இருந்தது. கடைசியில் கூழுக்கு ஆசைப்பட்டால் மீசையை மறந்துவிட வேண்டும். தங்கைக்குப் பணம் படைத்த இடம் வாய்க்கவேண்டும் என்ருல் செலவை லட்சியம் செய்யக் கூடாது என்ற தீர்மானத்துக்கு வந்தான்.

பெண் பார்க்க வந்தார்கள். அதைத் தொடர்ந்து திருமணமும் நடந்தது. எதிர்பார்த்ததற்கு மேல் செலவழிந்து விடவே சுந்தரத்தின் நிலம் முழுவதும் அடமானத்துக்குப் போக நேரிட்டது.

திருமணம் முடிந்து சாந்தா புக்ககம் சென்ருள். ஊரே அவளுடைய அதிர்ஷ்டத்தைப் பாராட்டிப் பேசி வழியனுப்பிற்று.

***

ஆண்டுகள் மறைந்தன.

இதற்குள் அவர்கள் வாழ்க்கையில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. சுந்தரம் ஒரு பெண்ணின் கைப் பிடித்தான். அவன் நிலங்கள் யாவும் மீட்கப்படாமல் மூழ்கிப் போயின. தங்கை சாந்தாவின் மாமியாரும், மாமனுரும் ஒருவர் பின் ஒருவராக இவ்வுலகை விட்டு மறைந்தனர்.



"என்ன ஸார், அப்படி விழுந்து விழுந்து அந்தப் பகுத்தறிவுப் போட்டியில் பரிசு பெற்றவர்களின் ஜாபிதாவைப் படிக்கிறீர்கள்? உங்களுக்கு இந்தப் போட்டியில் ஏதாவது பரிசு விழுந்திருக்கிறதா, என்ன?"
"இல்லை, இல்லை! நான் ஒரு நாவல் எழுதிக் கொண்டிருக்கிறேன்! அதில் கதாநாயகனுக்குப் பெயர் வைக்க வேண்டும். அதற்கு ஏதாவது புதுப் பெயர் கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருக்கிறேன்!"

திருமணத்துக்குப் பிறகு சாந்தா அடியோடு மாறிவிட்டிருந்தாள். அவள் தமையன் வீட்டுக்கு வருவதே இல்லை. கடிதப் போக்குவரத்து கூட அவ்வளவாக இருக்கவில்லை. சுந்தரத்தின் கல்யாணத்தின்போது கணவனை அழைத்துக் கொண்டு வராமல் அவள் மாத்திரம் வந்திருந்தாள். அவளும் இரண்டு நாட்கள் தங்கவில்லை. காலையில் வந்தவள் சாயந்திரமே ஊர் திரும்பிவிட்டாள்.

அவனுக்குக் குழந்தை பிறந்த செய்தியைக் கேட்டபோதும் சாந்தா வரவில்லை. ஒரு ஆண்டின் முடிவில் அவன் ஆண்டு நிறைவைக் கொண்டாடியபோது தான் அவள் பத்து ரூபாய்ப் பணத்தை மட்டும் மணியார்டர் செய்து விட்டுப் பேசாமலிருந்தது.

சுந்தரத்தின் கண்களில் நீர் துளிர்த்தது. "பணம் படைத்து விட்டால் எல்லோருமே அவ்வளவுதான் போலும். சொந்தத் தமையன் கூட வேண்டாதவனாகி விடுகிறான்!" என்று எண்ணி ஏங்கினான்.

மனிதனின் ஆசாபாசங்களைக் காலம் கொஞ்சமாவது லட்சியம் செய்வதில்லை. அதற்கென்று உள்ள நியதியை அது மீறுவதே இல்லை. சுந்தரத்தின் மகன் சந்துருவுக்கு ஐந்து வயது நிறைந்தது. அவனைப் படிக்க வைக்க வேண்டிய அவசியம் நேர்ந்தது. சோதனை போல் இந்தச் சமயத்தில் சுந்தரம் வேலை செய்து வந்த கம்பெனியில் லாபக் குறைவால் ஆள் குறைப்பு ஏற்பட்டுச் சுந்தரம் வீடு திரும்ப நேர்ந்தது. பலவிதங்களிலும் சுந்தரத்தின் கை சளைத்து விட்டது.

ஒருநாள் கமலா "ஏன், சந்துருவைச் சாந்தாவிடம் ஒன்றிரண்டு வருஷங்கள் விட்டு வைத்தால் என்ன?" என்றாள்.

சுந்தரத்துக்கும் மனைவியின் இந்த யோசனை உசிதமாகப் படவே அவன் தன் தங்கைக்கு விரிவான கடிதம் எழுதினான்.

நாட்கள் மறைந்ததுதான் லாபம். சாந்தாவிடமிருந்து கடிதம் எதுவும் கிடைக்கவில்லை. வெறுப்புற்ற நிலையில் சுந்தரம் ஒரு நாள் அவள் ஊருக்குக் கிளம்பினான். கூடப் பிறந்த பாசம், வளர்த்த தோஷம் இரண்டுமாக அவனை உந்தித் தள்ளிற்று.

அவன் தஞ்சைக்குப் போய்ச் சேர்ந்த போது காலை எட்டு மணி இருக்கும். பல் துலக்கக் கூடப் பொறுமையில்லாமல் தங்கையைப் பார்க்கப் போகும் ஆவலோடு பரக்கப் பரக்க ஓடினான் அவன்.

அவனுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு ஏமாற்றத்தைத் தருவதாக இருந்தது.

சாந்தா வாசற்படியில் நின்று கொண்டிருந்தவள் அவன் வருவதைக் கவனித்து விட்டு ஒரு கணம் தயங்கி நின்றாள். ஒரே ஒரு கணம்தான். அடுத்த கணம் அவள் விடுவிடென்று உள்ளே போய் விட்டாள்.

சுந்தரத்துக்கு யோசனையாக இருந்தது. வந்தவனை 'வா' வென்று கூப்பிடாமல் அவ்வளவு வேகமாக உள்ளே போவானேன் என்று நினைத்தான். ஆனால், அவன் அதற்குள் தளர்ந்துவிடவில்லை. ஒருவாறாக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தங்கையின் வீட்டுக்குள் நுழைந்தான். தப்பித் தவறி ஒருவேளை தங்கை சாந்தா தன் கண்ணில் படுவாளோ என்ற அற்ப ஆசையோடு சுற்று முற்றும் நோக்கினான்.

சாந்தாவைக் காணவில்லை. உள்ளே போகலாம் என்றாலோ உள் கதவு தாழ் போட்டு இருக்கிறது. சற்று நேரம் உட்கார்ந்து பார்த்தான். பிறகு தள்ளாடும் நடையோடு வீட்டை விட்டு வெளியேறினான்.

***

இரண்டு மாதங்களுக்குப் பிறகு.

வறுமை, சொந்தத் தங்கையிடம் ஏற்பட்ட அவமானம் எல்லாமாகச் சேர்ந்து சுந்தரத்தைப் படுத்த படுக்கையாக்கி விட்டிருந்தது. வாய் ஓயாமல் "சாந்தா! சாந்தா!" என்று முனகிக் கொண்டிருந்தான் அவன். கமலாவுக்குத் தன் நாத்தனாரைக் கொலைசெய்துவிடலாமா என்று ஆத்திரமாக இருந்தது.

அன்றைக்குச் சுந்தரம் கொஞ்சம் உணர்வோடு இருந்தான். கமலா அவன் பக்கத்தில் அமர்ந்திருந்தாள். வாயிற் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. கமலா எழுந்திருந்து சென்று கதவைத் திறந்தாள்.

சாந்தா நின்று கொண்டிருந்தாள்.

அவளைப் பார்க்கவே கமலாவுக்குப் பிடிக்கவில்லை. கதவை மறுபடியும் சாத்தும் அளவுக்கு அவளுக்கு வெறுப்பு ஏற்பட்டிருந்தது.

ஆனால், இதை எதிர் பார்த்தவள் போல சாந்தா முன் ஜாக்கிரதையாக உள்ளே வந்து விட்டாள். "என்ன மன்னி, அண்ணா சௌக்கியமா?" என்று கேட்டாள்.

"ஏன், கொஞ்ச நஞ்சம் உயிர் இருந்தால் முழுவதையும் போக்கடித்துவிட்டுப் போகலாம் என்று வந்தாயா? வீடு தேடி வந்தவனை விரட்டிவிட்டு அண்ணா, மன்னி உறவு கொண்டாடிக் கொண்டு வருகிறாயா?" என்று சீறினாள் சுசிலா.

சாந்தாவின் கண்களில் நீர் துளித்தது. "மன்னி, உனக்கு எதுவும் தெரியாது. உள்ளே வா. எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். வழி விடு" என்றாள்.

சுசிலா விட்டுக் கொடுக்கவில்லை.

இதற்குள் விவரம் புரிந்துகொண்ட சுந்தரம் வாசலுக்கு வந்தான். சுசிலாவை அதட்டி விட்டுச் சாந்தாவை அன்போடு அணைத்து உள்ளே அழைத்துச் சென்றான்.

உள்ளே நுழைந்த சாந்தா நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தாள். சுந்தரம் ஏதாவது பேசுவான் என்று காத்துக்கிடந்த அவளுக்கு ஏமாற்றமாக இருந்தது. "நீ என் வீட்டில் நுழைந்த வேளை நல்ல வேளை அண்ணா. எனக்கு நல்ல காலம் பிறந்து விட்டது" என்றாள் தழுதழுத்த குரலில்.

சுந்தரம் திகைத்தான். "சொல்லுவதைக் கொஞ்சம் விவரமாகச் சொல்லேன் சாந்தா?" என்றான் மிகுந்த ஆவலுடன்.

சாந்தா சொல்ல ஆரம்பித்தாள் :—

"என்னைப் பார்ப்பதற்காக சாம்பசிவமும், அவர் மனைவியும் வந்தார்கள் அல்லவா? அன்றைக்கே என் மாமியார் என்னைத் தனியாகக் கூப்பிட்டுக் கொஞ்சநேரம் பேசினாள். 'எனக்குச் சொத்து இருப்பதெல்லாம் நிஜம் தான் சாந்தா. ஆனால் முதலில் கொஞ்சம் நீ பொறுமையாக இருக்கவேண்டி இருக்கும்' என்று பீடிகை போட்டாள்.

"என் கணவருக்கு அப்போது முதலாகவே ஒரு நாடகக் காரியுடன் நட்பு இருந்தது. பரம்பரையான பெரிய குடும்பம் சீரழிந்து போய்விடக் கூடாதே என்பதற்காகத் தான் சாம்பசிவம் ஏழையானாலும் மணம் செய்து கொள்ள முன் வந்தது. பெற்றோர்களின் தொந்தரவு பொறுக்க மாட்டாமல் அவர் என்னை மணக்க முன் வந்தார். இந்தத் திருமணத்தால் உன் சங்கடம் கொஞ்சம் குறையும். பொறுமையாக முயன்றால் ஒரு வேளை கணவரையும் வழிக்குக் கொணர்ந்து விடலாம் என்ற துணிச்சலோடு நான் இதற்குச் சம்மதித்தேன்.

"ஆனால் என் முயற்சியெல்லாம் பயனளிக்கவில்லை. இதற்குள் என் மாமனார், மாமியாரும் இறக்கவே அவர் கொட்டம் அதிகமாயிற்று.

"அவர் ஒரு இரவுகூட வீட்டில் தங்குவதே இல்லை. தங்கினாலும் என்னிடம் அன்போடு பேசியது கிடையாது.

"நீங்கள் இதையெல்லாம் அறிந்தால் வருத்தப்படுவீர்களே என்றுதான் நான் உங்களைப் பார்க்கவே விரும்பவில்லை. வீடு தேடி வந்த போதும், மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு கதவைத் தாழ்போட்டுக் கொண்டேன். என் சங்கடத்தை நீங்கள் அறியக் கூடாது என்பதுதான் என் ஆசை" என்று சொல்லி முடித்தாள் சாந்தா.

"சாந்தா, நீதான் உண்மையில் தியாகி. நான் உனக்காக என் சொத்தையே தியாகம் செய்ததாகவும் நீ என்னை உதாசீனம் செய்து விட்டதாகவும் நினைத்து வந்தேன். ஆனால், எனக்காக நீ அருமையான வாழ்க்கையையே அல்லவா தியாகம் செய்துவிட்டாய்?" என்று அங்கலாய்த்தான் சுந்தரம்.

சாந்தா அவனைத் தேற்றினாள். "வருந்த வேண்டாம் அண்ணா, என் கணவர் இப்போது சரிப்பட்டு விட்டார். நாடகக்காரி இறந்து விட்டாள். போன வாரம் வீடு திரும்பிய அவர், தம்மை மன்னித்துவிடச் சொல்லிக் கண்ணீர் விட்டார். தம் அன்பு முழுவதையும் என் மீது சொரிந்தார்" என்றாள்.

சுந்தரம் பதில் பேசவில்லை. "சரிதான் நீ வா அக்கா, ஒரு டம்ளர் காப்பி சாப்பிடு" என்று சொல்லிய வண்ணம் சாந்தாவைச் சுசிலா இழுத்துச் சென்றதைப் பார்த்த போது அவனையும் அறியாமல் சிரித்தான்.

"பெண்கள் எவ்வளவு சுலபத்தில் எதையும் ஏற்றுக்கொண்டு விடுகிறார்கள்! சற்று முன்புதான் அவளை நாய்போல விரட்டினாள். அதற்குள் விழுந்து விழுந்து உபசாரம் செய்கிறாளே!" என்று வியந்தான் அவன்.




"வாருங்கள், ஸார்! உங்களுக்கு இந்த ஹோட்டல் ரொம்பச் சௌகரியமாயிருக்கும். உங்கள் வீட்டில் இருக்கிற மாதிரியே இருக்கும்!"

"அடப் பாவமே, நான் வீட்டிலிருந்து தானே வருகிறேன்! பத்து நாளைக்கு ஒரு மாறுதல் இருக்கட்டுமே என்றுதான் ஹோட்டலுக்கு வந்தேன்! நீங்கள் வீடுமாதிரி இருக்கும் என்று சொல்லுகிறீர்களே!"




"இரண்டு வருடங்களாக எனது முகத்தில் பருக்களும், தடிப்புகளும் நிறைந்து இருந்தன. கைக்குக் கிடைத்த எல்லாவிதமான தைலங்களையும், க்ரீம்களும், களிம்புகளும் உபயோகித்தும் யாதொரு பலனும் சிறிதும் காணாததனால் பெரிதும் கவலையுற்றேன். கடைசியில் அதிர்ஷ்டவசமாக "க்ருஷன்" உபயோகிக்கத்தீர்மானித்தேன். ஆச்சரியம்! ஆறு வாரங்களில் எனது முகம் யாதொரு களங்கமுமின்றி ஆனதோடு இதுவரை ஒருவிதமான பருவோ, புள்ளிகளோ வந்ததில்லை. தினந்தோறும் "க்ருஷன்" உட்கொள்ளும் நான் அது இல்லாமல் ஒரு நாளும் இருக்க மாட்டேன்." —Mrs. J.A.

முகத்திலுள்ள பருக்களையோ அவலட்சணமான புள்ளிகளையோ மறைக்க முயலாதீர்கள். இரத்த அசுத்தியே இவற்றிற்குக் காரணமாதலால் உட்புற சிகிச்சையே இவற்றின் மூல காரணத்தைத் தாக்கும். "க்ருஷன்" இரத்தத்திலுள்ள அசுத்தங்களை வெளியேற்றட்டும்; உடனே சருமத்தின்மேலுள்ள சகலவித களங்கங்களும் அகன்றுவிடும். தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உங்களது இரத்தத்தைச் சுத்தமாய் வைத்திருப்பதோடு சருமத்தை ஆரோக்கியமாயும், தெளிவாயும் வைத்திருக்கிறது.

**"க்ருஷென்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 5

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 44. இடுப்பு வலி முதுகு வலி விலகும்

இடுப்பு வலி முதுகு வலி யுள்ளவர்களுக்குத் திரிகோணாசனம் ஒரு மருந்தாகும். திரிகோணாசனம் செய்பவர்களுக்கு இடுப்பு வலியோ முதுகு வலியோ வராது. இடுப்பு வலி யுள்ளவர்கள் முதலில் திரிகோணாசனத்தை மூன்று அல்லது ஐந்து தடவை செய்ததும் அந்த வலி விலகினாற் போல் தோன்றும். முதுகு வலியும் அம்மாதிரியே.

இந்த ஆசனம் செய்யும்போது முதுகெலும்பு பக்கவாட்டில் சாய்க்கப் படுகிறது. அப்பொழுது முதுகெலும்பின் கீழ்ப் பாகத்தைச் சேர்ந்த நரம்புக் கூட்டங்கள் சுறு சுறுப்படைகின்றன. முதுகெலும்பும் இளமை அடைகிறது. இடுப்பும் இடுப்பைச் சார்ந்த தசைகள், நரம்புகள் எல்லாம் விழிப்படைந்து பலம் பெறுகின்றன. இரத்த ஓட்டம் அவ்விடங்களுக்கு நன்கு கிடைப்பதால், பிராண வாயுவின் பிரயோகமும் நன்கு ஏற்படுகிறது. அதனால், இடுப்பு வலி யிருந்தால் விலகி விடுகிறது. முதுகெலும்பிலுள்ள நரம்புகளும் சுறு சுறுப்படைந்து அங்கும் ரத்தோட்டம் நன்றாய் ஏற்படுவதால் வலி நீங்குகிறது.

அதிக நேரம் உட்கார்ந்து வேலை செய்பவர்கள் [illegible] எழுந்து மூன்று நான்கு தடவை திரிகோணாசனம் செய்தால் உடனே இடுப்பு வலி முதுகு வலி நீங்குவதை அறிவார்கள். காரியாலயங்களில் கூட எழுந்து நின்று செய்யச் சௌகரியப்படாதவர்கள் நாற்காலியில் உட்கார்ந்தவாறே இடுப்பை பக்கங்களில் வளைத்துத் திரிகோணாசனம் போல் செய்தால் இடுப்பு வலி முதுகு வலி மறைவதை அனுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்வார்கள்.

இந்தப் பயிற்சி சாதாரண தேகப் பயிற்சிகளுடன் சேர்ந்ததுதான். இதைச் சாதாரணமாய்ப் பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் சொல்லித் தருவதைப் பார்க்கிறோம். ஏன் நாம் கூட இஷ்டப் பட்டோ, படாமலோ டிரில் மாஸ்டர் கெடு பிடியினால் செய்திருக்கிறோமல்லவா! அப்பொழுதெல்லாம் இதன் மகத்துவம் தெரியாது. இது முதுகெலும்புக்கும் இடுப்பிற்கும் ஏற்ற பயிற்சி. ஆகையினால், யோகாசனங்களுடன் சேர்ந்திருக்கின்றது. அப்படியானால், யோக ஆசனங்களிலிருந்து இதைப் பார்த்து மற்றவர்கள் செய்கின்றார்களா! மற்றப் பயிற்சிகளைப் பார்த்து இதை யோகாசனங்களில் சேர்த்திருக்கிறார்களா! என்பது பிரச்னையே. மற்றப் பயிற்சிகள் எல்லாவற்றையும் விட யோகக் கலை புகட்டும் ஹடயோகமானது மிகப் புராதனமானது. அப்பொழுதே இதைப் பற்றி எழுதி யிருக்கிறார்கள். எனவே நிச்சயமாய் மற்றப் பயிற்சிகளிலிருந்து இதைக் காப்பி அடித்திருக்க மாட்டார்கள். ஆனால் ஆசனப் பயிற்சியிலிருந்து மற்றவர்கள் காப்பி அடித்தார்களோ வென்றால் அதையும் சரி யென்று சொல்ல முடியாது. ஏனெனில், சில தேகப் பயிற்சிகள் யோகாசனங்களில் சிலவற்றைப் போல, சற்று முன்பின் அமைந்திருக்கின்றன. அவைகளும் தேகாரோக்கியத்துக்காகத்தானே ஏற்பட்டவை! இடுப்புக்குப் பயிற்சி வேண்டுமென்று இதைக் கண்டு பிடித்திருக்கலாம். அது திரிகோணாசனம் போல இருக்கிறது! அவ்வளவுதான். ஆகையால் எதுவாயிருந்தாலும், திரிகோணாசனத்தின் மகிமை குறையப் போவதில்லை.

இடுப்பு, முதுகுக்கு மாத்திரம் இந்த ஆசனம் சுகமளிப்பதோடல்லாமல் கால்களுக்கும் அதன் நரம்புகளுக்கும் பயிற்சி ஏற்படச் செய்கிறது. தொடைகள் வலுவடைகின்றன. இத்தனையும்விட முதுகெலும்பின் பக்கங்களில் இடுப்புக்குச் சமீபம் குண்டிக் காய்க்கும் இதனால் நல்ல பயிற்சி யுண்டு. இக் குண்டிக் காய்களைப் பற்றிப் பல முறை ஆங்காங்கே எடுத்துச் சொல்லப் பட்டிருக்கிறது. இவை ரத்தத்திலுள்ள வேண்டாத அசுத்த நீரை வடி கட்டுகிறது. இதன் ஆரோக்கியம் கெட்டால் அசுத்த நீர் சரிவர வடிகட்டப் பெறாமல் மறுபடியும் ரத்தத்திலேயே இருக்கும். அதனால் மட்டும் எண்ணிலடங்கா வியாதிகள் வருகின்றன. அப்பேர்ப்பட்ட வெகு முக்கியமான காரியத்தைச் செய்யும் குண்டிக் காய்களுக்கு நேரடியாய்ப் பயிற்சி கிட்டுகிறது. ஒருவருக்கு இம் மூத்திரக் காய்கள் சரிவர வேலை செய்யா விட்டாலும் இடுப்பு வலி பொறுக்க முடியாது. இப் பயிற்சியினால், குண்டிக்காய்கள் சுறு சுறுப்படைந்து அதன் வேலையைச் செய்யும். அதனால் ரத்தம் சுத்தமடைந்து ஆரோக்கியம் ஏற்படும்.

முழு திரிகோணாசனம் செய்யும்போது முதுகெலும்பின் நரம்புகள் இன்னமும் இழுக்கப் படுகின்றன. அதனால் ஆரோக்கியம், சுறுசுறுப்பு அதிகமாகின்றன. இடுப்பிலுள்ள சதைகள் கரைகின்றன. வயிறும், வயிற்றிலுள்ள உறுப்புக் களும் நன்கு நசுக்கப்படுகின்றன. இதில் அர்த்த மத்ஸ்யேந்திராசனத்தைப் போன்ற பலனும் உண்டு. குண்டிக் காய்களுக்குப் பயிற்சி ஏற்படுவதுடன் அதன்மேல் இருக்கும் அட்ரினல் கோளங்



"எனக்கும் சினிமாவுக்கும் ரொம்ப தூரம், ஸார்!"

"அது என்ன ஸார், அப்படிச் சொல்லுகிறீர்கள்? உங்கள் தெருவுக்குப் பக்கத்துத் தெருவிலேயே எல்லா வசதிகளுடன் ஒரு சினிமாத் தியேட்டர் இருக்கிறது!"

களுக்கும் பயிற்சி உண்டாகிறது. அதன் ரஸம் வேண்டிய அளவு ரத்தத்துடன் கலப்பதால் சுறுசுறுப்புக்குக் கேட்க வேண்டுமா! "இறக்கையில்லையே பறப்பதற்கு" என்று தோன்றும். அவ்வளவு லேசாகவும், அவ்வளவு இன்பமாகவும் இருக்கும். அந்த இன்பத்தை ஆசனங்களைச் செய்து பார்த்து அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். பேச்சாலோ, எழுத்தாலோ அதை விளக்க முயலுவது கடினம்தான்.

இவ்வளவு அற்புதமான யோகாசனக் கலைக்குப் போதிய ஆதரவு இல்லாமல் இருப்பதைக் காண வருந்தாமல் இருக்க முடியவில்லை. இக் கலை, கடல் கடந்து பல நாடுகளுக்குச் சென்று அங்குள்ளவர்கள் இதை ஆராயவும், கடைப் பிடிக்கவும் செய்கின்றனர். அரசாங்கமும் பொதுஜனங்களுக்காக டெலிவிஷன் மூலமாகவும் இவைகளைப் பிரசாரம் செய்கின்றது. இத்தனை நாள் நாம் அந்நிய அரசாங்கத்தின்மேல் குற்றம் சுமத்தி வந்தோம். இப்பொழுது நமது அரசாங்கம் நடைபெறுகின்றது. அதன்மேல் குற்றம் சுமத்தவும் மனம் வரமாட்டேன் என்கிறது.

அரசாங்கம் இதை ஏற்று, நடத்தா விட்டாலும், உள்ளூர் முனிசிபாலிடிகள், கார்ப்பொரேஷன்கள், பஞ்சாயத்து போர்டுகள் போன்றவையாவது எடுத்து நடத்தலாம். இதற்கு உதாரணமாக கோயம்புத்தூர் நகராட்சி மன்றத்தாரை எடுத்துக் கொள்ளலாம். நம் நகர்களைப்போல் அங்கும் பல பூங்காக்கள் இருக்கின்றன. ஆனால் வெறும் மரம், செடி, ரேடியோக்கள் வைப்பதுடன் நின்று விடவில்லை. அங்கு உண்மையில் ஆரோக்கியத்திற்கான சகல முஸ்தீபுகளும் இருக்கின்றன. தேகப் பயிற்சி செய்ய வீட்டில் இடமில்லையே யென்று ஏங்க வேண்டியதில்லை. தேகப் பயிற்சிகள் செய்ய ஏற்ற கருவிகள், துணைகள் இல்லையே என்று சோர்வடைய வேண்டியதில்லை. பூங்காவிற்குச் சென்றால் சகலமும் கிடைக்கின்றன. அங்கு சென்று விட்டால், எந்தப் பயிற்சி செய்ய இஷ்டமோ செய்யலாம். எல்லாம் நம் நாட்டுப் பயிற்சிகளே பெரும்பாலும். மற்றப் பயிற்சிகளும் இருக்கின்றன. கரளக், குஸ்தி, கர்லா, பைடக், தண்டால், பார், டம்பெல்ஸ், ஸ்பிரிங் டெவலப்பர், பாரம் தூக்கல் முதல் யோகாசனங்கள் வரை சகல பயிற்சிகளுக்கும் வசதிகள் இருக்கின்றன. இத்தனையும் செய்யவேண்டிய சாமக்கிரியைகள் எல்லாம் இருக்கின்றன. இவைகளை வைத்து நடத்தக் கட்டிடமும் சௌகரியமாய் இருக்கிறது. இத்தனையும் அந் நகரத்து நகராட்சி மன்றத்தாரால் மான்யமாக வழங்கப்பட்டுள்ளன. இம்மாதிரி ஒன்றல்ல; இரண்டல்ல. பன்னிரண்டு பூங்காக்கள் வைத்து நடத்துகின்றனர். இன்னும் சில அதிகப் படுத்தவும் திட்டமிட்டிருக்கின்றனர். அவ்வப்பகுதியிலுள்ள மக்கள் அவரவர்களுக்கு எது சமீபமாய் இருக்கிறதோ அதற்குச் சென்று அவரவர்களுக்கு வேண்டிய பயிற்சிகளைச் செய்யலாம். இப்படி ஒன்றுசேர்ந்து செய்வதால் ஒருவரைப் பார்த்து ஒருவருக்கு ஊக்கமும் உற்சாகமும் ஏற்படுகின்றன.

இவைகள் எல்லாவற்றிலும் என்ன ஆச்சரியம் என்றால் இவைகளில் ஈடுபடுபவர்களில் பெரும்பாலோர் ஆரோக்கிய ரகசியத்தைப் படித்து, யோகாசனங்களைச் செய்து, அதிலுள்ள பலன்களைக் கண்டு அதை மிகத் தீவிரமாகப் பரப்ப வேண்டுமென்று துடிக்கின்றனர். அதன் நிர்வாகிகள் அத்தனை பேரும் யோகாசனப்பிரியர்கள்.



"என்ன ஸார் நேற்று நடந்த இலக்கிய விழாவிலே, நீங்கள் வெளியூருக்குப் போயிருப்பதாகக் கூறி உங்கள் வாழ்த்துச் செய்தியையும் படித்தார்கள்! ஆனால் கூட்டத்தில் ஒரு மூலையில் உங்களைப் பார்த்தேனே! என்ன சமாசாரம்?"

"அதுவா? நான அப்படி எழுதா விட்டால் என் பெயரை அங்கே விளம்பரப் படுத்துவார்களா?"

"அது சரி. நீங்கள் ஊருக்குப் போகாவிட்டாலும் அங்கே வராமல் வீட்டிலேயே இருக்கப் படாதோ?"

"வீட்டிலே இருந்தால் அவர்கள் என் வாழ்த்துச் செய்தியைப் படிக்கிறார்கள் என்பது எப்படித் தெரியும்?"

ஆசனங்களைச் செய்து கொண்டிருப்பவர்கள். தலைவர்கள், உப தலைவர்கள், பொக்கிஷதார்கள், காரியதரிசிகள் முதல் நிர்வாக அங்கத்தினர்கள் வரை சகலரும் ஆசனம் செய்பவர்கள். அவர்கள் அத்தனை பேரும் அவ்வூர்ப் பிரமுகர்கள் நகராட்சி மன்றத்தில் கவுன்சிலர்களாகவும், மற்றப் பொது நல சேவைகளைச் செய்பவர்களாகவும் இருக்கின்றனர். எனவே, அவர்களுடைய ஆர்வத்தைத் தீர்த்துக் கொள்ள, நகராட்சி மன்றத்தின் சார்பாக, மான்யங்களாக வழங்க ஏற்பாடு செய்து, ஆங்காங்கு இம்மாதிரி பல பூங்காக்களைக் கொண்டு நடத்துகின்றனர். எல்லாப் பயிற்சிகளையும் சொல்லித் தர உபாத்தியாயர்கள் வேறு கௌரவமாக உழைக்கின்றனர். மக்கள் விடிந்தால் இப் பூங்காக்களுக்கு விரைகின்றனர். ஆர்வமுடன் பயிற்சிகள் பல கற்றுத் திரும்புகின்றனர்.

இம்மாதிரி ஒவ்வொரு நகரிலும், ஏற்பட்டு விட்டால், மக்கள் எவ்வளவோ ஆரோக்யமாய் வாழ்வார்கள். "தெருவைச் சுத்தம் செய்கிறேன், குழாய் போடுகிறேன், ரோடு போடுகிறேன்" என்று சொல்லி வோட்டுக் கேட்பவர்களைவிட, "சட்ட சபைகளில் சென்று வானத்தை வில்லாய் வளைக்கிறேன், மணலைக் கயிறாய்த் திரித்து விடுகிறேன்" என்று வோட்டுக் கேட்பவர்களைவிட "மக்கள் ஆரோக்கியமாய், ஆனந்தமாய் நோய் இல்லாமல் வாழப் பாடுபடுவேன், நமது யோகக் கலைகளுக்காகப் பாடுபடுவேன்" என்று சொல்பவர்களாகப் பார்த்து வோட்டுப் போட்டாலாவது கோயம்புத்தூரில் நடப்பதைப்போல எல்லா இடங்களிலும் நடக்குமல்லவா! (தொடரும்)

## மலேரியாவுக்குப் பிறகு விரைவில் குணமடைவதற்கு



உடல் அசௌகரியத்திற்குப் பிறகு நல்ல பசி உண்டாகவும் மிகுந்த உற்சாகத்துடனும் பூரண பொலிவுடனும் விளங்க ஒரு நல்ல டானிக் மிக அவசியமானது. வெகு சீக்கிரம் குணமளிக்கக் கூடியதும் உடலுக்கு நல்ல உறுதியளிக்கக் கூடியதுமான ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) உட்கொள்ளுங்கள்.

எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்



**ANGIER'S**

**EMULSION**

ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) மிருக எண்ணெயின்றியும் கைபடாமலும் தயாரானது. சகல ஜாதியினரும் மதத்தினரும் உபயோகிக்கலாம்.

---

## சரும நோய்களை அலக்ஷியப்படுத்த வேண்டாம்




**சோமல்**

ஆயிண்ட்மெண்டை உபயோகியுங்கள்



படை, பித்தவெடிப்பு, வெட்டுக் காயம், முதலியவற்றை விரைவில் குணமாக்கும் சக்தி வாய்ந்தது

எங்கும் கிடைக்கும்

**தயாரிப்பவர்கள்: பாரத் டிரக் ஹவுஸ், மதுரை.**

சென்னை நகரம், செங்கல்பட், வட ஆற்காடு, தென்னாற்காடு முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :

மெஸர்ஸ். எஸ். அண்டு எஸ். கம்பெனி

செம்புதாஸ் தெரு, மதராஸ் - 1

---

# அவன் வேண்டுகோள்!

**புஷ்யன்**

**ப**ஞ்சாட்சரத்தின் மனைவி பவானி மறைந்து இன்று பதினைந்து தினங்களாகி விட்டன.

மரணம் அவளுடைய உடலைத் தழுவும் முன்னால் அவள் பஞ்சாட்சரத்தினிடம் சில வார்த்தைகள் கூறினாள். அது அவரை அச்சமயம் அப்படியே உலுக்கி எடுத்துவிட்டது. அம்மாதிரியும் இருக்குமோ என்று ஒரு சமயம்கூட கடுகளவேனும் சந்தேகிக்க முடியாதபடி அவள் நடந்து கொண்ட விதத்தை நினைக்கும்போது அவர் வியப்புக் கடலில் ஆழ்ந்தார். இப்படி கண்ணுக்குக் கண்ணாகப் போற்றிய பவானியா இவள் என்ற அதிசயத்தை விட இவ்வளவு அன்பைச் சொரிந்து என்னை வாழ்வித்தவளா இந்தப் பவானி என்றுதான் அவருக்கு பேராச்சரியமாயிருந்தது. 'இவளுடைய உள்ளத்தில் இத்தனை நாள் இது எப்படிப் பாதுகாக்கப்பட்டு வந்தது! பெண்கள் உள்ளத்தை ஆழம் காண முடியாத கடலுக்குச் சமானமாகக் கூறுகிறார்களே, எவ்வளவு உண்மை' என்று வியந்தார்.

இன்றல்ல, நேற்றல்ல; ஒரு வருடம், இரண்டு வருடங்களல்ல; அவர் பவானியை மணந்து பதினைந்து வருடங்கள் ஆகிவிட்டன. பதினைந்து வருடங்களாய் அவளுடன் இல்லறம் நடத்தி வந்திருக்கிறார். இல்லறம் வெகு நல்லறமாகவே நடந்து வந்தது. சண்டை, சச்சரவு ஒன்றும் கிடையாது. கசப்பு என்பதை என்னவென்றே வாழ்க்கையில் தோன்றாதபடி வாழ்க்கை நடந்து வந்திருக்கிறது. அவருடைய பேச்சுக்கு, ஆணைக்கு அவள் எதிர் பேசியதில்லை. அவர் எண்ணத்துக்கு மாறாக ஒன்றும் செய்ததில்லை. அவர் தேவைகளெல்லாம் உடனுக்குடன் பூர்த்தி செய்யப்பட்டன. கடமைகளில் அவளைவிட ஒரு சிறந்த மனைவியை எதிர்பார்க்க முடியாது.

பஞ்சாட்சரம் காரியாலயத்திலிருந்து சோர்ந்து வரும்போது அவள் அவரைச் சிரித்த முகத்துடன் வரவேற்று உபசரித்தாள். அவள் முகத்தைப் பார்த்ததுமே அவருடைய பசி, சோர்வு எல்லாம் பறந்து விடும். அவளை மேலும் பார்த்துக் கொண்டே அவள் அன்புடன் கொடுக்கும் சிற்றுண்டியை ருசி பார்ப்பார்.

பஞ்சாட்சரம் கொஞ்சம் முன் கோபி. அவருக்கு அடிக்கடி ஒன்றும் இல்லாததற்கெல்லாம் கோபம் வந்து விடும். அவர் சோர்ந்து கிடக்கும் சமயம் அவரிடம் யாராவது பேசினால் உடனே அவர் ஹா, ஹா என்று குதிப்பார். ஆனால் அவர் பவானியுடன் அவ்விதம் என்றும் கோபம் கொள்ளும்படி அவள் நடந்து கொண்டதில்லை. பஞ்சாட்சரம் சோர்ந்து போயிருக்கும் சமயங்களில் அவள் ஒரு பெரும் மருந்து ஒன்றை அவருக்கு அளிப்பாள். அதுதான் அவளுடைய வீணாகானம். அதில் அவள் அபாரமான தேர்ச்சி பெற்றிருந்தாள். அவளுடைய தாயார் வீணை கௌரியம்மாள் அப்போதெல்லாம் தமிழ் நாட்டில் பிரசித்தம். அவளுடைய பெண் என்றால் கேட்கவா வேண்டும்! தேவகானமே இந்தப் பூலோகத்துக்கு இறங்கி வந்து விட்டதுபோல் இருக்கும்.

பஞ்சாட்சரத்துக்குப் பவானியின் வீணைமேல் அபார மோகம் என்று கூற வேண்டுமா! நல்ல ரசிகர். அவர் பவானியையும் அவளுடைய தாயாரைப்போல் மேடையில் ஏற்றிவிட வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆனால் ஏனோ தெரியவில்லை, பவானி அதற்கு இசையவில்லை.

பஞ்சாட்சரம் எவ்வளவு கோபத்திலிருந்தாலும், எவ்வளவு சோர்வுடனிருந்தாலும் பவானியின் வீணை யோசையைக் கேட்டதும் அப்படியே உற்சாகம் கொண்டு தலையாட்ட ஆரம்பித்துவிடுவார். அவளுடைய நீண்ட விரல்களில் ராகங்களின் பாவம் அத்தனையையும் அடக்கி வைத்திருந்தாள் என்பது அவர் நம்பிக்கை. அவள் வீணையை மீட்ட மீட்டத் தம் உடலில் உள்ள நரம்பு ஒவ்வொன்றிலும் அந்த வீணையிலிருந்து எழும் நாதம் இன்பமயமாய் ஓடுவதை அவர் உணர்வார்.

அடிக்கடி அவர் பவானியிடம் சொல்வார். "பவானி, உன் வித்தை இந்த நான்கு சுவர்களிடையில் பதுங்கிக் கிடக்கிறதே. இதைப் பரந்த வெளியில் கலக்க விட வேண்டாமா?" என்று.

அதற்குப் பவானி, "எனக்கு என்னவோ அது பிடிக்கவில்லை. என் வீணையின் நாதத்தை நீங்கள் கேட்டு மகிழ்ந்தால் அது ஒன்றே போதும். அதுவே எனக்குப் பேரானந்தம்" என்றாள்.

இப்படி எல்லா விதங்களிலும் பதி சொல் தவறாத சதியாகவும் இருந்து வந்தாள். அது மட்டுமல்ல. அவள் தாய் என்ற ஸ்தானத்தையும் பூரணமாக வகித்தாள். குழந்தைகளிடம் அவள் கொண்டிருந்த வாஞ்சை சொல்லுந் தரமன்று.

ஆனால் இப்படியெல்லாம் பதினைந்து வருடங்களாய் வாழ்க்கையைக் கழித்து விட்டவளுக்கு ஒரு குறை இருந்தது. குறை என்பதைவிட ஒரு ரகசியத்தை வைத்திருந்தாள் என்று கூறலாம். அந்த மாபெரும் ரகசியத்தை வெளியில் ஒரு சிறிதும் தெரியாது இந்தப் பதினைந்து வருட காலமாகக் காப்பாற்றி வந்தாள் என்றால் அது பஞ்சாட்சரத்தினால் நம்ப முடியாததாய் இருந்தது. இதே விஷயத்தை அவரிடம் பதினைந்து வருடங்களுக்கு முன்பே வேறு யாராவது சொல்லியிருந்தால் கூட நம்பியிருக்க மாட்டார். அவர் மட்டுமல்ல; வேறு யாருமே நம்பியிருக்க மாட்டார்கள். அப்படியிருக்கும்போது இப்போது அதை நம்புவது என்றால் கடினமானதுதானே! ஆனால் பவானியே தன் வாயால் அந்த ரகசியத்தை உடைத்துச் சொன்ன பிறகு அதை நம்பாமல் எப்படியிருக்க முடியும்!

அவள் உள்ளத்தின் அடிவாரத்தில் இத்தனை பெரிய ரகசியத்தை எப்படி இத்தனை காலம் காப்பாற்றி வெளியில் சர்வ சாதாரணமாக நடந்து கொண்டாள் என்பது நம்ப முடியாததுதான்.

மரணப் படுக்கை ஒரு அதிசயமான ஸ்தலம். மிகச் சிறந்த இடம். எத்தனை பெரிய ரகசியங்களையும் அந்த மரணப் படுக்கை வெளிப்படுத்தி விடுகிறது. மரண தேவதையை எதிர் கொண்டழைக்கும் ஆத்மா தன்னுடன் பூலோகத்தின் எந்த ரகசியத்தையும் கொண்டு போகப் பிரியப்படுவதில்லை. தான் விட்டுப் போகும் இந்தப் பூலோகத்தைக் கண்டு சிறிதும் பயப்படுவதில்லை. உண்மையை வெளிக்கொணர்ந்து விடுகிறது. பவானி மட்டும் இதற்கு விலக்காக முடியுமா!

**ப**வானி உடம்பு சௌக்கியமில்லாமல் படுத்திருந்தாள். அவளுக்கு அவள் மூத்த பெண் லீலா தான் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். அவ

ளுக்குப் பதிமூன்று வயது. அவளுக்குப் பிறகு இரண்டு பிள்ளைகளும் கடைசியாக ஐந்து வயதில் ஒரு பெண்ணும் இருக்கிறார்கள்.

பஞ்சாட்சரம் ஆபீஸிலிருந்து சாயங்கிரம் வந்ததும் பவானியிடம் போய் உடம்பைப்பற்றி விசாரிப்பார். அவரைவிட அவளைப்பற்றிக் கவலைப் பட்டவர் வேறு யார் இருக்க முடியும்! இரவெல்லாம் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து விழித்துக்கொண் டிருப்பார். இரவு தன்னை யறியாமல் கண்கள் மூடி விடும். அப்போது பவானிக்குத் தண்ணீர் வேண்டுமென்றால் அவள் கணவனை எழுப்பாமல் கட்டிலில் இருந்து இறங்கிச் செல்ல முயலுவாள். ஆனால் கட்டிலின் சிறு அசைவையும் உணர்ந்து எழுந்து விடுவார் பஞ்சாட்சரம். "பவானி, என்னை எழுப்புவதற்கென்ன! நீ இப்படி உடம்பை அலட்டிக் கொண்டால் எப்படி!" என்று அன்போடு கடிந்து கொள்வார்.

அன்று அவர் காரியாலயத்துக்குப் போகவில்லை. பவானியின் தேக நிலை கவலைக்கிடமா யிருந்தது. அவர் அவளருகிலேயே உட்கார்ந்திருந்தார். சுற்றுக் காரியங்களை லீலா செய்து வந்தாள்.

"லீலா, கஞ்சி போட்டு விட்டாயா! அதைச் சீக்கிரம் கொண்டு வா!" என்றார் பஞ்சாட்சரம்.

லீலா கஞ்சியைக் கொண்டு வந்தாள். அவர் அதை வாங்கிப் பவானியின் வாயில் மெதுவாக ஊற்றினார். அவருடைய இடதுகை அவளுடைய தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தது.

கஞ்சியை மெதுவாகப் பருகிக் கொண்டிருந்த பவானியின் கண்கள் பஞ்சாட்சரத்தினுடைய முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தன. பஞ்சாட்சரத்தினுடைய கண்களில் கவலை தேங்கிக் கிடந்தது. மனத்தில் பலவிதமான எண்ணங்கள் சிதறிக் கிடந்தன. பவானியைப் பிரிந்துவிட நேருமோ என்ற பீதி அவர் உள்ளத்தில் புகுந்து விட்டது. அதை அவர் உதறி எறிய வேண்டும் என்று எவ்வளவு நினைத்தும் பாம்பு போல் அவருடைய மனத்தை வளைத்துக் கொண் டிருந்தது. பவானியை அவர் இழந்து விட்டால் இந்த உலகமே சூன்ய மயமாய் போய் விடுமோ என்று பயந்தார். இந்தப் பதினைந்து வருடங்களாக உயிர்த் துணையாக இருந்த பவானியை இழப்பது லேசான காரியமா!

பவானி அவரையே பார்த்துக்கொண் டிருந்தாள். இருவருடைய கண்களும் சந்தித்துக் கொண்டிருந்தன வெகு நேரமாக. அவர்கள் புதுத் தம்பதிகளா என்ன! நேருக்கு நேர் சந்தித்துக் கொள்ள வெட்கப்படுவதற்கு! பவானியின் பார்வையில் எவ்விதமான ஆசாபாசங்களும் தென்படவில்லை. அதில் விரக்தி, அலட்சியம்தான் தென்பட்டன. கணவனையே பார்த்துக்கொண் டிருந்தவள் திடீரெனப் புன்முறுவல் பூத்தாள். அவரைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு பஞ்சாட்சரத்தை உலுக்கிப் போட்டது.

"என்ன பவானி, ஏன் அப்படிச் சிரிக்கிறாய்! ஏதாவது பைத்தியமா என்ன!" என்று கேட்டார் கலவரத்துடன்.

சட்டென்று சிரிப்பை நிறுத்தினாள். அப்படியே அவரை விழுங்கி விடுவதுபோல் கண்கொட்டாமல் விழித்துப் பார்த்தாள். பார்த்துக் கொண்டேயிருந்தபோது அவள் கண்களின் கீழ் இமைகளில் இரண்டு சொட்டுக் கண்ணீர் தேங்கியது. அப்போது இருட்டும் சமயம். லீலா விளக்கை ஏற்றிக் கட்டில் அருகில் வைத்தாள். அந்த விளக்கொளியில் அந்த இரு சொட்டுக் கண்ணீரும் மாசற்ற வைரம் போல் மின்னியது. அதில் ஒரு துளிக் கண்ணீர் மெதுவாக வெளுத்துப் போன கன்னத்தின் வழியாக வழிந்து செல்ல ஆரம்பித்தது.

பஞ்சாட்சரம் ஒன்றும் தோன்றாமல் திக்பிரமை பிடித்துப் போய் உட்கார்ந்து அந்தக் கண்ணீர்த் துளியின் அசைவையே பார்த்துக்கொண் டிருந்தார். அந்தக் கண்ணீர்த் துளி அவருடைய மனக் கண்ணாடியை வைரம் போல் அறுப்பதாக அவருக்குப் பட்டது. உள்ளம் பரம வேதனை அடைந்து கொண்டிருந்தது. பவானி புடவைத் தலைப்பை எடுத்து வாயில் அழுத்திக் கொண்டு திடீரென்று விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். கண்களிலிருந்து கண்ணீர் அருவிபோல் பெருகிக் கொண்டிருந்தது.



பஞ்சாட்சரம் பதறிப் போனார். "பவானி, ஏன் இப்படி அழுகிறாய்! சாயங்கால நேரத்தில், விளக்கு வைக்கும் நேரத்தில் இப்படி அழலாமா! ஏன்! உனக்கு என்ன கவலை! கவலைப்படாதே உனக்கு ஒரு அபாயமுமில்லை. பிழைத்து விடுவாய். டாக்டர் கூட நிடமாய்ச் சொன்னார்" என்று அவளைத் தேற்ற முயற்சித்தார்.

பவானி மேலும் விம்மிக் கொண்டிருந்தாள். அவள் மனத்தில் ஏதோ வேதனை திடீரென்று புறப்பட்டிருந்தது. அவளுடைய உள்ளம் அந்த ரகசியத்தை வெளியிட வேண்டு மென்று துடித்தது. அதைப்பற்றி இறுதியாக நினைத்தபோது அவள் உள்ளம் கடலைப் போல் கொந்தளித்தது.

பஞ்சாட்சரம் தான் போட்டுக் கொண்டிருந்த துண்டினால் அவள் கன்னங்களையும், கண்களையும் துடைத்தார். "பவானி, அழாதே. இவ்வளவு வயதான, விவேகியான நீ எப்படி அழலாமா!" என்று அன்புடன் ஆறுதல் கூறினார்.

பவானி அவரை மறுபடியும் பார்த்தாள். அவள் கண்களுக்கு முன்பிருந்த சக்தி இப்போது இல்லை. அவள் உதடுகள் துடித்தன ஏதோ சொல்வதற்கு. ஆனால் வார்த்தைகள் வெளியில் வராமல் உள்ளுக்குள்ளே பேசிக் கொண்டாள்.

பஞ்சாட்சரத்தின் கையைப் பிடித்துக் கொண்டாள். அதைத் தன் மிருதுவான கைகளினால் தடவினாள். "உங்களிடம் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன்" என்றாள் மெதுவாக.

"சொல் பவானி. ஒன்றும் தயங்காதே" என்று அன்புடன் சொன்னார் பஞ்சாட்சரம்.

கூடத்தில் அவளுடைய இரண்டாவது பெண் சந்தியா பாடங்களைப் படித்துக் கொண்டிருந்தாள். கடைசிப் பையன் ரவி பாடப் புத்தகம் ஒன்றை வைத்துக் கொண்டு பொம்மை பார்த்துக் கொண்டிருந்தான். லீலா சமையல் செய்து கொண்டிருந்தாள். அவளுக்குத்தான் ஓய்வே இல்லை. பவானி சந்தியாவையும், ரவியையும் உற்றுப் பார்த்தவாறு ஒரு சில நிமிஷங்கள் இருந்தாள். பிறகு மெதுவாக, "என்னைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்" என்று கேட்டாள் பஞ்சாட்சரத்திடம்.

பஞ்சாட்சரம் புரிந்து கொண்டார், அவளுடைய மனத்தில் என்ன இருக்கிறதென்று. அவள் ஒளி இன்னும் சிறிது நேரத்தில் மறைந்து விடப் போகிறது. போவதற்கு முன் தன் ஆசைக் கணவன் வாயால் புகழுரையைக் கேட்க அவள் ஆவல் கொண்டிருக்கிறாள் என்று நினைத்தார்.

"இதென்ன அசட்டுக் கேள்வி பவானி. உன்னைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்று உனக்குத் தெரியவில்லையா! நீ இல்லா விட்டால் எனக்கு இந்த உலகமே பாலைவனமாகத்தான் இருக்கும். உன்னைப் போன்ற உத்தம மனைவியை நான் அடைந்தது பெரும் பாக்கியம். எல்லோருக்கும் இப்பாக்கியம் கிடைக்காது. நான் இத்தனை காலம் சுகமாக வாழ்ந்தேன் என்றால் அது உன்னால்தான். உன் இனிய சொற்களாலும், வீணாகானத்திறனும், அமுத கீதத்தாலும், புன் சிரிப்பாலும், பக்தி சிரத்தை குறையாத பணிவிடைகளாலும் என்னைச் சுவர்க்க லோகத்துக்கே இழுத்துச் சென்றாய். உன்னருகிலேயே எப்போதும் இருப்பது போன்ற நிலையைவிட பரம திருப்தியை யளிப்பது வேறு ஒன்றும் கிடையாது" என்று கூறினார்.

அவைகளைக் கேட்கக் கேட்கப் பவானியின் உள்ளத்தில் பெரும் வேதனை உண்டாகியது. அவர் புகழ்ச்சிகளைத் தாங்க முடியாமல் தத்தளித்தாள். அவர் சொல்லி முடித்ததும் அவள் அவரைக் கூர்ந்து நோக்கிப் பெருமூச்சு விட்டாள். திடீரென்று, "என்னை மன்னிப்பீர்களா!" என்று கேட்டுவிட்டு முகத்தை மூடிக் கொண்டு குழந்தையைப் போல் விம்மி அழ ஆரம்பித்தாள்.



பஞ்சாட்சரம் பதறிப் போனார். "என்ன பவானி, என்ன!" என்று கேட்டவாறு அவளுடைய முகத்திலிருந்து கைகளை எடுத்தார்.

பவானி கூறினாள்: "இவ்வளவு என்னைத் தாங்கள் புகழ்கிறீர்களே, அதைக் கேட்கக் கேட்க என் இதயம் துயரத்தின் எல்லையை எட்டுகிறது. காரணம் உங்களைப் பிரிகிறேன் என்பதற்காக அல்ல. ஆனால் நான் அந்தப் புகழ்ச்சி மொழிகளுக்கு அருகதையற்றவள் என்பதற்காகத்தான். ஏன் இப்படிப் பேசுகிறேன் என்று நினைக்கிறீர்கள். ஒன்றும் புரியவில்லையே. எனக்கு ஏதேனும் சித்த சுவாதீனமோ என்று எண்ணுகிறீர்கள். நான் உண்மையைச் சொல்லப் போகிறேன். கவனமாய்க் கேளுங்கள்.

"உங்கள் சொல்கடவா மனைவி, உத்தமி என்றெல்லாம் என்னைப் போற்றினீர்கள். அதையெல்லாம் உண்மையாய் அனுபவித்து மகிழ முடியவில்லையே என்று வருத்தமாயிருக்கிறது.

"உண்மையைச் சொல்கிறேன். இத்தனை நாள், பதினைந்து வருடங்களாக நான் இந்த விஷயத்தை ரகசியமாய்க் காப்பாற்றி வந்து விட்டேன். ஆனால் இன்று அதைக் காப்பாற்ற முடியவில்லை. அதைச் சொல்லிவிட வேண்டுமென்று என் மனம் அவா கொள்கிறது. அதை அறிந்து நீங்கள் என்னைச் சாகஸக்காரி என்று எண்ணிக் கொள்வீர்களோ என்று கூட இப்பொழுது என் மனம் யோசிக்கவில்லை.

"என்னைத் தாங்கள் எவ்வித சந்தேகமும் கொள்ளாமல்தான் இத்தனை வருடங்களும் கடந்து விட்டன. நானும் அப்படியேதான் நடந்து கொண்டேன்.

"என்னுடைய அத்தையின் பிள்ளை ராகவன். அவனிடம் என் அன்பு முழுவதையும் சின்னஞ் சிறு வயது முதலே செலுத்தினேன். அவன் வீணை வாசிப்புக்காக என்னிடம் வந்தவன்தான். நான் வீணை வாசிக்க வாசிக்க அவன் ஆனந்தப் பரவசனாகி விடுவான். என் விரல்களின் ஓட்டத்தையே கண் கொட்டாமல் பார்ப்பான். அதனின்றும் எழும்பும் ஜங்காரத்வனியில் லயமாகி விடுவான். இப்படி என் வீணையின்மேல் கொண்டிருந்த மோகம் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து அது என்மேல் அளவில்லாக் காதலாக மாறிவிட்டது. என்னுடைய பரம ரஸிகனான ராகவனின் அபார ஞானத்தையும், முக விலாசத்தின் காந்தியையும் கண்டு நானும் அவனுடைய மோகத்தில் மூழ்கினேன் என்பதில் ஆச்சரியமில்லை.

"என் விரல்களையே கவனித்து வந்தவன், இப்போது காதின் கூர்மையால் சங்கீதத்தை அனுபவித்துக் கொண்டு, கண்களின் தீட்சண்யத்தால் என்னை விழுங்கி விடுபவன் போல் இமையாது பார்ப்பான். அவன் சிறிதும் அஞ்சமாட்டான். என் கண்கள் அடிக்கடி அவனுடைய கண்களுடன் சந்தித்து விட்டு நாணத்தால் தலை குனியும். சில சமயம் நான் அவனை, 'என்ன அத்தான், என்னை அப்படியே விழுங்கி விடுவது போலப் பார்க்கிறாய்!' என்று கேட்டிருக்கிறேன்.



மனைவி:— காலையில் வாசலில்வாங்கினேன், சாத்துக்குடிப்பழம்! டஜன் பன்னிரண்டணா! எப்படியிருக்கிறதென்று ஒரு சுளை சாப்பிட்டுத்தான் பாருங்களேன்!

கணவன் (பழத்தைத் தின்று கொண்டே):— பேஷாயிருக்கிறது. கொஞ்சம் மிளகாய்ப் பொடியும் உப்பும் மாத்திரம் கொண்டு வா! பழத்தைத் தொட்டுக் கொண்டு தின்றால் நன்றாயிருக்கும்!

"அவன் சிறிதுகூட நிறுத்திடாமல் 'பவானி நீ வீணை வாசிக்கும்போது உன் முகம் முன்னைவிட எத்தனை அழகாய் விளங்குகிறது தெரியுமா! அதை விட்டு என் கண்களை ஒரு கணம்கூட அகற்ற முடியவில்லை' என்பான்.

"என் உள்ளுக்குள் பெருமிதம் துள்ளும். 'இப்படி நீ கேலி செய்தால் நான் இனி வீணை வாசிக்க மாட்டேன்' என்று கூறுவேன் பொய்க் கோபத்துடன். ஆனால் என் விரல்கள் வீணைத் தந்திகளை மீட்டுவதை நிறுத்தாது.

"இருவரும் ஒருவரை யொருவர் மனமார நேசித்தோம். எதிர்கால இன்ப வாழ்வைப்பற்றி எவ்வளவோ கோட்டைகள் கட்டினோம். அந்தக் கற்பனைக் கோட்டைகள் கூடிய சீக்கிரம் உண்மையாக மாறப்போகும் நாட்கள் வெகு அருகிலேயே இருந்தது என்று எண்ணி அகமகிழ்ந்தோம். என் தாயாரும் ராகவனின் பத்தினியாக என்னைச் செய்துவிட ஆசைப்பட்டாள்.

"ஆனால் அன்று அத்தை பரபரப்புடன் எங்கள் வீட்டுக்கு ஓடிவந்து என் தாயாரிடம்," 'கௌரி வந்து பாரேன். என்னமோ சாயந்திரம் வந்தவன் அப்படியே மயங்கிக் கிடக்கிறான்' என்று அலறித் தவித்தாள். என் தாயும், நானும் ஓடினோம். அங்கு போய்ப் பார்த்ததும் ராகவன் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தான். 'ராகவா! ராகவா!' என்று அலறினேன்.

"அவன் என் தலையைத் தன் மார்பில் சாய்த்தவாறு சிறிது நேரம் மௌனமாயிருந்தான். உடனே ஆவேசத்துடன், 'பவானி, நான் போகிறேன். என்பேரில் உனக்கிருந்த காதலை அறிவேன். ஆனால் நான் இனி இவ்வுலகத்தில் வாழ மாட்டேன். நீ ஒரு நல்ல கணவனை அடைந்து சுகமாக வாழ்' என்றான். அவ்வளவுதான். தீபம் அணைந்து விட்டது.

"சிறிது காலம் நான் சோகத்தின் அடியில் போட்டு மிதிக்கப்பட்டுக் கிடந்தேன். என் தாயார் எனக்கு விவாகம் செய்ய நிச்சயித்தாள். நான் முதலில் மறுத்தேன். ஆனால் அன்று ராகவன் சொன்ன மொழிகள் — அவனுடைய கடைசி வேண்டுகோள் — என் காதில் ஒலித்தது.

"ராகவன் என் அன்பன். அவனுடைய விருப்பத்தைப் புறக்கணிக்க முடியாது. அவனுடைய கட்டளைக்கு என் விருப்பு, வெறுப்புக்களை யோசிக்காமல் — என்னை அர்ப்பணித்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டேன்.

"அப்புறம்தான் உங்களை மணந்தேன்.

"எனக்கு இந்த வீட்டில் எவ்விதக் குறையும் இருக்கவில்லை. கிடைத்தற்கரிய பொக்கிஷம் போன்ற தங்களைக் கணவனாகப் பெற்றேன்.

"ஆனால் நான் தங்களுக்குப் பணிவிடை செய்ததெல்லாம், தங்களை இன்பத்தில் ஆழ்த்தியதெல்லாம் என் ராகவனுக்காக. என் இருதயத்தின் அடிவாரத்தில் ராகவனுடைய உருவம்தான் செதுக்கப் பட்டிருக்கிறது.

"நான் உங்களை என்றும் வெறுத்ததில்லை. புறக்கணித்ததில்லை. உங்களுடைய ஆனந்தமே என்னுடைய ஆனந்தமாய் இருந்தது. இவ்வளவுக்கும் காரணம், நான் உங்கள் உண்மை ரூபத்தைக் காணவில்லை ராகவனின் உருவம்தான் என் கண்முன் தென்பட்டது. அவனுடைய ஆக்கினை என்னைத் தங்களுக்கு அர்ப்பணம் செய்து விட்டது."

பவானி சிறிது நிறுத்தினாள். பிறகு "ஆம், நான் உங்களை என் ராகவனாக எண்ணிக் கொண்டுதான், என் அன்பு, வாழ்வு முழுதும் உங்களுக்கு அர்ப்பணம் செய்து விட்டேன்" என்றாள்.

பஞ்சாட்சரம் இதைக் கேட்டு அப்படியே வியப்பில் ஆழ்ந்து விட்டார். மனத்தில் சொல்லொணா உணர்ச்சிகள் நிரம்பிக் கிடந்தன.

"என்னை மன்னித்து விட்டேன் என்று சொல்லுங்கள். நான் உங்களை நீங்களாக எண்ணி நேசிக்காமல், ராகவனாக அவனுடைய கட்டளைக்காக நேசித்தேன். நான் செய்ததெல்லாம் உங்களுக்காகச் செய்யாமல், ராகவனுக்குச் செய்வதாக எண்ணிச் செய்தேன். உங்களை நான் ஏமாற்றி விட்டேன். நான் மகாபாவி" என்றாள்.

பஞ்சாட்சரம் திகைத்தார். "பவானி கவலைப் படாதே, உன்மேல் ஒரு தப்பும் இல்லை. எனக்குக் கொஞ்சமும் கவலையோ, கோபமோ ஒன்றும் கிடையாது. இதில் மன்னிப்புக்கு என்ன இருக்கிறது. நீ என்னை ஆனந்தத்தில் ஆழ்த்தியதை, என் பத்தினியாக இருந்ததை எப்படி மறுக்க முடியும். ராகவனுடைய கட்டளையை மறுக்காமல் அவன் வாக்குப்படி நடந்துகொண்ட நீதான் உத்தம பத்தினி" என்றார்.

"நீங்கள் உத்தமமான புருஷர் உங்களை விட்டுப் போகிறேன்" என்றாள் பவானி. அத்துடன் அவளுடைய ஆவி பிரிந்தது.

இன்று பதினைந்து நாட்களாகி விட்டன.

"அப்பா, சாப்பிட வரவில்லையா!" என்று லீலா கூப்பிட்டாள்.

"இதோ வந்துவிட்டேன் அம்மா" என்று கூறி எழுந்து சென்றார் பஞ்சாட்சரம், அவர் மனைவி பவானியின் நினைவிலிருந்து விடுபட்டு.

அவர் பவானியை மறக்க எவ்வளவோ முயன்றும் அந்த வீட்டில் இருந்த ஒவ்வொரு சாமான்களும் அவருக்குப் பவானியை நினைவூட்டின. அவருடைய எல்லா காரியங்களிலும்கூட பவானியைக் கண்டார். தம் குழந்தைகளும் அவருக்குப் பவானியை நினைவூட்டின.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

அவளுடைய
அழகான பற்களை
ஒரு காலத்தில்
எல்லோரும்
போற்றிவந்தார்கள்

...ஆனால் இப்பொழுது
அவளுக்கு



# சிரிக்கவே அச்சமாயிருக்கிறது!

ஈறுகளை அசட்டைசெய்தால் பேராபத்து ஏற்படலாம். இன்று உங்கள் பற்கள் எவ்வளவு கவர்ச்சியுடையதாகவும், ஆரோக்கியமாகவும் இருந்தாலும் நாளடைவில் ஈறுவியாதிகள் அவைகளை அழித்துவிடும். ஆரோக்கியமான பற்களை ஆரோக்கியமான ஈறுகளில் இருக்கச்செய்ய ஒரு வழிதான் உண்டு—அதுதான் தினமும் எஸ். ஆர். டூத் பேஸ்ட் உபயோகிப்பது. உலகெங்கும் பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளை சிகிச்சைசெய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸிநோலியேட்* இந்த டூத் பேஸ்ட் ஒன்றில்தான் இருக்கிறது. எஸ். ஆர். டூத் பேஸ்ட் உங்களுக்கு இரட்டிப்பு பாதுகாப்பளிக்கிறது—உறுதியுள்ள ஆரோக்யமான ஈறுகளில் பற்களை ஒழுங்காகவும் வெண்மையாகவும் இருக்கச்செய்கிறது. உங்களுடையவும் உங்கள் குடும்பத்தினருடையவும் க்ஷேமத்தைக்கோரி இன்றே எஸ். ஆர். டூத் பேஸ்ட் உபயோகிக்க ஆரம்பியுங்கள்



**எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகித்து உங்கள் சிரிப்பை கவர்ச்சியுடையதாகச்செய்யுங்கள்**




**பெரிய சைஸில் இப்பொழுது கிடைக்கிறது**

 ஸோடியம் ரிஸிநோலியேட் பாக்டீரியாவை எதிர்ப்பதோடு பாக்டீரியாவினால் ஏற்படும் விஷத்தீண்டலைத் தடுக்கும் சக்தியையும் அளிக்கிறது.

---

டீ. அண்டு டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை GSR. 94-50 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*